# *Arvind*



**QUALITY FABRICS**

•SANFORIZED•
REGISTERED TRADE MARK
of CLUETT PEABODY & CO. INC., U.S.A.

மர்ஸிரைஸ்ட் சான்பொரைஸ்ட்
வெள்ளை பாப்ளின்
**கோல்ட் டிரிங்**

மர்ஸிரைஸ்ட் சான்பொரைஸ்ட்
கலர் பாப்ளின் ப்ளூபெர்ட்

மர்ஸிரைஸ்ட் கெஸ்
**வேஷ்டிகள்**
**ராணி ஸ்பெஷல்**

மர்ஸிரைஸ்ட்
**வேஷ்டிகள்**
**ராஜா ஸ்பெஷல், ப்ளாட்டினம், காம்ராஜ்**




அரவிந்த் மில்ஸ் லிட். ஆமதாபாத்-2

M.K.-1-60

**REGISTERED USER OF THE TRADE MARK 'SANFORIZED'**

# கல்கி பொருளடக்கம்

சார்வரி, பங்குனி 13 ✲ மார்ச் 26, 1961



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.




சிகரெட் உற்பத்திக்கான ஆள்பலம், நிதி, பொருள் நிறைவு ஆகிய எவ்வளவோ வசதிகள் நம் நாட்டுக்கு உள்ளன. எனினும் பாரதத்திலே, சிகரெட்டுத் தொழில் தனக்குரிய உயர்நிலையை இன்னும் எய்த முடியவில்லையென்றால், அது இந்திய மூலதனம் சுணங்கிப்போயிருக்கிறது என்பதனாலோ, அல்லது தேர்ச்சிவாய்ந்த தொழிலினம் இல்லாமையாலோ அல்ல. ஆனால் இந்தியாவில் வாணிபக் கூட்டுறவு அமைந்த அந்நியர்களின் ஏகபோக உரிமையாட்சியினால்தான்.

## புகையிலையின் வரலாறு... 9.

Panama

20

CIGARETTES



பம்பாய்—57.

# பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

Greens' Advtg.

GT 709 TM



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 34

# தென் ஆப்பிரிக்காவின் பிடிவாதம்

காமன்வெல்த் குழுவிலிருந்து தென் ஆப்பிரிக்கா கடைசியில் தானாகவே பிரிந்து போவதெனத் தீர்மானித்து விட்டது.

இந்த நிலை ஏற்பட்டதற்குக் காரணம், தென் ஆப்பிரிக்கா கடைப்பிடித்து வரும் இன வேறுபாட்டுக் கொள்கையே. தென் ஆப்பிரிக்காவின் பூர்வ குடிகளை ஒதுக்கி வைத்துக் கொடுமைப்படுத்தியேதான் தேசத்தைச் சிறுபான்மையான வெள்ளையர் ஆண்டு வரவேண்டும் என்ற மூர்க்கப் பிடிவாதம் கொண்டவர்கள் தென் ஆப்பிரிக்க வெள்ளையர்கள்.

உலகம் வேகமாக மாறி வருகிறது. அடக்கி ஒடுக்கப்பட்டு அடிமையாகக் கிடந்த நாடுகளெல்லாம் சுதந்திரம் பெற்று சுயாட்சி நடத்த முயன்று வருகின்றன. ஆசியாவில் இந்தியா, பர்மா, மலேயா, இந்தோனிசியா முதலிய நாடுகள் சுதந்திரம் பெற்று சுயாட்சி நடத்தி வருகின்றன. ஆசிய மக்களை விடக் கீழான நிலையிலிருந்த ஆப்பிரிக்க நாடுகளாகிய கானு, நைஜீரியா முதலிய நாடுகளும் சுதந்திரம் பெற்று சுயாட்சி நடத்தி வருகின்றன. இப்படி உலகமெங்கும், மக்களுக்குள் இனத்தால் வேறுபாடில்லை; எல்லாரும் சமம்; எல்லாரும் ஓர் நிறை என்ற உணர்ச்சி ஒரே வெள்ளமாக எங்கும் பெருக்கெடுத்து ஓடும்போது, அதை உணராமல் தென் ஆப்பிரிக்கப் பிரதமர் டாக்டர் வெர்வுட் தமது பழமையான தனி வாழ்க்கைக் கொள்கையைக் கைவிட முடியாது என்று கூறியது, காமன்வெல்த் நாடுகளிலுள்ள மற்றப் பிரதமர்களுக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. பிரிட்டன் போன்ற நாடுகள், பேச்சளவிலாகிலும், டாக்டர் வெர்வுட் இன ஒதுக்கல் கொள்கையை விட்டுக் கொடுப்பாரோ என்று எதிர்பார்த்தன. மேல் பூச்சு வார்த்தையில் நம்பிக்கையில்லாத டாக்டர் வெர்வுட் விட்டுக் கொடுக்க இணங்கவில்லை. தமது கொள்கையில் நியாயம் இருப்பதுபோலவே நம்புகிறார். இன ஒதுக்கல் கொள்கையினால் வெள்ளையர்களுக்கும், பழங்குடிகளுக்கும் சௌஜன்யமும் சமாதானமும் ஏற்படும் என்று வாதாடுகிறார். இந்தக் கொள்கை, வெள்ளையர்கள் அல்லாத எல்லாத் தென் ஆப்பிரிக்க மக்களின் தன்மான உணர்ச்சிகளையும் பாதித்து, அவமானப்படுத்துகிறது என்பதை அவர் சிறிதும் உணர மறுக்கிறார். இந்தக் காமன்வெல்த் மகாநாட்டில் டாக்டர் வெர்வுட்டின் பிடிவாதம் காரணமாக, ஒன்று தென் ஆப்பிரிக்கா, இந்தக் குழுவில் இருக்க வேண்டும், மற்ற ஆப்பிரிக்க, ஆசிய நாடுகள் வெளியேற வேண்டும்; அல்லது தென் ஆப்பிரிக்கா வெளியேற வேண்டும், மற்ற ஆப்பிரிக்க ஆசிய நாடுகள் காமன்வெல்த்தில் இருக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. காமன்வெல்த்திலுள்ள எல்லா நாடுகளும் தென் ஆப்பிரிக்காவை வெளியேற வற்புறுத்தியதன் விளைவாக, டாக்டர் வெர்வுட் காமன்வெல்த்திலிருந்து விலகத் தீர்மானித்து விட்டார்.

காரியம் என்றும் வீரியம் என்றும் இரண்டு உண்டு. தென் ஆப்பிரிக்கா வெளியேறியதினால் இன ஒதுக்கல் கொள்கை சற்றும் வேகம் குறையப் போவதில்லை. வழக்கம்போல் தென் ஆப்பிரிக்கா அந்தக் கொள்கையைக் கடைப்பிடிக்கவே செய்யும். ஆகவே, காமன்வெல்த் நாடுகள் தங்கள் வீரியத்தைக் காட்டித் தென் ஆப்பிரிக்காவை வெளியேற்றியதால் எந்தக் காரியத்தையும் சாதித்ததாக எண்ண இடமில்லை.

காமன்வெல்த் பதவியில் எந்த விசேஷ அதிகாரமோ, செல்வாக்கோ, உரிமையோ இல்லை. தென் ஆப்பிரிக்கா வெளியேறியதால் தென் ஆப்பிரிக்காவுக்குப் பொருளா

தார வகையிலாகட்டும், வேறு எந்த வகையிலாகட்டும் எவ்வித நஷ்டமும் ஏற்படும் என்று நினைப்பதற்குஇடமில்லை.

தென் ஆப்பிரிக்காவைக் கண்டித்து வெளியேற்றியதில் பாரதப் பிரதமர் நேரு தலைமை தாங்கி யிருக்கிறார் என்று பிரிட்டிஷ் பத்திரிகைகள் புகழ்ந்து பாராட்டி யிருக்கின்றன. இதைப்படித்து விட்டு, இந்திய மக்கள் பெருமைப் படலாம். இதில் பிரிட்டிஷ் பிரதமர் தம்முடைய சாமர்த்தியத்தைக் காட்டியிருக்கிறார். பிரிட்டிஷ் பிரதமரும் நம்முடைய பிரதமரும் சேர்ந்து பிரேரணை செய்த சமாதானத் தீர்மானத்திலும் தென் ஆப்பிரிக்காவின் இன வேற்றுமைக் கொள்கை நிரந்தரமாக நடைபெறுவதற்கு அனுமதி இருந்தது. பேச்சளவில் மட்டுமே அந்தக் கொள்கையை வெறுத்ததாகக் கண்டிருந்தது. அந்தப் பிரேரணை நிறைவேற்றப்பட்டிருந்தாலும் லாபம் கண் துடைப்பின் அளவே இருந்திருக்கும். தென் ஆப்பிரிக்கப் பிரதமர் இந்த மேல் பூச்சுக்களுக்கு இடங் கொடுக்கவில்லை.

மொத்தத்தில் இந்தநடவடிக்கை தென் ஆப்பிரிக்காவிலுள்ள இந்திய மக்களுக்குப் பெரும் கஷ்டம் விளைவிப்பதாகவே முடியும். டாக்டர் வெர்வுட் தமது இன ஒதுக்கல் கொள்கையை இன்னும் முன்னை விட வேகமாகவே நிர்வாகத்தில் புகுத்துவார். ஏற்கனவே தென் ஆப்பிரிக்கப் பூர்வீகக் குடிகளுக்கு, இந்திய மக்களிடம் மனக்குறையுண்டு. தங்களுடைய இயக்கத்தில் முழு உணர்ச்சியுடன் சேரவில்லை என்று மனஸ்தாபப்பட்டு வருகிறார்கள். இனி இந்திய மக்கள், இரு சாராரின் கோபத்துக்கும் ஆளாக இருக்கின்றனர்.

தென் ஆப்பிரிக்கா காமன்வெல்த்தை விட்டு வெளியேறியதால் லாபம் ஒன்றுமில்லை.

கனடா, பிரிட்டன், நியூஸிலந்து, ஆஸ்திரேலியா முதலிய வெள்ளை அரசாங்கங்கள், தென் ஆப்பிரிக்கா வெளியேறிய போதிலும், தென்னாப்பிரிக்காவுடன் எல்லாத் தொடர்புகளும் வைத்துக் கொண்டே வரும். ஆசிய ஆப்பிரிக்க மக்களின் நல்ல அபிப்பிராயத்தையும் ஒரு விதத்தில் சம்பாதித்துக் கொண்டன. மொத்தத்தில் வெள்ளை அரசுகள் ராஜதந்திரத்தைக் கடைப்பிடித்தன.

தென் ஆப்பிரிக்கப் பிரதமரும் காமன்வெல்த்துக்குள் இனி இருந்தால் தம் கொள்கைக்கு அபாயம் என்பதை உணர்ந்து அதை ஸ்திரப்படுத்திக் கொள்ள வெளியேறி விட்டார். இன வேறுபாட்டுக் கொள்கையிலும் நன்மையுண்டு என்று ருசுப்படுத்துவதற்காகப் பழங்குடிகளுக்கு மற்ற வழிகளில் நன்மைகளையும் செய்து நட்பு வளர்க்கப் பார்ப்பார். இந்திய மக்களுக்குத்தான் சங்கடம்.

# இலங்கைத் தமிழர் கோரிக்கை

இலங்கையின் வடக்கு கிழக்கு மாகாணங்களில் பெடரல் கட்சியார் அமைதியான முறையிலும் ஒற்றுமையுடனும் உறுதியுடனும் பெரும் போராட்டம் நடத்திவருகிறார்கள்.

இலங்கை சர்க்காரின் அடக்குமுறைகளைப் பொருட்படுத்தாமல் இலங்கைத் தமிழர்கள் உறுதியாகவும் அமைதியாகவும் போராடி வருவது இலங்கை சர்க்காரின் கண்களைத் திறக்க வேண்டும்.

இன்று இலங்கையில் ஏற்பட்டுள்ள கிளர்ச்சிக்குக் காரணம், சர்க்காரின் ஆட்சி மொழியாகிய சிங்களத்தைத் தமிழர் வாழும் பகுதிகளிலும் பலாத்காரமாகத் திணிப்பதுதான். இதற்குப் பரிகாரம், தமிழர் வாழும் பகுதிகளாகிய யாழ்ப்பாணத்தையும், கிழக்கு மாகாணத்தையும் தமிழ் மொழி ஆட்சிமொழியாகக் கொண்ட மாகாணமாக்கி விடுவதுதான்.

இலங்கைத் தமிழர்களின் கோரிக்கையில் எந்த ஜனநாயகவாதியும் ஒப்புக் கொள்ளக்கூடிய நியாயம் இருக்கிறது. சமஷ்டி ஆட்சி, உலகில் பல ஜனநாயக நாடுகளில் நடைபெற்று வருகிறது. அமெரிக்காவிலும், இந்தியாவிலும் நடைபெற்று வருகிறது. தமிழ் மொழியை ஆட்சி மொழியாகக் கொண்ட இரு மாகாணங்கள் ஏற்படுத்துவது இலங்கையைப் பிரித்து விடுவதுமாகாது; தமிழர்களுக்குத் தனி ராஜ்யமாகக் கொடுப்பதாகாது. யாழ்ப்பாணத் தமிழர்களும், கிழக்கு மாகாணத் தமிழர்களும் அந்த அந்தஸ்தைச் சற்றும் கோர வில்லை. அவர்கள், இலங்கையின் விசுவாசமுள்ள பிரஜைகளாகவே வாழ விரும்புகிறார்கள். இலங்கையின் வளர்ச்சிக்காகவே பாடுபட விரும்புகிறார்கள். இலங்கையின் உரிமைக்காக, சிங்கள மக்கள் விழித்துக் கொள்ளுவதற்கு முன்பே, இங்கிலாந்து வரை சென்று போராடி வெற்றியுடன்

# செய்தி தெரியுமா? <சாமா>



அன்பே! உனக்காகக் காமன்வெல்த் குழுவை உதறித் தள்ளிவிட்டு வந்து விட்டேன்!
வெர்வூட்
இனவெறி




அரசியல் பொம்மலாட்டம்
காங்கிரஸ் சோஷலிஸக் கொள்கை
மொரார்ஜி
கலால் வரி
விற்பனை வரி
விலைவாசிகள் ஏற்றத்திற்கு வரிகள் காரணமில்லை, வர்த்தக சமூகம் தான் காரணம். —மொரார்ஜி




ரேடியோ மாத்திரை என்ற ஒரு மாத்திரையை உட்கொண்டால் குடலில் இருக்கும் கோளாறுகளை அம் மாத்திரை சமிக்ஞை மூலம் ஒலிபரப்புமாம்.
டெலிவிஷன் மாத்திரை கண்டு பிடித்தால், நேரிலேயே பார்த்துத் தெரிந்து கொள்ளலாமே!




ஒழுக்கமும் கட்டுப்பாடும் உன்னிடமே அடைக்கலமாகி இருக்கின்றன. நீ அவற்றைத் தேடிக் கொண்டு போக வேண்டாம்
கரியப்பா
இந்தியப் பெண்
என்.சி.சி ஒழுக்கம் கட்டுப்பாடு

திரும்பிய ஸர் பொன்னம்பலம் ராமநாதன் போன்ற பெரும் தமிழ்த் தலைவர்களின் சந்ததியார்களை இன்றைய சிங்கள சர்க்கார் தேசத் துரோகிகளாகப் பாவிப்பது நன்றியற்ற செயலாகும்.

இலங்கையில் வடக்கிலும், கிழக்கிலும் ஒரு பெரும் சமுதாயம் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக வாழ்ந்து வருவதை உணர்ந்து, அவர்கள் உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுத்து பிரிட்டிஷ் அரசாங்கம் கூட நேர்மையாக நடந்து கொண்டு வந்திருக்கிறது. சிங்கள மக்களின் சுதந்திரக் கிளர்ச்சிக்கு யாழ்ப்பாணத் தமிழர்களும் தாங்களும் இலங்கைப் பிரஜைகள் என்றும் 'ஒரு தாயின் பிள்ளைகள் நாம்' என்றும் உதவி யிருக்கிறார்கள் முன்னாளில். அம் மக்களுக்கு அநீதி இழைப்பது தவறாகும்.

இன்று இலங்கைத் தமிழர்கள் தங்கள் மொழி, பண்பாடு ஆகியவை நலிந்து போகாமல், காப்பாற்றிக்கொள்ள அறவழியில் போராட முனைந்துவிட்டார்கள். அவர்கள் உறுதிக்கும், உணர்ச்சிக்கும் மதிப்பளித்துச் சமாதானம் பேசுவது சிங்கள சர்க்காருக்குக் கௌரவமேயன்றித் தாழ்வில்லை. உலக நாடுகளின் மதிப்பிலும் இலங்கை நிச்சயம் உயரும்.

தென் ஆப்பிரிக்கப் பிரதமர் போன்றவர்கள் இன வேறுபாட்டுக் கொள்கைக்கு இலங்கையை ஆதாரமாக எடுத்துக் காட்டவும் இடமிராது. ஸ்ரீமதி சிரிமாவோ பண்டாரநாயகா, காமன்வெல்த் பிரதமர் மகாநாட்டிலிருந்து திரும்பியதும், இலங்கைத் தமிழர்களின் கோரிக்கைக்குச் செவி சாய்த்து இவ்வழகிய தீவில் சாந்தியையும் சமாதானத்தையும் நிலைநாட்டி இலங்கையை இன்னும் உயரிய பதவிக்கு அழைத்துச் செல்வார் என்று இந்தியா எதிர் பார்க்கிறது.

# என்ன சேதி?

## ஆரோக்கிய விஷயம்!

மத்திய சர்க்கார் பட்ஜெட்டின் மீது நடந்த விவாதத்துக்குப் பதிலளிக்கையில் மந்திரி திரு மொரார்ஜி தேசாய் சில மிகப் பழமையான சமாதானங்கள் சொன்னார். சிகரெட், தேயிலை, காப்பி மீது விதிக்கப்பட்ட வரிகளின் காரணமாக, மக்கள் சிகரெட் பிடிப்பதையோ, காப்பி அருந்துவதையோ, தேயிலைப் பானத்தைப் பருகுவதையோ அடியோடு நிறுத்திவிட்டால் தாம் சந்தோஷமே படுவாராம். அந்த அளவுக்கு மக்களின் தேக ஆரோக்கியம் காப்பாற்றப்பட்டதே என்று மிகுந்த திருப்தி அடைவாராம்; இப்பொருள்கள் மீது விதிக்கப்பட்ட வரிகளின் மூலம் சர்க்காருக்கு ஒரு நயா பைசாகூட வருமானம் கிடைக்காவிட்டால் சற்றும் கவலைப்பட மாட்டாராம். இம்மாதிரியான பொய்ச் சமாதானங்களை யெல்லாம் சொல்லி மக்கள் சபையை ஏமாற்றப் பார்த்தார் மத்திய நிதிமந்திரி.

அறுபது கோடி ரூபாய் வருமானத்துக்காகப் போடப்பட்ட வரிகளை எதிர்க்கும் மக்கட் சபை அங்கத்தினர்களுக்கு இம்மாதிரியான வாதங்கள் எவ்விதமான சமாதானமும் தரமாட்டா. உண்மையில் மக்கள் புகையிலை, தேயிலை முதலியவைகளின் உபயோகத்தைக் குறைத்துவிடுவதால் சர்க்காரின் வருமானம் குறைந்துபோனால் நிச்சயமாக இந்தப் புதுவரிகளை மத்திய சர்க்கார் ரத்துதான் செய்வார்கள். வருமானத்தைத் தேடும் சர்க்கார் மக்களின் ஆரோக்கியத்தைப் பற்றிக் கவலைப்பட்டு வரிகள் போட்டதாகச் சொல்வது சுத்த மோசம்.

மண்ணெண்ணெய், பாக்கு முதலிய பல பொருள்களுக்கு வரி போடுவதால், மக்களின் வாழ்க்கைக்கு வேண்டிய செலவு அதிகரித்து, மக்கள் படும் சங்கடத்தை மத்திய சர்க்கார் உணரவில்லை. ஒரு வகைச் சாமானின் விலை ஏறினால் எல்லாப் பண்டங்களின் விலையும் விஷம் போல் ஏறும்.

## மந்திரியின் அலட்சியம்

வங்க மக்களின் ஜனத்தொகை அதிகரிப்பைப் பற்றியும், கணக்கெடுத்த முறையைப் பற்றியும் மந்திரி திரு சுப்பிரமணியம் சந்தேகமும், அவநம்பிக்கையும் கொள்ள அவருக்கு உரிமையுண்டு. அதைப் பற்றி வங்க சர்க்காரும் தமிழ் நாட்டுச் சர்க்காரும் சண்டை பிடித்துக் கொண்டு பொழுதைப் போக்கலாம். ஆனால் வங்க அகதிகளின் காரணமாக ஜனத்தொகை உயர்ந்திருக்கலாம் என்று சமாதானம் சொன்னதற்கு "அந்தக் கதைகள் எல்லாம் எனக்குத் தெரியும்" என்று அலட்சிய பாவனையில் தமிழ் மந்திரி பேசியது தமிழ் நாட்டுப் பண்புக்குச் சற்றும் உகந்ததாக இல்லை. இப்படி மந்திரி அலட்சியமாகப் பேசியதை வங்கப் பத்திரிகைகள் கட்டம்கட்டிக் கொட்டை

எழுத்துக்களில் பிரசுரித்துள்ளன. வங்கம் தேசப்பிரிவினையால் அடைந்த துயரை, தமிழ் மக்கள் உணர்ந்ததாகவோ, அனுதாபப் படுவதாகவோ தெரியவில்லை என்றுதான் வங்க மக்கள் நினைக்கின்றனர். பிற ராஜ்ய மக்களின் கஷ்டங்களில் நம்மால் ஒன்றும் செய்ய முடியா விட்டாலும் அனுதாபமாகிலும் கொள்ளலாம். அந்த அனுதாபம் கூடத் தமிழர்களுக்குக் கிடையாது என்ற தவறான உணர்ச்சியை வங்க மக்களுக்கு ஏற்படுத்தியிருக்கிறது மந்திரியின் பேச்சு! எதையோ விதைக்கப் போய், எதையோ விளைவித்திருக்கிறார் மந்திரி. பரிதாபம்!

## தில்லி தர்பார்

ராஜ்ய சர்க்கார் வசூலித்து வந்த சில வரி இனங்களை மத்திய சர்க்கார் தம் வசம் எடுத்துக் கொண்ட பின், வசூலான தொகை ராஜ்யங்களுக்குத் தக்கவாறு பங்கீடு செய்யப்படவில்லை; ஒப்பந்தங்களைச் சரியாக நிறைவேற்றவில்லை; இப்போதும் வருமான வரியை உயர்த்தினால் அதில் ராஜ்யங்களுக்குப் பங்கு தரவேண்டுமே என்பதால் கார்ப்பரேஷன் வரிகளையே தில்லி உயர்த்தியிருக்கிறது என்றெல்லாம் குறை கூறியிருக்கிறார் நிதி மந்திரி திரு ஸி. சுப்பிரமணியம். ராஜ்ய சர்க்கார்கள் விட்டுக் கொடுத்தவரிகள் இப்போது மத்திய சர்க்கார் நோக்கங்களுக்கு என்றே உயர்த்தப்பட்டிருக்கின்றன என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். செலவினங்களைக் குறைக்கவும், வரி கொடுக்க ஏய்ப்பவர்களை வளைத்துப் பிடிக்கவும் தில்லி அதிகாரம் பயன்படும் என்றே முன்பு விட்டுக் கொடுத்ததாகவும், தற்போது நடந்து கொள்ளும் முறையையே தில்லி தொடர்ந்தும் கடைப்பிடித்தால், தமது பழையகருத்தை மாற்றிக்கொள்ள வேண்டி வரும் என்றும்கூட அப்பட்டமாகச் சொல்லியிருக்கிறார் நிதிமந்திரி.

தில்லியிலேயே அதிகாரம் குவிந்திருப்பதால்தான், இயற்கை வளங்கள் தேவைப்படாத திட்டங்களைக்கூடப் பிரதேச வாரியாக அமைப்பதில் நேர்மை காணப்படவில்லை என்பதையும் திரு சுப்பிரமணியம் ஓரளவுக்கு ஒப்புக் கொண்டு பேசியிருக்கிறார்.

நாளுக்கு நாள் தில்லி சர்க்காரின் அதிகாரங்கள் அதிகமாவதால், ராஜ்ய சர்க்கார்கள் மூன்றும்தர முனிசிபாலிடிகளாகிவிடக் கேவலமாகி வருகின்றன என்று சுதந்திரக் கட்சியினர் சொல்லி வருவதைக் காங்கிரஸ் நிதிமந்திரி திரு ஸி. சுப்பிரமணியத்தின் பேச்சு உண்மை என்று உறுதிப்படுத்துகிறது.

## பிடிக்குப்பிடி நமசிவாயம்!

சென்னை நகரில் சர்க்காரால் நடத்தப்பட்டு வரும் பஸ் போக்குவரத்தின் 'லட்சணம்' சமீபத்திய கீழ்ச் சட்டசபை விவாதங்களிலிருந்து வெட்ட வெளிச்சமாயிற்று. இதற்கு மந்திரி ஸ்ரீ ஆர். வெங்கடராமன் கூறிய பரிகாரம் பரிகா

சத்துக்குரியதாகத்தான் இருக்கிறது. குறைந்த தூரம் செல்வதற்குக்கூட பஸ் பிரயாணத்தை மேற்கொள்ளும் பழக்கத்தைக் குறைப்பது பற்றி யோசிக்கிறாராம் அவர்! ஸ்டேஜ்களை ஏழிலிருந்து நான்காகக் குறைப்பதுபற்றி ஆலோசனை நடக்கிறதாம்! இதையொட்டி குறைந்த பட்ச கட்டணம் 7 நயா பைசாவிலிருந்து 10 பைசாவாக உயர்த்தப்படலாமாம்! மக்களுக்கு எவ்வளவு வசதிகள் அளிக்கிறது பார்த்தீர்களா, நம் 'பொதுத் துறை'ப் போக்குவரத்து?

ஆறேகால் நயாபைசா கொண்டது தான் ஓரணா. எனவே நயா பைசா அமுலுக்கு வந்தபோது முன்பு ஓரணாவாக இருந்த கட்டணத்தை 6 நயா பைசாவாகத்தான் நிர்ணயித்திருக்க வேண்டும்; ஆனால் வள்ளிசாக 7 பைசாவாக்கினார்கள். அதுவும் இப்போது 10 பைசாவாக உயரவிருக்கிறது. மக்களுக்கு எளிதில் புரியும் என்பதாகச் சாக்குக் காட்டி, இந்தத் தசாம்ச முறையின் மூலம் கொள்ளை லாபம் அடிக்கப் பார்க்கிறது நம் 'பொதுத் துறை'ப் போக்குவரத்து.

## நீதியும், நீதியும்

'சுதந்திரக் கட்சி கூடத்தானே ஒரு கோடி ரூபாய் தேர்தல் நிதி திரட்டுகிறது? காங்கிரஸ் மட்டும் ஏன் திரட்டக் கூடாது? நிதி திரட்டாமலே தேர்தலில் போட்டியிட முடியுமானால் அதற்கு எதிர்க்கட்சிகள்தான் ஒரு மாற்று வழி சொல்லட்டுமே!' என்றெல்லாம் நியாயம் கேட்கிறார் நமது நிதிமந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்கள்.

கட்சிக்காக நியாய முறையில் நிதி திரட்டுவதை யாருமே, என்றுமே ஆட்சேபிக்கவில்லை. அதிகாரத்தைப் பயன்படுத்திப் பணம் ஈட்டுவதற்குத்தான் ஆட்சேபமெல்லாம். மந்திரிகளும், பரிவாரப் பட்டாளங்களாகிய அதிகார வர்க்கமும் 'கிட்டி' போட்டுப் பணம் சேகரிக்கும் நெறியின்மைக்குத்தான் கண்டனமெல்லாம். மந்திரி அவர்களோ தாங்கள் யாரையும் கட்டாயப்படுத்துவதில்லை என்றும், அவர்களாகவே முன் வந்து காணிக்கை செலுத்துவதாகவும் சொல்கிறார். மந்திரிகளே நேரடியாகக் கட்சிக்கு நிதி சேர்ப்பதிலும் தவறில்லை என்கிறார். நன்மை செய்வதற்கும், தீமை இழைப்பதற்குமான சகல வழி முறைகளையும் தன் கையிலேயே அடக்கிக் கொண்டுள்ள ஒரு பர்மிட்-லைசென்ஸ் அரசாட்சியில் பலாத்காரம் நிர்வாணமாக உலவ வேண்டுவதில்லை. மந்திரிமார்களே வந்து கேட்கும்போது நிதி உதவ மறுப்பவர்களின் கதி அதோகதிதான். இந்த அநீதியை மூடி மறைக்கப் பார்ப்பதும், வேறு மார்க்கம் கூறுமாறு நடிப்பதும் விந்தையாக இருக்கிறது!

## திரைக்கலையில் வெற்றி

சிறந்த நடிப்புத் திறனுக்கு அடையாளம் இயற்கையாக நடிப்பதல்ல; இயற்கையாக நடிப்பது போல் பாவனை செய்வதுதான். இந்த ரகசியத்தை நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டிருப்பவர் நம் நடிகர் திலகம் சிவாஜி கணேசன். வெற்றிக்கு மேல் வெற்றி பெற்றுப் புகழேணியின் உச்சியிலே உட்கார்ந்திருக்கும் அவர் பிரதான பாகம் ஏற்று நடித்துள்ள 'தெய்வப் பிறவி' என்ற திரைப்படம் சென்ற வருஷத்திய சிறந்த அகில இந்தியப் படங்களுள் மூன்றாவதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு ராஷ்டிரபதியின் நற்சான்றுப் பத்திரமும் பெற்றுள்ளதை அறிந்து மகிழ்ச்சியடைகிறோம். இது தமிழ்நாட்டுக்கே பெருமையாகும். படத் தயாரிப்பில் பங்கு பற்றியுள்ள அனைவருமே தமிழ் மக்களின் பாராட்டுக்குரியவர்கள்.

பிரதேசவாரியாகக் கொடுக்கப்படும் பரிசுகளில் மூன்றும் தமிழ்த் திரையுலகுக்குக் கிட்டியுள்ளன. 'பார்த்திபன் கனவு'க்கு வெள்ளிப் பதக்கம் அளித்துள்ளார்கள். 'பாதை தெரியுது பார்' 'களத்தூர் கண்ணம்மா' ஆகிய இரு படங்களும் நற்சான்றுப் பத்திரங்கள் பெற்றுள்ளன.

பிற மொழிகளிலிருந்து தழுவி எழுதப்பட்ட கதைகளைத் திரைப் படமாக்கி வெளியிட்டால் அவை ஜனாதிபதியின் பரிசுக்குச் சிபாரிசு செய்யப்படுவதில்லை என்பது நல்ல கொள்கை.

உண்மையான எழுத்தாளன் பாராட்டுரைகளாலோ அல்லது பழித்துரைக்கப்படுவதாலோ பாதிக்கப்படுவதில்லை. பணத்தையோ பரிசையோ எதிர்பார்த்து அவன் எதையும் செய்வதில்லை. தனக்குள்ளே பொங்கும் எண்ணச் சுமைகளை வார்த்தைகளாகக் கொட்டுவதன் மூலம் பாரம் நீங்கி அமைதி பெறுகிறான். அதிலேதான் அவனுக்கு ஆனந்தம். ஆகவே சாகித்திய அகாடமி பரிசு ஒன்றும் தமிழ் எழுத்தாளர்களுக்கு வரவில்லையே என்று காரணமின்றிக் குமைபவர்கள் கூடத் தமிழ்த் திரைப்பட உலகுக்குக் கிட்டியுள்ள இந்த வெற்றிகளைக் கண்டு ஆறுதல் பெறலாம்! திரைப்பட வெற்றியில் எழுத்தாளனின் வெற்றியும் மறைந்தே நிற்கிறதல்லவா?

பாட்னு. 12—3—61

பஞ்சாப் மாகாணத்தில் மூன்று இடங்களில் கூட்டங்கள் நடைபெற்றன. அம்பாலாவிலும், யமுனா நகரத்திலும் வியாபாரிகள், தொழிலதிபதிகள், தொழில் நிர்வாக உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், வைத்தியர்கள் முதலிய முக்கியஸ்தர்கள் கூட்டங்கள் வரவேற்பு தந்து கௌரவித்தார்கள். குருக்ஷேத்திர யாக பூமியில் முன்னோர்களையும், ரிஷிகளையும், ஆசாரியர்களையும் தியானித்து உள்ளம் தெளிவு பெற வசதி கிடைத்தது. பானிபத்து நகரத்தில் ஒரு மறக்க முடியாத காட்சியைக் கண்டு களித்தேன். பெரிய பந்தலில் வரவேற்பு நடந்தது. கூட்டம் பஞ்சாபு விவசாயிகளின் மகாநாடாக நடந்தது. மத்தியானம் கடுமையான வெய்யிலில் (1 மணி) தலையில் உருமாலும் கையில் தடியுமாக ஆயிரம் குடியானவர்கள் பந்தலின் கீழும் வெளியில் வெயிலைப் பொருட்படுத்தாமலும் அமைதியாக உட்கார்ந்துகொண்டு என் பேச்சைக் கேட்டார்கள். ஹிந்தியில் மொழிபெயர்ப்பு மிக அழகாக திரு ஜோஷி அவர்கள் வாக்கியம் வாக்கியமாகச் செய்தார். உற்சாகம் பொங்கி வழிந்தது. மார்ச்சு 10ந் தேதி. பீஹார் மாகாணத்தில் இமயமலை அடிவாரத்தில் தல்லிங்க்ஸராய் என்கிற ஊர். மண் ரோட்டுதான் அங்கே. புது நாகரீக வசதிகள் ஏதும் கிடையாது. இருபதினாயிரம் மக்கள் கூடி மகாநாடு சிறப்பாக நடத்தினார்கள். திரு முன்ஷி, திரு ஞானகிநந்தன், திரு மசானி, ஆசார்ய ரங்கா முதலியோரும் நானும் அந்த மகாநாட்டிலே பேசினோம். இங்கே திரு கைலாஸநாதபதி அழகாக மொழிபெயர்த்தார். இங்கே பொங்கி வழிந்த உற்சாகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. பேச்சுகளின் உருக்கத்துக்குச் சமானமாகக் கூட்டத்தின் உற்சாகம் பொங்கிற்று. இரவு 7-30 மணிக்குக் கிளம்பி பாட்னாவில் இராத்திரி 12-30 மணிக்கு வந்து சேர்ந்தேன். மண் ரோட் 20 மைலும் சாதாரண ரோடு 80 மைலும் முடித்துக் கொண்டு பாட்னாவில் படுத்தேன். இன்று பிற்பகல் கல்கத்தாவுக்கு விமானத்தில் நானும் ஆசார்ய ரங்காவும் போவோம்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# சுதந்திர நிதி

கல்கியில் ராஜாஜி அவர்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இணங்கிக் கீழ்க்கண்ட அன்பர்கள் சுதந்திர நிதிக்குப் பொருளுதவி செய்திருக்கிறார்
(3—3—61 தேதி முதல் 18—3—61 வரை)

| | | | |
|---|---|---|---|
| டாக்டர் கே. ராமச்சந்திரன் | ... | 10 | 00 |
| கே. நாராயணன் | ... | 2 | 00 |
| ஏ. டி. கே. நாயுடு | ... | 5 | 00 |
| எல். ஆர். ஜி. சங்கர் | ... | 1 | 00 |
| கே. கைது | ... | 2 | 00 |
| கே. வி. கே. வர்மா | ... | 5 | 00 |
| டி. ஆராவமுதன் | ... | 5 | 00 |
| ஏ. கே. பாக்கியம் | ... | 10 | 00 |
| கே. ஜயலக்ஷ்மி அம்மாள் | ... | 1 | 00 |
| குமாரி பி. அனுபாமா | ... | 2 | 00 |
| குமாரி பி. ஜெயபாமா | ... | 2 | 00 |
| டி. பி. ஹரன் | ... | 1 | 00 |
| ஆர். சீனிவாச அய்யங்கார் | ... | 5 | 00 |
| மராட்டி பிக்கோஜி ராவ் குக்ரோஜி ராவ் | ... | 2 | 00 |
| டாக்டர் பி. எல். ஏ. சர்மா | ... | 5 | 00 |
| கே. வசந்தி | ... | 5 | 00 |
| எம். உமா | ... | 5 | 00 |
| ஜானகி கிருஷ்ணன் | ... | 10 | 00 |
| டி. ருக்மிணியம்மாள் | ... | 10 | 00 |
| க. கிருஷ்ணமூர்த்தி | ... | 2 | 00 |
| அ. ரா. மாதவன் | ... | 5 | 00 |
| ஆர். பாலச்சந்திரன் | ... | 5 | 00 |
| எச். ஆர். பூரி | ... | 5 | 00 |
| எம். கே. ராவ் | ... | 5 | 00 |
| என். எஸ். பழனிசாமி | ... | 2 | 00 |
| க. மங்களாம்மாள் | ... | 5 | 00 |
| எல். ஜயலக்ஷ்மி அம்மாள் | ... | 5 | 00 |
| வி. ஆர். சசி | ... | 2 | 00 |
| இந்திரா நரசிம்மன் | ... | 10 | 00 |
| குச்சாமாமா | ... | 15 | 00 |
| குச்சாமாமி | ... | 15 | 00 |
| குச்சாமாமா அம்மாஞ்சி | ... | 10 | 00 |
| குச்சாமாமா அம்மாஞ்சி மதனி | ... | 10 | 00 |
| எம். சுப்பிரமணிய சாஸ்திரி | ... | 50 | 00 |
| 10-1-61 முதல் 2-3-61 முடிய | | 1819 | 27 |
| மொத்தம் வரவு | | 2053 | 27 |

# அறப்போருக்கு அமோக ஆதரவு

கொழும்பு, மார்ச் 16ல

தமிழ் அரசுக் கட்சியினர் அறப்போரை இலங்கையின் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் ஆரம்பித்துக் கிட்டத்தட்ட ஒரு மாதமாகப் போகிறது. இக் கடிதத்தை எழுதும் வரையில் சத்தியாக்கிரகம் சமரசமாக முடியும் அறிகுறியைக் காணோம். என்றாலும் அரசாங்கம் தமிழர்களுடன் ஒரு சமரச உடன்பாட்டுக்கு வருவதைத் தவிர அதற்கு வேறு வழியே இல்லையென்ற உண்மை தினந்தோறும் தெளிவாகப் புலப்பட்டு வருகிறது. சிங்கள அரசியல் வாதிகளுக்கும் இந்த உண்மை தெளிவாகப் புலனாகி வருகிறது. இந்தியாவில் காந்தி மகான் தலைமையில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அன்று நடைபெற்ற சத்தியாக்கிரகத்துக்கும் திரு செல்வநாயகம் தலைமையில் இன்று நடக்கும் சத்தியாக்கிரகத்துக்கும் எந்த ஒரு சிறு அம்சத்திலும் வித்தியாசமில்லை. சோதனையானதொரு தருணத்தில் இலங்கைத் தமிழ் பேசும் மக்களிடையில் சாதி, சமய, கட்சி, கிராம, மாகாண வேறுபாடுகள் ஏதுமின்றி இத்தகைய ஒற்றுமையும் கட்டுப்பாடும் உணர்ச்சிப் பெருக்கும் ஏற்பட்டது ஆச்சரியத்திலும் ஆச்சரியமானது. இதைச் சொன்னால் சுலபமாக நம்ப முடியாது. நேரில் கண்டு வியக்க வேண்டிய அதிசயம் இது.

ஆண்களையும் அறப்போரில் பெண்மணிகள் மிஞ்சி ஆயிரமாயிரமாகத் திரளாக வந்து மறியல் நடத்துவது இலங்கையின் மிக மிக நீண்ட சரித்திரத்தில் கண்டும் கேட்டுமிராத அதிசயம். சத்தியாக்கிரக பூமிக்குப் பல்லாயிரக் கணக்கிலே பெண்மணிகள் நெடுந்தூரக் கிராமங்களிலிருந்தெல்லாம் கால்நடையாகவும் மாட்டு வண்டிகளிலும் சாரி சாரியாக வந்து திரளாகக் கூடிய வண்ணமிருப்பதால் சத்தியாக்கிரகத்தை மாதக் கணக்கில் தொடர்ந்து நடத்த ஆள் சேர்ப்பதைக் காட்டிலும் சத்தியாக்கிரகம் செய்ய வருவோருக்குச் சத்தியாக்கிரகப் பிரதேசங்களில் இடம் கொடுப்பதுதான் தலைவர்களுக்குப் பெரிய பிரச்னையாக இருக்கிறது. சத்தியாக்கிரகம் நடத்த ஒவ்வொருவருக்கும் சில மணி நேரமென்று ஒதுக்கிக் கொடுத்தும் இட நெருக்கடிப் பிரச்னையைச் சமாளிப்பது பெரும் பிரயத்தனமாக இருக்கிறது. கைக் குழந்தையுடன் கூடிய தாய்மார்களும் நிறை கர்ப்பிணிகளும் கூட தங்கள் பங்கைச் செய்ய முன் வந்திருப்பதைக் காணும்போது தமிழ் பேசும் மக்களின் இத்தகைய வைராக்கியமும் சுதந்திர உணர்ச்சியும் இவ்வளவு காலமும் எப்படி மறைந்திருந்தன வென்பதை நம்ப முடியாமல் இருக்கிறது.

## புனித க்ஷேத்திரமாகியது

சத்தியாக்கிரக பூமி வெறும் ஆட்கூட்டப் பிரதேசமாக இல்லாமல் அங்கு ஒரு தேவாலயத்தின் புனிதத்தன்மை பிரதிபலிப்பதையும் நாம் சுட்டிக்காட்ட வேண்டும். ஆயிரக் கணக்கில் வந்து அமைதியாகத் தரையில் உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்யும் ஆண்களும் பெண்களும் பேசிப் பொழுதைப் போக்காமல் தேவாரம், திருவாசகம் முதலான பக்திப் பாடல்களை முழங்கிக் கொண்டிருப்பதும் பஜனை கீதங்கள் முழங்கிய வண்ணமாக இருப்பதும் குறிப்பிடத்தக்கது. இத்துடன் இப்பொழுது வேத பாராயணமும் சேர்ந்திருக்கிறது. அகில இலங்கைச் சைவ குருமார்கள் சங்கத்தைச் சேர்ந்த சைவப் பிராமணர்கள் இவ்வாரம் வேத பாராயண கோஷத்துடன் மிகப் பெரிய ஊர்வலமாக வந்து தமிழரசுத் தந்தை திரு செல்வநாயகத்திடம் ஒரு பண முடிப்பைச் சமர்ப்பித்துவிட்டு சத்தியாக்கிரகத்தில் கலந்துகொண்டார்கள். அன்று முதல் தினசரி காலையிலும் மாலையிலும் சத்தியாக்கிரகிகளுக்கு ஆலய விபூதிப் பிரசாதம் வழங்க ஏற்பாடாகி யிருக்கிறது. அனுதினமும் காலையில் சரியாக ஒன்பது மணிக்கும் மாலையில் ஐந்து மணிக்கும் இலங்கையிலுள்ள சகல இந்து ஆலயங்களிலும் மணிகள் ஒலிக்க வேண்டுமென்றும் அந்த நேரத்தில் தமிழர்கள் எங்கு இருந்தாலும் சத்தியாக்கிரகம் வெற்றி பெற இரண்டு நிமிட நேரம் மௌனப் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த வேண்டுகோளுக்குத் தென்னிந்தியாவிலுள்ள இந்துக் கோவில் தர்மகர்த்தாக்களும் செவி சாய்த்தால் இலங்கைத் தமிழர்கள் மிக்க நன்றியுடையவர்களாக இருப்பார்கள். சத்தியாக்கிரகம் ஒரு சாதாரணப் போராட்டமாக இல்லாமல், தமிழ் பேசும் மக்களின் நீதி நேர்மையான கோரிக்கைகளுக்காக நடக்கும் ஒரு புனித இயக்கமாகவே இப்பொழுது மாறியிருக்கிறதென்றால் சிறிதும் மிகையாகாது.

## பட்டினி போட்டுப் பணியவைக்க முயற்சி

சத்தியாக்கிரகத்தை நசுக்க அரசாங்கம் ராணுவத்தையும் கடற்படையையும் முதலில் ஏவியது. அவர்களும் போலீசும் நடத்திய அட்டூழியங்கள் சத்தியாக்கிரகிகளை மேலும் உற்சாகப்படுத்தி அவர்களது வைராக்கியத்தை உறுதிப்படுத்தியதே தவிர சத்தியாக்கிரகம் சிதையவில்லை. அதுமட்டுமல்ல, பல சிறு கட்சிகளாகப் பிரிந்திருந்த தமிழ் பேசும் மக்கள் அனைவரையும் முஸ்லிம்களையும் சத்தியாக்கிரகத்தில் ஒரு குடையின்கீழ் ஒதுங்கச் செய்து அவர்களுக்கிடையில் என்றுமே இல்லாத மாதிரியான ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் உருவாக்கியது. இப்பொழுது அடுத்தபடியாக சத்தியாக்கிரகிகளையும் தமிழ் பேசும் மக்களையும் பட்டினி போட்டுப் பணிய வைக்கும் முயற்சியில் அரசாங்கம் இறங்கியிருக்கிறது. தமிழ்ப் பகுதிகளில் 'அரிசி வேண்டுமானால் சத்தியாக்கிரகத்தைக் கைவிட்டுக் கச்சேரிக்கு வாருங்கள்' என்று சொல்லி ரேஷன் அரிசியை நிறுத்தியிருக்கிறார்கள். ஆனால் இதற்கும் தமிழ் மக்கள்

சிறிதும் அஞ்சவில்லை. அரிசி கலப்பில்லாத வடை முதலியவற்றை ஒரு வேளை சாப்பிடுமாறு தமிழரசுக் கட்சித் தலைவர் சொல்லியிருக்கும் யோசனையைத் தமிழ் மக்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இதற்கிடையில் நாட்டுப்புறங்களில் கிடைக்கும் நெல்லையெல்லாம் கூட்டுறவு சங்கக் கடைகள் வாங்கி மக்களுக்கு இயன்ற அளவு விநியோகித்து உதவி வருகின்றன.

## இது என்ன அநியாயம்?

பார்லிமெண்டில் வடக்கு கிழக்கு மாகாணங்களில் அரிசி விநியோகத்தை அரசாங்கம் நிறுத்தியிருப்பதைப் பற்றிப் பிரஸ்தாபம் ஏற்பட்டபொழுது இது மாதிரியான ஓர் அநியாயத்தை உலகில் எங்கும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை என்று கடுமையாகக் கண்டித்தார் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் திரு பீட்டர் கெனமன். 'சத்தியாக்கிரகப் பகுதிகளில் சாராய விநியோகத்தைத் தாராளமாகச் செய்வதாகச் சொல்லும் அரசாங்கம் சத்தியாக்கிரகத்தின் பயனாக அரிசி விநியோகம் செய்ய முடியவில்லையென்று சொல்லுவது வெட்கமாக இல்லை?'' என்று அவர் சட்டசபையில் கேட்டார்.

தமிழ்ப் பிரதிநிதியான திரு மு. சிவசிதம்பரம் ஆவேசம் வந்தவரைப் போல் ஓர் உருக்கமான சொற்பொழிவு நிகழ்த்தினார். தமிழ் மக்களைப் பட்டினி போட்டுப் பணிய வைக்கும் முயற்சி படுதோல்வியடையுமென்று கூறிய அவர், "தமிழ் மக்கள் சிங்களவர்களுடன் சகோதரர்களாகச் சேர்ந்து வாழவே விரும்புகிறார்கள். இதற்குத் தேவையான நடவடிக்கை எடுப்பது அரசாங்கத்தின் பொறுப்பு. காலம் கடந்துவிட்டால் என்ன நடக்குமென்று சொல்ல முடியாது'' என்றார். ஆத்திரமும் ஆவேசமும் அதே சமயம் உருக்கமான வேண்டுகோளும் சேர்ந்திருந்த அவரது பேச்சைப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் ஆடாமல் அசையாமல் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

## தொண்டைமான் தலையீடு!

பார்லிமெண்ட் கூட்டத்துக்குப் பின்னர் திரு தொண்டைமான் மந்திரி சபையின் தற்காலிகத் தலைவர் திரு சி. பி. டி. சில்வாவையும் உணவு மந்திரி திரு இலங்கரத்னாவையும் சந்தித்து, தமிழ்ப் பகுதிகளுக்கு அரிசி ரேஷனை அவசரமாக அனுப்பி விநியோகிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார். அதன் பயனாக, வியாபாரிகள் கச்சேரிக்குள் வரமுடியாவிட்டால் கூட அவர்களுக்கு முன் போல் வெளியில் வைத்து அரிசி பர்மிட்டுகள் கொடுக்குமாறு உணவு மந்திரி வடக்கு, கிழக்கு மாகாணங்களுக்கு அவசர உத்தரவுகள் அனுப்பியிருக்கிறார். இதற்கிடையில் லண்டனுக்குச் சென்றிருக்கும் பிரதம மந்திரி இலங்கை திரும்பும் வரையில் சத்தியாக்கிரகத்தைப் பற்றி எவ்விதமான நடவடிக்கையும் எடுப்பதில்லையென்று அரசாங்கம் முடிவுசெய்திருக்கிறது.

— ரஜனி

நம்மாழ்வார் பாடிய

# பக்தி நெறி

ராஜாஜி

63

சார்வே தவநெறிக்குத் தாமோதரன்
தாள்கள்.
கார்மேக வண்ணனை, கமல
நயனத்தனை.
நீர், வானம், மண், எரி, கால்
ஆய் நின்ற நேமியான்,
பேர் வானவர்கள் பிதற்றும்
பெருமையனே.

*சார்வு—துணை; உபாயம்.*

*தவம் அதாவது இந்திரிய சுகங்களை விலக்கி நோன்பு இருப்பது. இதற்கு உபாயமும் துணையுமாகும் எம்பெருமானின் திருவடிகள். இதைத்தான் கீதாசாரியன் 'விஷயா விநிவர்த்தந்தே' என்கிற சுலோகத்தில் சொன்னான். இந்திரிய சுகங்களை அகற்றி விரதமிருந்தாலும் அந்த விஷயங்களைப் பற்றிய ருசி மனத்தில் இருந்து கொண்டிருக்கும். அதுவும் போக வேண்டும் என்றால் 'பரம் த்ருஷ்ட்வா' அதாவது பகவானுடைய திருவடிகளில் மனத்தைச் செலுத்தினால் போகும். 'யததோ ஹ்யபி' என்கிற சுலோகத்திலும் இதையே கீதாசாரியன் வற்புறுத்துகிறான். மத்பர: அதாவது என்மேல் உள்ளத்தைச் செலுத்தி இந்திரியங்களை வசப்படுத்திக் கொள் என்கிறான். இதையே ஆழ்வார் இந்தப் பாசுரத்தில் சொல்லுகிறார். சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள் என்கிறார். தவநெறி வேறு பக்திநெறி வேறு என்று எண்ண வேண்டாம். தவநெறிக்கும் தாமோதரன் தாள்களில் உள்ளத்தைச் செலுத்த வேண்டும். இல்லாவிடில் தாங்குக் கொடுக்காத கட்டிடம் விழுந்து போவது போல் தவநெறியும் விழுந்து போகும். விரதங்கள் காப்பது நல்லது ஆனால் அதற்கும் பக்தி வேண்டும். அது இருந்தால்தான் விரதம் உண்மையில் காக்கப்படும். அது இல்லாவிடில் ஏகாதசி நாள் முழுதும் சாப்பிடாமலிருந்தாலும் சாப்பாட்டின் மேலேயே நினைவு இருந்து கொண்டிருக்கும். அது வெற்றி பெறும் உண்மை ஏகாதசி விரதம் ஆகாது.*

*நீர் வானம் மண் எரி கால்—பஞ்ச பூதங்களுக்குத் தக்க தமிழ்ச் சொற்கள் இவை அனைத்தும். இவற்றின் காரியங்களும் அதாவது பிரபஞ்சம் முழுதும் எம்பெருமானுடைய லீலா விபூதி.*

*நேமியான்—சக்கரத்தான், நாராயணன்.*

*தேவர்கள் அவனுடைய எண்ணிறந்த பெயர்களைப் பலவாறாகச் சொல்லி ஏத்துவார்கள்.*

*பிதற்றி—பக்தி பரவசத்தால் வரிசைக் கிரமத்தைக் கவனிக்காமல் சொல்லி ஏற்றுவது.*

* * *

*எம்பெருமான் என்னை ஆள்கின்றான் ஆனபடியால், வேறு ஒருவரால் எனக்கு என்ன ஆக வேண்டியது இருக்கிறது? என்று பாடுகிறார்.*

ஆள்கின்றான் ஆழியான் ஆரால்
குறைவு உடையம்?
மீள்கின்றது இல்லை பிறவித் துயர்
கடிந்தோம்;
வாள் கெண்டை ஒண்கண்
மடப்பின்னை – தன் கேள்வன்
தாள் கண்டுகொண்டு, என் தலை
மேல் புனைந்தேனே.

*வாள் கெண்டை ஒண் கண் மடம் பின்னை—வாளையும் கெண்டை மீனையும் போன்ற அழகிய கண்களையும் மடப்பம் என்கிற உயர்ந்த பெண் குணமும் உடைய நப்பின்னைப் பிராட்டி.*

நாகத்து அணையானை, நாள் தோறும்
ஞானத்தால்
ஆகத்து அணைபவர்க்கு அருள்
செய்யும் அம்மானை
மாகத்து இள மதியம் சேரும்
சடையானைப்
பாகத்து வைத்தான் – தம் பாதம்
பணிந்தேனே.

*நாகத்து அணை—ஆதிசேஷ சயனம். ஆகத்து அணைப்பார் - உள்ளத்தில்*

வைத்துத் தியானிப்பவர். மாகத்து இளமதியம் – ஆகாயத்தில் உள்ள பிறைசந்திரன்.

மகாவிஷ்ணு தன் வலப் பாகத்திலே சிவபெருமானை வைத்திருக்கிறான். அவன் பாதம் பணிந்தேன்.

தன் நெஞ்சுக்குச் சொல்லுகிறார் :

பணி நெஞ்சே ! நாளும் பரம
பரம்பரனை:
பிணி ஒன்றும் சாரா; பிறவி
கெடுத்து ஆளும் —
மணி நின்ற சோதி, மதுசூதன்
என் அம்மான்,
அணி நின்ற செம்பொன் அடல்
ஆழியானே.

நாளும் பரம பரம்பரனைப் பணி என்று ஓதுக.

நாளும் – எப்போதும்.

அப்படிப் பணிந்தால் ஒரு பிணியும் சாராது. பிறவித் துன்பம் கெடும்.

மணி நின்ற சோதி–நீல மணியை ஒத்த ஒளி உருவமான மதுசூதனன்.

அணி நின்ற செம்பொன் அடல் ஆழி – அழகு நிரந்தரமாக இருக்கும் சிவந்த பொன் மயமான சக்கரம், பகைவர்களை அழிக்கும் சக்கரம்.

கண்டேன் கமல மலர்ப்பாதம் :
காண்டலுமே,
விண்டே ஒழிந்த வினையாயின
எல்லாம்:
தொண்டே செய்து, என்றும்
தொழுது வழி யொழுக,
பண்டே பரமன் பணித்த
பணி வகையே.

திருவடிகளைக் கண்டேன். கண்ட அளவிலே வினைகள் எல்லாம் விட்டு நீங்கின என்கிறார். எப்பொழுதும் தொழுது கைங்கரியங்களைச் செய்து இதாசாரியன் பணித்த அந்த மார்க்கத்தையே பின்பற்றி நின்றபடியால் திருவடிகளைக் கண்டேன் என்கிறார்

பண்டே பரமன் பணித்த பணி வகை–ஸ்ரீகிருஷ்ணன் பகவத்கீதையில் "மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்று கூறியபடி. "என்னை பற்றிக் கொண்டு அது ஒன்றே புகலிடம் என்று இரு" என்று கண்ணன் கீதை உபதேசத்தை முடித்தான்.

பண்டே–பாரதப் போர்க்காலம்.

இதையே இன்னும் சொல்லுகிறார்.

வகையால் மனம் ஒன்றி, மாதவனை
நாளும்,
புகையால், விளக்கால், புது
மலரால், நீரால்,
திசைதோறு அமரர்கள் சென்று,
இறைஞ்ச நின்ற
தகையான சரணம் தமர்கட்கு
ஓர் பற்றே.

சாத்திரங்களில் சொல்லியிருக்கிறபடி மனத்தை ஒருமைப்படுத்தி மாதவனைக் காலவரையறை இல்லாமலே, ஆராதிப்பதற்குரிய பொருள்களுக்கும் வரையறை இன்றியே கிடைத்த பொருளைக் கொண்டு ஆராதித்து எம்பெருமானுடைய சரணங்களைப் பற்றுங்கள் என்கிறார்.

ஓர் பற்று– இப்படிப் பற்றிப் பணிந்தால் அவன் திருவடியானது ஒப்பற்றதும் வேறு எதும் வேண்டாததுமான பற்றாகும்.

★

"குடியிருக்கச் சிறிய போர்ஷன் தேவை. அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் தினம் ஒரு நகையும், புதுப் புடவையும் வாங்காதவர்களாக இருக்க வேண்டும்!"

★






★

ரோடில் பிளேடு விற்பவரிடம் ஒருவர் குனிந்து ஒரு பிளேடை வாங்கினார். 'இப்பொழுது ஒரு பிளேடு வாங்கினீர்கள். மீண்டும் என்னிடம் பத்து பிளேடு வாங்க ஓடிவருவீர்கள்' என்றார் விற்பவர்.

'ஒரு சவரத்தை முடிப்பதற்கே பத்து பிளேடா தேவைப்படும்?' என்றார் வாங்கியவர்!

★

★

"என்ன சார் நீங்களே சமையல் பண்ணறீங்க? சமையற்காரி வைச்சிருந்தீங்களே!"

"அவளைத்தான் கலியாணம் பண்ணிகிட்டேனே!"

★



# அன்பு ஒன்றே எல்லா மதத்தின் அடிப்படை









# அப்படி இருக்க மனிதனுக்கு மனிதன் வேற்றுமை ஏது?













**தமிழ் நாடு ஹரிஜன சேவக சங்கம்**
சென்னை-6

# கதம்பக் கனிமலர்கள்



## சொல்லிக் காட்டினார்!

அக்காலத்துச் சேது நாட்டின் தலை நகரான இராமநாதபுரத்தில் ஆதி சரவணப் பெருமாள் கவிராயர் என்று ஒரு கவிஞர் இருந்தார். அவர் படிப்பைப் போலவே தன்மானமும் மிகுந்தவர். அட்டாவதானி என்ற சிறப்பும் பெற்றிருந்தவர். எந்த இடத்திலாவது தம் தகுதி குறைவாக மதிப்பிடப் பெற்றுத் தாம் கீழான முறையில் நடத்தப் பெறுவதை உணர்ந்தால் அங்கே அவருடைய உள்ளம் குமுறும். தாம் குறைவாக நடத்தப்பட்டதைத் தம்மைக் குறைவாக நடத்தியவர்களுக்குச் சொல்லிக் காட்டிவிட நாத்துடிக்கும். அஞ்சாமல் முகத்தில் அறைந்தாற்போல் சொல்லிக் காட்டி விட்டுத்தான் திரும்புவார்.

ஒரு சமயம் மலையாள தேசத்தின் கோநகரமாகிய திருவனந்தபுரத்துக்குப் போயிருந்தார் ஆதிசரவணப்பெருமாள் கவிராயர். அக்காலத்துத் திருவனந்தபுரம் பகுதியில் யாவருக்கும் தமிழ் மொழி நன்கு தெரிந்திருந்தது. தமிழ்க் கவிகளைப் புரிந்து கொள்கிற அளவு தமிழுணர்ச்சி இருந்தது. அப்போது அரசராக இருந்த வீரகேரள மன்னரை ஆதிசரவணப் பெருமாள் கவிராயருக்கு நன்கு தெரியும். அந்த மன்னர் சிறிது காலத்துக்கு முன் இராமேசுவரத்துக்குச் சேது தரிசன யாத்திரை வந்திருந்தார். அந்தக் காலத்தில் எப்பேர்ப்பட்ட பெரு மன்னராயினும் சேது தரிசன யாத்திரை முடிந்து திரும்பும்போது சேதுபதி மன்னரைச் சந்தித்து வணங்கி அளவளாவி விட்டுப் போக வேண்டும் என்பது ஐதீகமாக இருந்தது. சேதுகாவலர் என்ற புனிதப் பெயர் சேதுபதிகளுக்கிருந்தது.

எனவே சேது யாத்திரை வந்திருந்த வீரகேரள மன்னர் தமது யாத்திரையை முடித்துக் கொண்டு சேதுபதியைச் சந்திப்பதற்காக இராமநாதபுரத்து அரண்மனைக்கு வந்தார். அப்போது சேதுபதி இராசராசேசுவரி பூசைக்காக ஏழுநாள் வெளிவராமல் மௌன விரதமும், பிற நோன்புகளும் பூண்டு உள்ளேயே இருந்ததன் காரணமாக மலை நாட்டு வீரகேரள மன்னர் ஏழுநாட்கள் இராமநாதபுரத்தில் காத்துக் கிடக்க வேண்டியதாயிருந்தது. மலையாள தேசத்துக்கே அரசனான அந்த மாமன்னன் சேதுபதி அரண்மனை வாயிலில் ஏழுநாள் தரிசனத்துக்குக் காத்திருந்த செய்தி ஆதி சரவணப் பெருமாள் கவிராயருக்குத் தெரியும். ஒவ்வொரு தினமும் தாம் புலவர் என்னும் உரிமையுடனே அரண்மனைக்குள் நுழையும்போது வாயிலில் காத்து நிற்கும் வீரகேரள மன்னனைப் பரிதாபத்தோடு பார்த்துக் கொண்டே நுழைந்திருக்கிறார் கவிராயர். கடைசியில் எட்டாவது நாள் வீரகேரள மன்னன் சேதுபதியைச் சந்தித்து அளவளாவி விட்டுத் தன் நாடு திரும்பினான்.

---

சென்னை மயிலாப்பூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் சென்ற மாதம் ரஸிக ரஞ்சனி சபை மண்டபத்தில் 'பக்த ராமதாஸ்' நாடகத்தை நடித்துச் சபையோரைப் பிரமிக்க வைத்தனர். ராமதாஸாக நடித்த மாணவன் கல்யாணத்தின் உருக்கமான பேச்சும் திறமையான நடிப்பும் சபையோரின் கவனத்தைக் கவர்ந்தன. இந்த நாடகத்தில் வசூலான தொகை ஒரு நல்ல காரியத்துக்கு, ஏழை மாணவர்களின் மதிய உணவுக்குச் செல்கிறது என்பது பாராட்டப்பட வேண்டிய செயலாகும்.







தருமபுரத்தில் மார்ச் 12-ந் தேதி கயிலை மகாசந்நிதானத்துக்குத் திருப்பனந்தாள் காசி மடத்தின் அதிபர் காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் கனகாபிஷேகம் செய்வித்தார். இந்திய சர்க்கார் போக்குவரத்து இலாகா மந்திரி டாக்டர் பி. சுப்பராயன் சிறப்புக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். கனகாபிஷேகக் காட்சியைக் காண மக்கள் திரளாக வந்து குழுமியிருந்தனர்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அந்த வீரகேரள மன்னனுடைய திருவனந்தபுரத்துக்குத்தான் இப்போது நம் கவிராயர் வந்திருக்கிறார். ஊரெல்லாம் சுற்றிப் பார்த்தார். அநந்தபத்மநாப சுவாமி கோவிலுக்குப் போய்த் தரிசனம் செய்தார். கடைசியாக அரண்மனைக்குப் போய் வீரகேரள மன்னனையும் பார்த்து வரலாம் என்று கிளம்பினார். புலவர்கள் வந்து பார்க்கும் போது அந்தப் புலமையை மதித்து ஏதாவது மரியாதை செய்வது அரசர்கள் வழக்கம். அதனால் புலவர்கள் தயக்கமோ, கூச்சமோ இல்லாமல் எத்தனை பெரிய நிலையில் உள்ளவர்களையும் சந்திக்கக் கிளம்பி விடுவது இயல்பாக இருந்தது. ஆனால் அன்று ஆதிசரவணப் பெருமாள் கவிராயர் வீரகேரள மன்னனைச் சந்திக்கப்போன வேளை சரியாக இல்லை. அரசன் ஏதோ கோபமாக இருந்தான். என்னதான் கோபமாக இருந்தாலும், வந்தவர்களை முகம் மலர வரவேற்பது தான் பண்புக்கு அழகு. ஆனால் அவன் பண்பைப் பற்றி அதிகமாகக் கவலைப் படவில்லை!

"யாரையா நீர்? உமக்கு எந்த ஊர்? இங்கு எதற்காக வந்தீர்? என்ன வேணுமென்று சொல்லித் தொலையும்" என்று துரத்தியடிக்கிற வேகத்தோடு விசாரித்தான் வீரகேரள மன்னன். புலவருக்கு முகம் சுருங்கிச் சிறுத்தது. மனத்தில் ஆத்திரம் எழுந்தது. 'இரு! இரு! உன்னைச் சரியானபடி மடக்கித் தலை குனியப் பண்ணுகிறேன்' என்று மனத்துக்குள் கறுவிக் கொண்டு அவன் முகத்தை நிமிர்ந்து பார்த்தார்.

"பதில் சொல்லுமேன் ஐயா! வாயில் கொழுக்கட்டையா அடைத்திருக்கிறது? உமக்கு எந்த ஊர்?"

"என் ஊரையா கேட்கிறீர்கள்? சொன்னால் வருத்தப்படக் கூடாது. உள்ளபடியே சொல்கிறேன். முன்பொரு நாள் நீங்கள் சேதுபதியின் தரிசனத்துக்காக ஏழுநாட்கள் அநாதை போல் வாயிலில் காத்துக் கிடந்தீர்களே அந்த இராமநாதபுரத்து வித்துவான் யான்" என்று கோபத்தோடு சொல்லிக் காட்டுவது போல் கடுமையான கருத்துப்படத் தொடங்கிய புலவர் பாடலின் பிற்பகுதியில் சிறிது புகழ்ச்சியையும் சேர்த்துக் கொண்டு விட்டார். முன்னோர் புகழை அவன்மேற் சுமத்தப் பாடுகிறார்.

**இலைநாட்டு வேல்காத்தூர்ச் சேதுபதி**
**தரிசனத்துக்கு ஏழுநாள் ஓர்**
**மலைநாட்டு ராசன்வந்து காத்திருந்த**
**வாசல் வித்துவான் யான்கண்டாய்**
**கலைநாட்டிற் பெண்ணெனவே செய்தநா**
**ளூசனைகள் கன்னிக் காகச்**
**சிலைநாட்டி வளைத்தபுய வீரகேரளமா**
**செயசிங்கேறே!**

திட்டுவதைக்கூட எத்தனை அழகாகத் திட்டியிருக்கிறார்கள் இந்தத் தமிழ்ப் புலவர்கள்? புலமை என்கிற பலம் எவ்வளவு நயமாக இடித்துச் சொல்லிக் காட்டும் உரிமையைத் தந்திருக்கிறது. பார்த்தீர்களா?

— வளவன்

# கல்கி

## புத்தாண்டு மலர்



வருகிற பிலவ வருஷம் பலவிதங்களிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கப் போவதற்கான சூசகங்களையெல்லாம் இப்போதே கண்டு வருகிறோம்.

முடிவில்லாத வான வெளியிலேகூட எல்லைகள் வகுக்கும் நாள் அதிக தூரத்தில் இல்லை. 'ராக்கெட்டு'களில் மனிதன் வெகு சீக்கிரமே பிரயாணம் செய்யப் போகிறான். அந்த மகத்தான அதிசயம் நிகழப் போவது வருகிற புத்தாண்டில்தானோ என்னவோ?

உள் நாட்டை எடுத்துக் கொண்டாலோ தேர்தல் வருஷமாகத் திகழப் போகிறது பிலவ ஆண்டு. ஆளும் கட்சியினருக்கு எதிராக வோட்டுப் போட்டால் ராஜ விசுவாசமாகாது என்று எண்ணுமளவுக்குக் கன்னங்கபடமறியாது இருந்து வந்த மக்களுக்கு, ஜனநாயகத்தில் பற்றுதலையும் மனம் விட்டுப் பேசத் துணிச்சலையும் சுதந்திர உணர்ச்சியையும் ஊட்டி இருக்கிறது. புதியதொரு கட்சி. வருகிற ஆண்டில் நடைபெறவிருக்கும் தேர்தலில் முன் எப்போதையும்விட மக்கள் அதிகமான பரபரப்பும் துடிப்பும் ஆர்வமும் காட்டப் போகிறார்கள்.

இவையெல்லாம்விட உங்கள் அபிமானப் பத்திரிகையான 'கல்கி'க்கு இருபது வருஷங்கள் பூர்த்தியாகும் சுபதினமும் பிலவ ஆண்டிலேதான் அடங்கி யிருக்கிறது.

அரசியல், விஞ்ஞானம், கலை, இலக்கியம் முதலிய பல துறைகளில் நாளுக்கு நாள் முன்னேறிக் கொண்டிருக்கும் உலகிலே நாம்மட்டும் பின்தங்கி நிற்க முடியுமா, என்ன? அப்படிப் பின்தங்கி விடாதிருக்க நேயர்களுக்குத் துணை புரிவதிலே கல்கி பெருமையடைகிறது. பிலவ ஆண்டிலே இந்தப் பணியை மேலும் சிறப்பாகச் செய்ய உறுதி பூண்டிருக்கிறோம். பிரசித்தி பெறப் போகும் அந்தப் பிலவ ஆண்டுக்கு மன மகிழ்ச்சியோடு வரவேற்புக் கூறும் வகையிலே ஏப்ரல் 16உ 'கல்கி' இதழைப் புத்தாண்டு மலராக வெளியிடத் தீர்மானித்திருக்கிறோம்.

160 பக்கங்கள் கொண்ட இந்த மலர் ஏராளமான வர்ணப் படங்களுடனும் கதை, கட்டுரை, நாடகம், கவிதைகளுடனும் சிறப்புறத் திகழப் போகிறது. இந்த மலரிலே புதிய சமூகத் தொடர் கதை ஆரம்பமாகிறது. சுவையான குறுநாவலும் இடம் பெறுகிறது.

**160**
**பக்கங்கள்**
**30**
**காசு**

# வேடந்தாங்கல் வரவேற்கிறது!

பி. எஸ். மணி

மதுராந்தகம் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் விநோத வழக்கு ஒன்று வந்தது. காட்டிலாகா அதிகாரி ஒருவர் கையும் மெய்யுமாகக் குற்றவாளியைப் பிடித்து வந்து கூண்டில் நிறுத்தியிருந்தார். பெரிய திருட்டோ அல்லது கொலைக்குற்றமோ அந்தக் குற்றவாளி செய்திருந்தானா? இல்லை இல்லை. அவன் ஒரு கொக்கைச் சுட்டுக் கொன்றிருந்தான். இதற்குப் போய் வழக்கா என்று ஆச்சரியமாயிருக்கிறதா? உங்களைப் போலவே மாஜிஸ்திரேட்டும் வியப்புற்று, "என்ன ஸார், இது! கொக்கு சுட்டது பெரிய குற்றமா? வயிற்றுப் பசிக்காக ஒருவன் பறவையைச் சுட்டதில் என்ன தப்பு?" என்றார்.

அதற்கு அந்தக் காட்டிலாகா அதிகாரி, "நீதிபதி அவர்களே! இவன் வேடந்தாங்கல் பறவை சரணாலயத்தைச் சேர்ந்த பறவையொன்றைச் சுட்டுக் கொன்றிருக்கிறான். இந்தச் சரணாலயத்தைச் சேர்ந்த பறவைகளை அதற்கு இருபது மைல் சுற்றளவுக்குள் பிடிக்கவோ, சுடவோ கூடாதென்பதற்குச் சட்டமிருக்கிறது" என்று பதிலளித்தார்.

"இவ்வளவுதானே! கொக்கு சுட்டதைப் போய்ப் பிரமாதப்படுத்தாதீர்கள். அவனுக்கு ஒரு ரூபாய் அபராதம் விதிக்கிறேன்" என்று தீர்ப்பளித்து விட்டார் மாஜிஸ்திரேட்.

அந்தக் காட்டிலாகா அதிகாரிக்கு முகம் வாடிப் போய் விட்டது. 'ஒரு ரூபாய் அபராதம் கட்டி விட்டால் போகிறது. நாம் பறவைகளைத் தீர்த்துக் கட்டிவிடலாம்' என்று இதற்குப் பிறகு பலர் முன் வந்தால் என்ன செய்வது? வேடந்தாங்கல் பறவைச் சரணாலயமே அல்லவா பிறகு குட்டிச்சுவராகி விடும்? என்று எண்ணி வருத்தப்பட்டாராம் அந்தக் காட்டிலாகா அதிகாரி.

ஆனால் அவர் அப்படிக் கவலைப்பட வேண்டியதில்லை. சிபிச் சக்கரவர்த்தி 'அபயம்' என்று வந்த புறாவுக்கு அடைக்கலம் கொடுத்து, அதைக் காக்கத் தன் தசையையே அரிந்து கொடுத்துப் பெரும் புகழ் பெற்ற நாடாயிற்றே, நம் நாடு? பறவைகள் கூட்டம் கூட்டமாக வந்து வேடந்தாங்கல் சரணாலயத்தில் வாழ்வதற்கு, திரு வெங்கடசப்பா ரெட்டியார் எம். எல். ஏ.வும் அவர் குடும்பத்தினரும் அக்கறை எடுத்துக் கொண்டதும் காட்டிலாகா அதிகாரியின் கவலை பகலவனைக் கண்ட பனி போல் விலகியதில் வியப்பில்லை. இந்தச் சரணாலயத்துக்கு வரும் எத்தனையோ இடையூறுகளை நீக்குவதில் அவர்கள் தீவிரமாக இருந்து வருகின்றனர்.

பறவைப்பிரியர் ஒருவர் வேடந்தாங்கல் ஏரியின் நடுவே படகில் போய், அந்தப் பறவைகளின் அருகில் சென்று படம் பிடிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டாராம். பிறகு அதற்கு ஒரு பெரிய அதிகாரியின் சிபாரிசையும் பிடித்துக் கொண்டு வந்தாராம்.

"ஐயா! தயவுசெய்து அந்தக் காரியத்துக்கு மட்டும் எங்களால் அனுமதியளிக்க முடியாது. முதலில் படம் பிடிக்க வேண்டும் என்று படகில் போவீர்கள். மற்றும் சிலர் பறவைக் கூட்டத்தை ஆராய வேண்டும் என்று ஏரிக்குள் செல்வார்கள். பிறகு ஒட்டகத்துக்குக் கூடாரத்தில் இடம் கிடைத்த கதையாகி விடும். இந்த ஏரியில் வாழும் அத்தனை பட்சிகளும் பயத்தில் பறந்து போய் விடும். பிறகு எங்கள் கிராமத்துக்குள்ள பெருமையும் மதிப்புமே பஞ்சாய்ப் பறந்து போய் விடும்" என்று கூறிவிட்டாராம் திரு வெங்கடசப்பா ரெட்டியார்.

அதைக் கேட்டு அந்தப் பறவைப் பிரியர் சோர்ந்துபோய்விட்டார். அவரை உற்சாகப் படுத்தும்பொருட்டு அவருக்கு ஒரு கப் காப்பி கொண்டு வந்து கொடுக்கச் செய்தார் திரு வெங்கடசப்பா ரெட்டியார்.

"ஸார்! நீங்கள் என் கோரிக்கையை நிறைவேற்றுகிற வரையில் ஒரு துளி காப்பி அருந்த மாட்டேன்" என்று பிடிவாதமாக மறுத்து விட்டார் அந்தப் பறவைப் பிரியர்.

"காப்பி சாப்பிடாவிட்டாலும் பரவாயில்லை. உங்கள் கோரிக்கையை நிறைவேற்றுவதற்கில்லை" என்று கூறியனுப்பி விட்டார் திரு வெங்கடசப்பா ரெட்டியார்.

அந்தப் பறவைப் பிரியர் தளர்ச்சியோடு திரும்பிப் போய் விட்டார். வேடந்தாங்கல் ஏரியி லுள்ள ஐந்நூற்று ஐம்பது கடப்ப மரங்களில் வாழும் பறவை இனங்கள் அவற்றின் குஞ்சுகளோடு நடத்தும் சர்வ சுதந்திர வாழ்க்கையை நேரில் சென்று கண்டால்தான் இரு ரெட்டியாரின் பிடிவாதம் எவ் வளவு நியாயமானது எனத் தெரியும். பத்திரிகைப் பிரதி நிதிகளுக்கு இந்த வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தவர்கள் சென்னை ராஜ்ய காட்டிலாகா அதிகாரி ஜஹுப் பாட்சா அவர் களும் சென்னை சர்க்கார் செய்தி விளம்பர இலாகாவினரும்.



சென்னையில் நடைபெற்ற அகில இந்திய தொழில், வர்த்தகக் கண்காட்சியில் முதன்மையான ஸ்டால் என்று பாராட்டுப்பெற்ற ஹிந்துஸ்தான் லீவர் ஸ்தாபனத்தின் வர்த்தக மானேஜர் திரு எம். எம். மேனன் முதல் மந்திரியிடமிருந்து பரிசு பெறுகிறார்.

பத்திரிகைப் பிரதிநிதிகள் அனைவரையும் ஒரு விசேஷ பஸ் ஸில் அழைத்துச் சென்று விதம் விதமான பட்சி ஜாலங்களைப் பற்றியும் அவற்றின் வாழ்வு முறைகளைப் பற்றியும் விவர மாக எடுத்துச் சொன்னார் ஜஹுப் பாட்சா. உற்சாக புருஷர் இவர். பறவைகள் வாழ்க்கை முறையைப் பற்றி ஆராய்ந்தறிவதில் ஆர்வம் மிக்கவர். கனடா முதலிய அயல்நாடுகளுக்குச் சென்று அங்கு பறவைகளைப் பேணும் முறைகளையெல்லாம் அறிந்து வந்தவர். இந்த வேடந்தாங்கல் பறவை சரணாலயத்திலேயே கடப்ப மரத் தோடு மரமாக நின்று, தலையில் மரக்கிளை களைக் கட்டிக் கொண்டு ஊர்ந்து சென்று, பறவைகளின் இயல்புகளையெல்லாம் அருகில் இருந்து கண்டறிந்தவர். அவர் பட்சி வினோ தங்களை விவரிப்பதே தனி அழகு.

"மனித உலகில் ஒருவருக்கொருவர் அடித் துக் கொள்வதைப் பார்க்கிறோம். ஆனால் இந்தப் பறவைகள் ஒரு இடத்தில் குடியேறி நெரிசல் ஏற்பட்டுவிட்டால் தங்களுக்குள் சண்டையிடாமல் சமாதானமாய் வேறொரு மரத்துக்குச் சென்றுவிடுகின்றன. ஆசியா, சைபீரியா முதலிய நாடுகளிலிருந்து கூட இங்கே பல பறவைகள் வருகின்றன. கிளுவை (Garganey), Tufted ducks, Pintail ஆகிய அயல்நாட்டுப் பறவைகள் இங்கே தனித்து ஏரியில் வாழுகின்றன. இவை தவிர கடப்ப மரங்களில் குடும்பம் குடும்பமாக வாழும் பறவைகளையும் நீங்கள் பார்க்கலாம். நீர்க்காக்கை, நாரை, நாராயண பட்சி, நத்தைக்கொத்தி, அருவாமூக்கு, மம்மட்டி வாய், பாம்புத் தாரா, உன்னி கொக்கு, வக்கா இன்னும் பலப்பல. இவை தவிர அபூர்வ விருந்தாளிகளும் உண்டு. Painted stork Grey Pelicans போன்ற பறவைகள்!"

"ஆமாம், இத்தனை பறவைகளும் ஏன் இந்தக் கடப்ப மரங்களிலேயே வசிக்கின்றன? அவை இந்த இடத்தையே விசேஷமாகத் தேர்ந்தெடுப்பானேன்?"

"பெண்களுக்குப் பிறந்தகம் எவ்வளவு பிடித்தமோ அதுமாதிரி இந்தப் பறவைகளுக்கு இந்த இருப்பிடமும் உணவும் பிடித்துவிட் டன. மேலும் சுற்றிலும் நீர்ப்பரப்பு. ஆகவே விரோதிகள் அண்ட முடியாது. இதுவே அவற்றுக்குத் தாயகமாக அமைந்து விட்டதில் வியப்பில்லையே?"

இதைக் கேட்டுப் பலமாகக் கையைத் தட்டினார் பத்திரிகை நிருபர் ஒருவர். உடனே பல பறவைகள் இறகடித்துப் பறந்தன.

"ஸார் கையைத் தட்டாதீர்கள். பற வைகள் பயந்து போய்விடும்" என்று கூறி விட்டு அருகிலிருந்த காவலாளரிடம், "ஆமாம்! 'கையைத் தட்டக்கூடாது' என்று போர்டு இருந்ததே. அது எங்கே?" என்று கேட்டார் ஜஹுப் பாட்சா.

"ஸார்! அந்தப் பலகை காற்றில் விழுந்து விட்டது" என்றார் காவலாளர்.

"ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. அந்தப் போர்டு இல்லாமலிருப்பதே உத்தமம். 'கையைத் தட்டக் கூடாது' என்று போட் டிருந்தால், 'அப்படிச் செய்தால் என்ன நேரிடும்?' என்று பரிசோதித்துப் பார்க்கப் பலர் முன்வந்து அதனாலேயே சத்தம் பலமாகி விடும்; பிறகு பறவைகளும் பறந்துவிடும்!" என்றார் பத்திரிகை நிருபர் ஒருவர்.

இந்தச் சமயத்தில் சூரியன் மலைவாயில் விழும் வேளை. பறவைகள் அந்நேரம் முதலில் உணவு தேடச் சேர்ந்து போய்விட்டு, மாலையில் திரும்பும்பொழுது தனித்தனிக் கூட்டமாக வந்து ஏரியில் இறங்கும் காட்சி கண்படைத்தோர் காண வேண்டியதோர் அற்புதக் காட்சி. சென்னையிலிருந்து ஐம்பத் தொரு மைல்கள் தூரத்தில் இந்த அரியகாட்சி அமைந்திருக்கிறது. செங்கல்பட்டிலிருந்து ஐந்து தடவைகள் வேடந்தாங்கலுக்கு பஸ் போய் வருகிறது. இயற்கை அன்னையின் எழில் மிக்க கோலத்தைக் காண விரும்புவோர் விடுமுறை தினங்களில் சென்று காண வேண்டிய ரஞ்சகமான இடம் வேடந்தாங்கல்.

# பாவம் பேதை

**— சரஸன் —**

''வேதவல்லி! உனக்கு அப்படி என்ன வயதாகி விட்டது? இருபத்து நான்கு தானே? இது ஒரு வயதா? நாற்பது வயதைக் கடந்த பெண்மணிகள் முதல் முதலாய்ப் பிள்ளைப்பேறு பெறுவதில்லையா? ஏன் ஏங்கித் தவிக்கிறாய்?'' என்று நான் பல தடவைகள் வேதவல்லிக்குச் சமாதானம் கூறியதுண்டு. இன்று அல்ல, சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்.

நானும் வேதவல்லியும் ஏறக்குறைய இருபத்தாறு வயதுடையவர்கள்தான். அப்போது நான் திருவண்ணாமலையிலே இருந்தேன். என் கணவருக்கு அங்கு அலுவல் இருந்தது.

நாங்கள் குடியிருந்த வீட்டின் சொந்தக்காரர் கிருஷ்ணசாமி என்ற ஓர் உத்தமர். ஆம். அவரை உத்தமர் என்று காரணமாய்த்தான் குறிப்பிட்டேன். சொந்தக் குழந்தைகளுடன் கொஞ்சிப் பழகும் அனுபவமில்லாதவர். குழந்தைகளுடன் கூடிய பிறரை ஓர் அருவைக் கண்கொண்டு பார்ப்பதுதானே சாதாரணமாய் நடைமுறையிலே காணும் அனுபவம்? எங்களுக்கோ மூன்று குழந்தைகள், நான்காவதைச் சுமந்து கொண்டிருந்தேன். அப்போது கிருஷ்ணசாமி என்பவரின் வீட்டிலே இடம் காலி என்று கேள்விப்பட்டேன். ஆனால் அவர் மக்கட்பேறு அற்றவர் என்று கேட்டதும், எனக்கு அங்கு இடம் கிடைக்கும் என்ற நம்பிக்கை போய்விட்டது.

என் கணவர் தான், ''ஏன் விபரீதமாய்க் கற்பனை செய்து கொள்கிறாய்? 'நமக்குக் குழந்தைகள் இல்லா விட்டாலும், குடிவரும் பேர்களுக்காவது குழந்தைகள் இருக்கின்றனவே! அந்தக் குழந்தைகளையாவது பார்த்து மகிழ்வோமே' என்று அவர்கள் ஏன் நினைப்பவர்களாய் இருக்கக் கூடாது?'' என்று நம்பிக்கையுடன் கூறினார்.

கடைசியில் என் கணவரின் கூற்றுத்தான் மெய்யாயிற்று. ஆம்! கிருஷ்ணசாமி மட்டுமல்ல, அவருடைய மனைவி வேதவல்லியும் கூட, எங்கள் குழந்தைகளைப் பரிவோடு கொண்டாடினர்.

ஒருசமயம் வேதவல்லி, தன் கணவனுடன் செஞ்சியில் உள்ள தன் சிநேகிதியின் வீட்டுக் கல்யாணத்துக்குச் சென்றாள். அந்தச் சிநேகிதி சுமார் நான்கு வருஷங்களுக்கு முன்பு, திருவண்ணாமலையிலே வேதவல்லியின் வீட்டிலே குடியிருந்தாளாம். பிறகு எங்கோ வடக்கே தொலை தூரத்துக்கு அவர்களை மாற்றி விட்டார்களாம். மீபத்திலேதான், மீண்டும் அவர்கள் இந்தப்பக்கம் வந்திருக்கிறார்களாம். காமாட்சி என்ற அந்தச் சிநேகிதி, நான்கு வருஷங்களுக்கு முன்பு, வேதவல்லியின் வீட்டைக் காலி செய்து கொண்டு புறப்பட்ட சமயம், ''வேதவல்லி! அடுத்த தடவை நான் இந்தப் பக்கம் வர நேர்ந்தால், நீ குழந்தையும் கையுமாய் எனக்குத் தோற்றமளிக்க வேண்டும். தெரிகிறதா?'' என்று விஷமமாய் நகைத்துக் கொண்டே கூறிவிட்டுச் சென்றாளாம்.

செஞ்சிக்குப் புறப்பட்ட வேதவல்லி என்னிடம் ஒன்று யாசித்தாள். ''பத்மா! கேட்க வெட்கமாய்க்கூட இருக்கிறது. என் தோழி காமாட்சியின் வீட்டுக்கு வெறுங் கையுடன் நான் எப்படிப் போவேன்? உன் மூன்று வயதுக் குழந்தை ரமேஷை நான் எடுத்துக் கொண்டு போகட்டுமா?''

''வேதவல்லி! இதற்கு ஏன் வருத்தப் படுகிறாய்? காலம் கடந்து பேறு பெறுபவர்கள் ஏராளமான பேர்கள் உண்டு. நீ ஒன்றும் மனத்தை அலட்டிக் கொள்ளாதே. குழந்தை ரமேஷை 'ஜாம் ஜாம்' என்று எடுத்துக்கொண்டு போ'' என்று கூறி ஆவலுடன் ரமேஷை அனுப்பி வைத்தேன்.

எனக்கு உள்ளூறப் பெருமைதான். மக்கட்பேறு இல்லாத என் தோழிக்கு அதைப் பெற்று விட்ட





"எதற்கடா கையில் விசிறிக் கட்டையை எடுத்துக் கொண்டு போறே?"

"அப்பாவிடம் என் 'பிராக்ரஸ் ரிப்போர்ட்டை'க் காட்டப் போகிறேன். பார்த்துவிட்டு என்னை அடிப்பதற்குப் பக்கத்தில் ஒன்றுமில்லையென்றால் அவருக்குக் கோபம் அதிகரித்துவிடும். அதற்காக விசிறிக் கட்டையை அவரிடம் கொடுத்துச் சாந்தப்படுத்தப் போகிறேன்!"

கௌரவத்தை அளித்து, அவனுடைய மானத்தைக் காப்பது என்பது சாமான்யமான விஷயமா, என்ன?

எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாகவே வேதவல்லி செஞ்சியிலிருந்து குழந்தையுடன் திரும்பி விட்டாள்.

வந்ததும் வராததுமாய் வேதவல்லி, குழந்தை ரமேஷை என் வீட்டில் விட்டுவிட்டு, எனக்கு ஒரு நன்றிச்சொல் கூட வழங்காமல், தன் அறைக்குள் நுழைந்து விட்டாள். அவள் முகம் கலங்கியிருந்தது. வேதனையை அனுபவித்ததன் குறியைக் காட்டும் பராமீட்டராய்க் காட்சி தந்தது அவள் முகம்.

நான் திகைத்து விட்டேன். ஒன்றும் புரியவில்லை. ஒருவேளை ரமேஷ் ஏதாவது அவளைப் பாடாய்ப்படுத்தி விட்டானா? அப்படிச் செய்திருக்க மாட்டானே! அவளிடம் அவனுக்கு உயிர் ஆயிற்றே! எல்லாம் ஒரே புதிராய் அல்லவா இருக்கிறது?

அவளாகச் சொல்லவில்லையெனில் சற்றுப் பொறுத்து வேதவல்லியையே கேட்போம் என்று எண்ணிச் சும்மா இருந்தேன்.

சுமார் ஒருமணி நேரம் சென்றும், வேதவல்லியைக் காணவில்லை. என் துடிப்பு அதிகரித்ததை உணர்ந்தேன். சமையலறைக்குள் எட்டிப் பார்த்தேன். ஏதோ வேலை செய்து கொண்டிருந்த வேதவல்லி என்னைக் கண்டு விட்டாள்.

"வா பத்மா! என் செய்கை உனக்குப் புதிராய் இருந்திருக்கக் கூடும்! என் போலிக் கௌரவத்துக்குப் போன இடத்திலே பங்கம் வந்து விட்டது" என்று கூறி நிறுத்திய வேதவல்லியை நான் வியப்புடன் நோக்கினேன்.

"உனக்கு எப்படிப்பத்மா விளங்கும்? விவரமாய்ச் சொன்னால்தானே புரியும்? ரமேஷை என் சொந்தக் குழந்தை என்று கூறி, என் தோழி காமாட்சியின் மதிப்பையும் பாராட்டையும் பெற்றுவிட்டேன். நான் பெற்ற பாராட்டும் அடைந்த மகிழ்ச்சியும் சுமார் ஒருமணி நேரம்கூட நீடிக்கவில்லையடி! உன் மைத்துனர் ராமசாமியும் காமாட்சியின் வீட்டுக் கல்யாணத்துக்கு வந்திருந்தார். அவரும் காமாட்சியின் கணவரும் நெருங்கிய நண்பர்களாம். அதை நான் என்ன கண்டேன்? உன் மைத்துனரைக் கண்ட ரமேஷ் 'சித்தப்பா' என்று அவரிடம் ஓடி விட்டான். இதைக் கவனித்த காமாட்சி என்னையும் ரமேஷையும் உன் மைத்துனரையும் மாறி மாறி நோக்கினாள். ஐயோ, பத்மா! நான் அந்தச் சமயம் அடைந்த அவமானத்தை எப்படி விவரிப்பேன்? என் தோழியை நேருக்கு நேர் நோக்கும் திராணியே இல்லாமல், வெறிகொண்டவன் போல், கல்யாண வீட்டிலிருந்து வெளியேறிவிட்டேன். போலிக் கௌரவம் பெறக்கூட நான் பாக்கியம் செய்திருக்கவில்லையடி!" என்று கூறிவிட்டு, முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விம்மினாள் வேதவல்லி.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, வேதவல்லி என்னைச் சந்திக்கக் கூட ஏனோ கூசினாள்! என் பொருளை அவள் அபகரித்து விட்டது போலவும், கையும் களவுமாய் என்னிடம் பிடிபட்டுவிட்டதைப்போலவும், அதன் காரணமாய் என்னைக் காணவே அவளுக்கு முகம் இல்லை போலவும் அவள் கருதுவதாய் நான் நினைத்தேன். அவளுடைய ஒவ்வொரு செயலும் என்னை அவ்வாறு எண்ணுமாறு தூண்டின.

பல சமயங்களில் நான் அவளுக்கு ஏற்பட்டிருந்த தாழ்வு மனப்பான்மையைப் போக்க வேண்டும் என்று விரும்பியதுண்டு. ஆனால் அவள் அதற்கு இடம் தந்தால் அல்லவா சாத்தியம்? அவள்தான் சில தினங்களுக்குப் பிறகு, அவர்களுடைய பகுதியையும் வேறொருவருக்குக் குடிக்கூலிக்கு விட்டு விட்டுத் தன் கணவருடன் கிராமத்துக்குச் சென்று விட்டாளே!

சுமார் ஒன்றரை ஆண்டுகள் சகோதரிகளைப் போலப் பழகிய எங்களுக்குப் பிரிவு ஏற்பட்டதும் எனக்கு அதைச் சகித்துக் கொள்ளும் சக்தி உடனே ஏற்படவில்லை. நல்ல வேளை! என் கணவரை மதுரைக்கு மாற்றினர்.

சுமார் பதினைந்து வருடங்கள் மதுரை மாவட்டத்திலே பலப் பல ஊர்களிலே நாங்கள் 'டேரா' போட்ட காரணத்தால் என் மனத்தை விட்டுத் துப்புரவாய் அகன்றது வேதவல்லியைப் பற்றிய நினைவு.

இந்தப் பதினைந்து ஆண்டுகளாக, என் குடும்பத்திலே பல நிகழ்ச்சிகள் — எல்லாம் மங்களமானவைதான் — நடந்தேறி விட்டன. என் பெரிய பெண் விமலாவின் திருமணமும் அதைத் தொடர்ந்து பல நிகழ்ச்சிகளும் நடந்தன. என் மூத்த பையன் கிட்டு, கல்லூரிப் படிப்பு முடிந்து மத்திய சர்க்கார் அலுவலகம் ஒன்றிலே வேலையை ஒப்புக்கொண்டுவிட்டான் சென்னையிலே. அவனுக்கும் திருமணத்துக்குப் பெண்கள் வரத்தான் செய்கின்றன.



**கிழவர்:** (ஐந்து வயதுப் பையனிடம்) ஏண்டா, பையா! நீ பள்ளிக்கூடம் போகல்லே?

**பையன்:** போங்கோ, தாத்தா! எனக்கு எழுதவும் தெரியாது, படிக்கவும் தெரியாது! பள்ளிக்கூடம் போய் நான் என்ன பண்ணறது?

என் அண்ணா தன் ஆபீஸிலே அவனுடன் வேலை செய்யும் உத்தியோகஸ்தரின் ஒரே பெண்ணைக் கிட்டுவுக்கு முடித்துவிடத் துடிக்கிறான். என்னை நேரில் புறப்பட்டுச் சென்னைக்கு வரச் சொல்லிக் கடிதம் எழுதியிருக்கிறான் அண்ணா.

'நல்ல இடமாய் இருந்துவிட்டால், விட்டுவிடுவானேன்?' என்று எண்ணிய நான் சென்னைக்குப் புறப்பட்டேன்.

சென்னையை அடைந்த நான் என் அண்ணனுடன் அவன் குறிப்பிட்ட பெண்ணைப் போய்ப் பார்த்தேன். பெண் திருப்திகரமாய்த்தான் காணப்பட்டாள். பிறகு கிட்டுவை மெல்லத் 'தாஜா' செய்து அழைத்துக் கொண்டு போனோம், பெண் பார்க்க. பெண் அவனுக்குப் பிடித்துவிட்டது. விரைவில் முகூர்த்தமும் ஏற்பாடு செய்யப்பட்டு விட்டது. மதுரை மாவட்டத்திலிருந்த என் கணவரும், பிள்ளை ரமேஷும், கடைக்குட்டி பானுவும் சென்னை வந்து சேர்ந்தார்கள். கிட்டுவின் திருமணம் எங்கள் எல்லோருடைய விருப்பத்தின்படியே வெகு சிறப்பாக நடைபெற்றது.

இந்தக் கல்யாணத்திலே ஒரு முக்கியமான விசேஷம் என்னவெனில், எந்த வேதவல்லியை இந்தப் பதினைந்து வருடகாலமாக மறந்து விட்டிருந்தேனோ, அவளைச் சற்றும் எதிர்பாராதவண்ணம் சந்திக்க நேரிட்டதுதான். பெண் வீட்டாரின் கூட்டத்திலேயே அவளைக் கண்டேன். என்னைக் கண்ட வேதவல்லி ஆனந்தத்தால் துள்ளிக் குதித்தாள். ஆனால் அவளுடன் அதிகம் பேச முடியவில்லை. யாரோ அவளை அவசரமாக அழைக்கவே அவள் போய் விட்டாள். அப்புறம் அவளைப் பார்க்கவே முடியவில்லை.

கல்யாணத்தன்று மாலை. பிள்ளைவீட்டார் இறங்கியுள்ள ஜாகையிலே நான் என் இளைய பெண்ணுக்குத் தலைவாரிப் பின்னல் போட்டுக் கொண்டிருந்த சமயம், "பத்மா!" என்ற குரல் கேட்டுத் திரும்பினேன். என் கணவர் நின்று கொண்டிருந்தார்.

"ஏன் கூப்பிட்டீர்கள்?"

"அதோ கல்யாணவீட்டு மாடியிலே பார்!"

"என்ன அங்கே?"

"உன் திருவண்ணாமலைத் தோழி வேதவல்லி, இடுப்பிலே மூன்றுவயதுப் பெண் குழந்தையுடன் கொஞ்சுகிறாளே, தெரியவில்லையா, பத்மா?"

உற்றுக் கவனித்தேன். ஆம்! வேதவல்லி குழந்தையை மறந்து கொஞ்சிக் கொண்டிருந்தாள். என் உள்ளத்திலே ஒரு கிளு கிளுப்பு! நான் அன்று காலை வேதவல்லியைக் கேட்க விரும்பிய கேள்விக்கு விடை இதோ என் கண் எதிரில் கிடைத்துக்கொண்டிருக்கிறது. ஏன் இராது? கடைசியிலே ஆண்டவன் வேதவல்லியின் விஷயத்திலே அருள் சுரந்து விட்டான் போலும்!

என் பெண்ணுக்குப் போட்டுக் கொண்டிருந்த பின்னலைப் பாதியிலே நிறுத்திவிட்டு என் வீட்டுக்கு ஓடினேன். படிகள் அதிரும் வண்ணம் மாடியிலே ஏறி, வேதவல்லியிடம் நெருங்கினேன்.

"வேதவல்லி! வேதவல்லி! என் வயிற்றிலே பால் வார்க்கும் செய்தியைச் சொல்லடி! இந்தக் குழந்தை உன்னுடையதுதானே? கடைசியிலே தெய்வம் உன் விஷயத்திலே கண் திறந்து பார்த்து விட்டதா?" என்று கூவியவாறு, குழந்தையை அவளிடமிருந்து பலவந்தமாய்ப் பிடுங்கி அதன் கன்னத்திலே முத்தமாரி வழங்கினேன். திடுமென்று பிரவேசித்த என்னையும், என் செயலையும் சற்றும் எதிர்பாராத வேதவல்லி, நிலை தடுமாறி விட்டாலும், அடுத்துத் தன்னைச் சமாளித்துக் கொண்டவளாய், "பத்மா! அந்தப் பாக்கியம் நான் எங்கேயடி செய்தேன்? இது என் ஒன்றுவிட்ட தங்கையின் குழந்தை. திடீரென்று என் தங்கை இதை விட்டு விட்டு மூன்றே நாள் காய்ச்சலில் கண்ணை மூடிவிட்டாள். எனக்குத்தான் ஒன்றும் இல்லையே! இதையாவது வளர்ப்போமே என்று ஏற்றுக் கொண்டேன், பத்மா!" என்று அக்கம்பக்கம் பார்த்துக் கொண்டு, குரலிலே ஏக்கம் ததும்பச் சற்று மெதுவாகவே கூறினாள்.

இதைக் கேட்ட என் மனம் ஏமாற்றம் மட்டுமா, ஏக்கமும் அடைந்து விட்டது. காலம் கடந்தேனும் பேறு பெற்றுவிட்டாள் வேதவல்லி என்று எண்ணிய என் நம்பிக்கையிலே மண் விழுந்து விட்டதே!

என் ஜாகைக்குத் திரும்பிவிட்டேன். "என்ன மாமி? கல்யாணம் ஆச்சா உங்கள் பிள்ளைக்கு?" என்ற குரல் கேட்டது. யார் அது? திருவண்ணாமலையிலே நான் முன்பு குடியிருந்த வீட்டின் கோடியில் இருந்த மருத்துவச்சி மதுரம்தான்! என் பெண் பாலத்தை நான் பிரசவித்தபோது, உதவியவள் அவள் அல்லவா? பரஸ்பரம் விசாரித்துக் கொண்டோம். அவளும் பெண் வீட்டாரின் பந்துவாம். பேச்சுவாக்கிலே, வேதவல்லியைப் பற்றியும் பேச்செடுத்தேன்.

"மதுரம்! சற்றுமுன்பு வேதவல்லி ஒரு குழந்தையுடன் கொஞ்சிக் கொண்டிருந்ததைக் கண்டு, அவளுடையதுதானாக்கும் என்று எண்ணி, அவளைக் கேட்டேன். அவளுடையது இல்லையாமே! அவளுடைய தங்கை குழந்தையாம். தங்கை இறந்துவிடவே, அவள் அந்தக் குழந்தையை ஏற்றுக் கொண்டாளாம். பாவம், துர்ப்பாக்கியவதி!" என்று அனுதாபத்துடன் கூறிய என் வாயைச் சட்டென்று பொத்தினாள் மதுரம்.

"சும்மா இருங்கள், மாமி! அத்தனையும் பொய்! கதை கட்டி விட்டிருக்கிறாள்."

"என்னிடம் கதை கட்டியிருக்கிறாளா? என்னிடம் அந்தரங்கமாகப் பழகிய அவள் என்னிடம் பொய் சொல்வாளா? ஒருநாளும் அப்படி இராது!" என்றேன். தனக்குக் குழந்தை யில்லாக் குறையைப் போக்கிக் கொள்ள என் குழந்தையை எடுத்துச் சென்றவளாயிற்றே! கல்யாண வீட்டில் நடந்ததைக் கூட அப்படியே ஒன்றுகூட ஒளிக்காமல் சொன்னாளே! — இதெல்லாம் நினைவுக்கு வரவே, என் மனம் மதுரத்தின் வார்த்தையை நம்ப மறுத்தது.

"எனக்குத் தெரிந்தவரை அந்தப் பெண் குழந்தை அவளுடைய சொந்தக் குழந்தைதான்!" என்று அடித்துச் சொன்னாள் மதுரம்.

"என்ன?"

"ஆமாம், மாமி! அந்தக் குழந்தையின் பேற்றை நான்தானே அருகில் இருந்து கவனித்தேன். ரகசியம் இதுதான். காலம் கடந்து பேறு பெற்றுவிட்டதால், யார் விஷக் கண்ணாவது பட்டுவிட்டால் என்ன செய்வது என்று எண்ணியே, அப்படி கூறியிருக்கிறாள் வேதவல்லி" என்று கூறினாள் மதுரம்.

"நிஜமாகவா? நம்ப முடியவில்லையே?"

"ஆம்! 'இது உன் குழந்தையா?' என்று யாராவது வியப்புடன் கேட்டுவிட்டால், அதுவே குழந்தைக்கு ஒரு பெரும் தீங்காய் விடுமோ என்று பயந்துதான் இம்மாதிரி பலரிடம் அவள் கூறுகிறாள். ஏதோ, பாவம்! இத்தனை காலம் கழித்துப் பிறந்திருக்கும் இந்தக் குழந்தையாவது தீர்க்காயுசுடன் இருந்து வேதவல்லியின் குறையைப் போக்கட்டும்!" என்று கூறி நடந்தாள் மதுரம்.

ஒரு கணம் உணர்ச்சியற்ற நிலையிலே உட்கார்ந்துவிட்ட நான், எண்ணத்தை அசை போட்டுப் பார்த்தேன். மதுரம் கூறிய காரணம் பிறர் விஷயத்திலே பொருத்தமாய் இருக்கலாம். ஆனால் என்வரை? ஊஹூம்! என் கண்ணை விஷக் கண்ணாய் வேதவல்லி எண்ணியிருக்க முடியாது. பிறகு ஏன் என்னிடம் உண்மையை மறைத்தாள்? முன்பு ஒரு சமயம் என் குழந்தையைத் தன்னுடையது என்று கூறி அவமானப்பட்டது நினைவில் இருக்கிறதல்லவா? எனவே, இப்போது 'உண்மையைச் சொன்னாலும் நான் நிச்சயம் நம்ப மாட்டேன். சந்தேகப்படத்தான் செய்வேன்' என்று எண்ணி என்னிடம் வேதவல்லி இம்மாதிரி கூறியிருக்க வேண்டும். பாவம்! பேதையுள்ளம் படைத்தவள் வேதவல்லி!

# மணிபல்லவம்

## 21 - மணிமார்பனுக்குப் பதவி

சுரமஞ்சரியும், வசந்தமாலையும் சில கணங்கள் ஒன்றும் பேசிக் கொள்ளத் தோன்றாமல் அப்படியே திகைத்துப் போய் நின்றார்கள். ஊசி கீழே விழுந்தாலும் ஓசை பெரிதாகக் கேட்கும்படியானதொரு நிசப்தம் அப்போது அந்த அலங்கார மண்டபத்தில் நிலவியது. மோனத்தைக் கலைத்து முதலில் பேச்சைத் தொடங்கியவள் வசந்தமாலைதான். மெல்லிய குரலில் தலைவியை நோக்கிக் கேட்கலானாள் அவள்:—

"அது ஏனம்மா அப்படிச் செம்பஞ்சுக் குழம்பையெல்லாம் வாரி இறைத்து வீணாக்கினீர்கள்? திரைக்கு அப்பால் நின்று ஒட்டுக் கேட்டது யாரென்று தெரிந்து கொண்டிருக்க வேண்டுமானால் மெல்ல நடந்து போய்த் திரையை விலக்கிப் பார்த்திருக்கலாமே! அப்படிப் பார்த்திருந்தால் ஒட்டுக் கேட்டவர்களுக்கும் ஒரு பாடம் கற்பித்திருக்கலாமே?"

"போடி, அசட்டுப் பெண்ணே! பிறர் நாகரிகமாக நமக்குச் செய்கிற பிழைகளைக் கண்டுபிடித்துத் தீர்வு காண முயலும்போது நாமும் நாகரிகமாகவே நடந்துகொள்ள வேண்டும். முன் யோசனை இல்லாமல் திடீரென்று போய்த் திரையைத் திறந்து விட்டு நாம் முற்றிலும் எதிர்பாராத ஆள் அங்கு நிற்பதைக் காண நேர்ந்து விட்டால் நமக்கும் வேதனை, அவருக்கும் வேதனை. ஒருவேளை



திரைக்கு அந்தப் பக்கம் நின்றவர் நீயும், நானும் பாடம் கற்பிக்க முடியாதவராக இருக்கலாம். பார்த்தபின், 'ஐயோ இவரா யிருக்குமென்று தெரிந்திருந்தால் இப்படி அநாகரிகமாகத் திறந்து பார்த்திருக்க வேண்டாமே'- என்று தவிக்கவும் நேரிடுமல்லவா?"

"அதெல்லாம் சரிதான் அம்மா. ஆனால் செம்பஞ்சுக் குழம்பை விளக்கி விட்டீர்களே?" என்றாள் வசந்தமாலை.

"ஆ! அப்படிக் கேள் வசந்தமாலை. அதில்தான் இரகசியமே அடங்கியிருக்கிறது. இந்தச் செம்பஞ்சுக் குழம்பு இரண்டு நாட்களுக்குச் சிவப்புக் கறை அழியாதென்று உனக்குத் தெரியுமோ, இல்லையோ?"— என்று சுரமஞ்சரி இதழ்களில் இளநகை அரும்பக் கேட்டவுடன்தான் வசந்தமாலைக்குத் தன் தலைவியின் தந்திரம் புரிந்தது. சமயத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் ஏற்றவிதத்தில் புத்திக் கூர்மையுடனும் தந்திரமாகவும் சுரமஞ்சரி அந்தச் செயலைச் செய்திருக்கிறாள் என்பதை விளங்கிக் கொண்டபோது தன் தலைவியின் நுண்ணுணர்வை வசந்தமாலையால் வியந்து போற்றாமல் இருக்க முடியவில்லை.

"வசந்தமாலை! வா, சித்திரசாலைக்குள் போய்ப் பார்க்கலாம். சற்று முன் தந்தையாரும், ஓவியனும் அங்கே நின்று கொண்டிருந்தார்களே, அந்த ஓவியத்தில் அவர்கள் ஏதாவது மாறுதல் செய்திருக்கிறார்களா என்று பார்க்கலாம்."—என்று தன் தோழியையும் உடனழைத்துக் கொண்டு சித்திரசாலைக்குள் புகுந்தாள் சுரமஞ்சரி. வண்ணங் குழைத்து வனப்பு வனப்பாய் வகை, வகையாய்த் தீட்டி வைக்கப்பட்டிருந்த உயிரோவியங்கள் நிறைந்த அந்தச் சாலையில் நடை ஓசையும் கேட்காமல் மெத்தென்ற பட்டுக் கம்பள விரிப்பின்மேல் நடந்து போய் இளங்குமரனின் படத்துக்கு முன் ஆவலுடனே நின்றார்கள் அவர்கள். என்ன மாறுதல் நேர்ந்திருக்கிறதென விரைந்து அறியும் விருப்பத்துடன், தன் கூரிய நோக்கால் அந்தப் படத்தின் ஒவ்வொரு பகுதியாக உற்றுப் பார்த்துக் கொண்டு வந்தாள் சுரமஞ்சரி. ஆனால் அவளையும் முந்திக்கொண்டு தோழிப் பெண் அந்த மாறுதலைக் கண்டு பிடித்து விட்டாள்.

"அம்மா! படத்தை வரைந்து வாங்கி இங்கே கொண்டு வந்து வைத்தபோது இதோ இந்தக் கறுப்புப் புள்ளி இல்லை. இது புதிதாகத் தீட்டப்பட்டதாகத் தோன்றுகிறது" என்று படத்தில் இளங்குமரனுடைய கழுத்தின் வலது பக்கத்துச் சரிவில் மச்சம்போல் கழிக்கப்பட்டிருந்த கறுப்புப் புள்ளியைத் தொட்டுக் காட்டினாள் வசந்தமாலை. சுரமஞ்சரியும் அதைப் பார்த்தாள். அந்த மாறுதல் புதிதாகத் தான் செய்யப்பட்டிருக்கிறதென்பதை அவள் உணர்ந்தாள். ஓவியன் மணிமார்பன் படத்தை முடித்துக் கொடுத்தபோது அந்தக் கறுப்பு மச்சம் இளங்குமரனின் கழுத்தில் வரையப் பெறவில்லை என்பது அவளுக்கு நன்றாக நினைவிருந்தது. 'கருநாவற் பழம்போல் உன் கழுத்தின் வலது பக்கத்துச் சரிவில் எத்தனை அழகான மச்சம் இருக்கிறது. பார்த்தாயா'— என்று தந்தையார் பிற்பகலின்போது மாளிகைத் தோட்டத்தில் இளங்குமரனுக்கு அருகில் போய் உற்று நோக்கிக் கொண்டே கேட்ட கேள்வியை இப்போது மீண்டும் நினைவிற் கொண்டு வந்து சிந்திக்கலானாள் சுரமஞ்சரி. 'படத்தின் அழகை இந்தக் கரும்புள்ளி ஓரளவு குறைத்துக் காட்டும்' என்பது தந்தையாருக்கும், ஓவியனுக்கும் தெரியாமலா போயிற்று? தெரிந்துகொண்டே இந்த மாறுதலைச் செய்திருந்தார்களானால் இதன் அந்தரங்க நோக்கம் என்ன? தொழில் நயம் தெரிந்த ஓவியன் இப்படிச் செய்து ஓவியத்தைக் கவர்ச்சியற்றதாக்கத் துணிந்தது ஏன்? 'அவர்' கழுத்திலிருக்கிற மச்சம் ஓவியத்திலும் இருந்தாக வேண்டுமென்கிற அவசியம் என்ன?'— என்று சுரமஞ்சரி ஆழ்ந்த சிந்தனைகளால் மனம் குழம்பலானாள். இன்னதென்று தெளிவாய் விளங்காவிட்டாலும் இதில் ஏதோ சூது இருக்க வேண்டுமென்பதுபோல் அவள் உள்ளுணர்வே அவளுக்குக் கூறியது. தன் தந்தையார் மேலும் அவருக்கு மிகவும் வேண்டியவரான நகைவேழம்பர் என்ற ஒற்றைக் கண் மனிதர் மேலும் பலவிதமான சந்தேகங்கள் அவள் மனத்தில் எழுந்தன

அந்த இரண்டு நாள் பழக்கத்தில் இளங்குமரனிடம் அவ்வளவு அன்பும், பரிவும், தன் மனத்துக்கு எப்படி உண்டாயிற்று என்பதை நினைத்தால் அவளுக்கே விந்தையாயிருந்தது. இளங்குமரன் அவளைப்போல் ஒரு பெண்ணின் மனத்தில் எழும் மென்மையான உணர்வுகளுக்கு உரிய மதிப்போ, நெகிழ்ச்சியோ அளிக்கத் தெரியாத முரடனாயிருந்தான். எடுத்தெறிந்து அலட்சியமாகப் பேசினான். தன்னுடைய விழிகளிலும், இதழ்களிலும், உள்ளத்திலும், அவனுக்காக நெகிழும் குறிப்புக்களோடு அவள் அருகே நெருங்கி நின்றபோதெல்லாம் அவன் அதைப் புரிந்துகொண்டு குழையும் மென்மைத் தன்மையில்லாமலே விலகி விலகிச் சென்றிருக்கிறான். ஆயி

ளும் விலகவில்லை. அவனைப் பற்றி நெருக்கமாக நினைக்கத்தான் அவளால் முடிந்தது. அவனை விலக்கி நினைக்கும் ஆற்றல் அவள் மனத்துக்கு வரவில்லை. தான் பேரார்வத்தோடு அளித்த மணிமாலையை மறுத்ததிலிருந்து ஒவ்வொன்றாகத் தனக்கு அவன் செய்த அலட்சியங்களை நினைத்துப் பார்த்தும் அவளால் அவனை வெறுக்க முடியவில்லை. அந்த அலட்சியங்களின் கம்பீரத்தினாலேயே அவன்மீது பரிவும் கவர்ச்சியும் அதிகமாயிற்று அவளுக்கு. நிமிர்ந்து நிற்கும் அவனது திமிர் நிறைந்த தோற்றமும், பரந்து விரிந்த மார்பும், செம்பொன் நிறங்கிளரும் சுந்தரமணித் தோள்களும், கண் நிறைந்து தோன்றும் அழகு முகமும் நினைவில் தோன்றித் தோன்றி, 'இவற்றையும், இவற்றுக்குரியவனையும் நீ இழக்கலாகாது பெண்ணே! இவனைப்பற்றி நினைப்பதே இன்பம். இவனைப்பற்றித் தவிப்பதே பெருமை. இவனால் அலட்சியப்படுத்தப் பெறுவதை ஏற்பதிலும் கூட இன்பம் இருக்கிறது.'— என்று சுரமஞ்சரியை ஏங்கச் செய்திருந்தன. ஆசைகளுக்கு ஆசைப்படாமல் ஆசைகளை ஆசைப்படவைக்கும் ஏதோ ஒரு தனித் தன்மை அவனிடமிருந்து அவளைக் கவர்ந்து ஆட்சி புரிந்தது. எதற்கும் அசைந்து கொடுக்காத அந்தத் தனித் தலைமையைத் தன் சிரிப்புக்கும், சிங்கார விழிப் பார்வைக்கும், அசைத்துப் பார்க்க வேண்டுமென்று உள்ளூற உறுதி கொண்டிருந்தது அவள் மனம். இந்தக் கவர்ச்சி காரணமாகத்தான் இளங்குமரன் மேல் அவளுக்குப் பெரும் பரிவு ஏற்பட்டிருந்தது.

'இதை எனக்குக் கொடுத்து விடுவதனால் நீங்கள் பெருமைப்பட இடமிருக்கிறது. ஆனால் இதை உங்களிடமிருந்து வாங்கிக் கொள்வதனால் நான் பெருமைப்பட்டுக் கொள்ளச் சிறிதாவது இடமிருக்கிறதா என்பதுதான் என் சந்தேகம்'- என்று கடற்கரையில் அன்று மூலை மழுங்கித் தணியாத முரட்டுத் திமிரோடு பேசிய அதே வாயிலிருந்து, 'சுரமஞ்சரி! உன்னிடமிருந்து எதை வாங்கிக் கொண்டாலும் எனக்குப் பெருமைதான். கற்பனை பிறக்கும் உன் கவிதை நயனங்களின் ஒரு பார்வை கிடைத்தாலும் அதைப் பெருமையாக ஏற்றுக் கொள்வேன். மோகம் பிறக்கும் உனது செவ்விதழ்களில் ஒரு மென்முறுவல் கிடைத்தாலும் பெருமையோடு ஏற்றுக் கொள்வேன்' என்ற வார்த்தைகளை என்றாவது ஒரு நாள் வரவழைத்துப் பார்த்துவிட வேண்டும் என்ற வேட்கையோடு கூடியதொரு வைராக்கியம் அவள் மனத்தில் மூண்டிருந்தது.

இளங்குமரனின் ஓவியத்தில் செய்யப்பட்டிருந்த அந்தச் சிறு மாறுதலைக் கண்டு சிந்தனையிலாழ்ந்திருந்த தன் தலைவியை நோக்கி வசந்தமாலை கூறலானாள்: "இந்த மாறுதல் ஏன் செய்யப்பட்டது என்பதைப் பற்றி உங்கள் தந்தையாரிடம் நேருக்கு நேர் நின்று கேட்டுத் தெரிந்துகொள்வது முடியாத காரியம். ஆனால் அந்த ஓவியனைக் கண்டு பிடித்துக் கேட்டுப் பார்த்தால் ஒரு வேளை காரணம் தெரியலாம்!"

"வசந்தமாலை! இதைப் பற்றி எப்படி முயன்று யாரிடமிருந்து உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ அப்படித் தெரிந்து கொள்ள என்னால் முடியும். நீ பேசாமலிரு. உனக்கு ஒன்றும் தெரிந்தது போல் பிறரிடம் காட்டிக் கொள்ளவே வேண்டாம். இவையெல்லாம் உனக்கும் எனக்கும் மட்டுமே தெரிந்த செய்திகளாக இருக்க வேண்டும்" என்று தோழிக்கு வற்புறுத்தி எச்சரிக்கை செய்து அங்கிருந்து அவளை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள் சுரமஞ்சரி.

அப்படி வசந்தமாலையும், சுரமஞ்சரியும் சித்திரசாலையிலிருந்து வெளியேறிய அந்த நேரத்தில் நிலாமுற்றத்திலிருந்து இறங்கிய வானவல்லியும் உட



விருந்த பெண்களும் எதிரே வந்து சேர்ந்தார்கள். 'இவர்கள் யாரிடமும் இங்கு நடந்தது பற்றிப் பேச்சு மூச்சுக் காட்டாதே'— என்பதை மறுபடியும் கண்களின் பார்வைக் குறிப்பாலேயே தோழிக்கு வற்புறுத்தினாள் கரமஞ்சரி.

"நீ உடனே திரும்பி வந்துவிடப் போகிறாய் என்று நாங்களெல்லாம் நிலாமுற்றத்தில் காத்திருந்தோம் கரமஞ்சரி!




நீ வருகிற வழியாயில்லை. நேரமும் ஆகிவிட்டது. உன்னையும் அழைத்துக் கொண்டு உண்பதற்குப் போகலாம் என்று கீழே இறங்கி வந்து விட்டோம். தந்தையார் நம்மை எதிர்பார்த்து உண்ணாமல் காத்துக் கொண்டிருப்பார். வா, போகலாம்" என்று கரமஞ்சரியை உணவுக்கு அழைத்தாள் வாலவல்லி. உடனே எல்லாரும் மாளிகையின் கீழ்ப்பகுதியை நோக்கி உண்பதற்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

## பாலுசேரி பெனிபிட் சிட் பண்டு (பிரைவேட்) லிட்.,

(நிறுவியது)

"வீணா விஹார்," 17-A, ஸையான் - மாதுங்கா எஸ்டேட்

(கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)

**பம்பாய் - 22**

தந்தி: 'GROW RICH'

POST BAG No. 6759

| 25 மாதங்கள் | குறுகிய கால ஏலச் சீட்டுகள்<br>2-வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள்<br>1961 ஏப்ரல் மாத ஸீரிஸ் | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

சேரக் கடைசி தேதி 8-4-1961 ... முதல் ஏலத் தேதி 9-4-1961

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | J | ரூ. 10/- | ரூ. 250/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- | | | |

### நீண்டகால ஏலச் சீட்டுகள்

சேரக் கடைசி தேதி 8-4-1961 ... முதல் ஏலத் தேதி 9-4-1961

50 மாதங்கள் 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | குறித்த தள்ளுபடி |
|---|---|---|---|
| A | ரூ. 100/- | ரூ. 5,000/- | ரூ. 500/- |
| B | ரூ. 50/- | ரூ. 2,500/- | ரூ. 250/- |
| D | ரூ. 20/- | ரூ. 1,000/- | ரூ. 100/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களை சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

வெள்ளிக்கிழமை (வார விடுமுறை நாள்)

வேலை நேரம்: காலை 8 முதல் 11 மணி வரை: மாலை 4 முதல் இரவு 8 மணி வரை

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

தலைமை ஆபீஸ்: "பாலுசேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு, தபால் பெட்டி நெ. 414 திருவல்லிக்கேணி, மதராஸ் - 5

இதர கிளைகள்:
1. 185, முதல் மாடி, ஆருலூர் ரோட், காந்தி நகர், பெங்களூர் - 9
2. "கன்னான் ஹவுஸ்", 1/24, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி - 1
3. "பாலுசேரி பில்டிங்", 14 - A/4, W.E.A. கரோல்பாக், புது டெல்லி - 5
4. 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டெல்லி - 3

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

---




தலைவலி, சளி, ஜுரம், இன்புளுயன்சா,
வயிற்றுப்போக்கு முதலியவைகளுக்கு

# சிவபதி மருந்து

சிவபதி சித்த தயாரிப்பு

பாரத் இண்டஸ்ட்ரியல் ஒர்க்ஸ் 32, மதுரை 5-வது தெரு மதுரை-1

இலங்கை ஏஜண்டு:
மாலா ஸ்டோர்ஸ்
184, செட்டியார் தெரு
கொழும்பு - 11

BARATHARAJAN

அந்தப் பெரு மாளிகையின் உணவுக் கூடத்தில் பணியாரங்களின் நறுமணமும், அறுசுவை உண்டிகளின் மணமும் கலந்து பரவிக் கொண்டிருந்தன. நெய்யின் கமகமப்பும் பால் நன்றாக வற்றிக் காயும் முறுகிய வாசனையும், அந்தப் பக்கமாக வேறு காரியமாய் வர நேர்ந்தவர்களுக்குக் கூட உண்ணும் ஆசையை உண்டாக்கிக் கொண்டிருந்தன.

சுரமஞ்சரியும் வானவல்லியும் வசந்தமாலை முதலிய மற்றப் பெண்களும் உணவுக் கூடத்துக்குள் நுழைந்த போது அங்கே ஏற்கெனவே தந்தையாரும், நகைவேழம்பரும், ஓவியன் மணிமார்பனும் உண்பதற்குச் சித்தமாக வந்து உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். இன்னும் ஒரு பக்கமாகப் பெண்கள் உட்காரும் வரிசையில் சுரமஞ்சரியின் அன்னையும் மாளிகையைச் சேர்ந்த நற்றாய், செவிலித்தாய், முதலிய முதுபெண்டிர்களும் அமர்ந்திருந்தார்கள். இந்த இளம் பெண்களின் கூட்டம் உள்ளே நுழைந்தவுடன் நெய்யும், பாலும், பணியாரமும், பல்சுவை மணம் பரப்பிக் கொண்டிருந்த உணவுக் கூடத்தில் மல்லிகை மணமும், கூந்தலில் பூசியதைல மணமும், வேறு பல மென்மணங்களும் புதிதாக எழுந்து உணவு மணங்களோடு கூடிக் கலந்தன. தந்தையார், சுரமஞ்சரி முதலியவர்களை முகமலர்ச்சியோடு உற்சாகமாக வரவேற்றார் :



"வாருங்கள், பெண்களே! இன்று நமது மாளிகையில் நளபாகமே செய்திருக்கிறார்கள். இந்திர விழா உற்சாகத்தில் சமையற்காரர்கள் தங்கள் அற்புதத் திறமையைக் காட்டியிருக்கிறார்கள். இனிமேல் நாம் நமது உண்ணும் திறமையைக் காண்பிக்க வேண்டியதுதான்."

"ஆகா! நமது மாளிகை உணவைப் பற்றியா இப்படிச் சொல்கிறீர்கள், அப்பா? என்ன அதிசயம்? என்னால் நம்பவே முடியவில்லையே! ஏதாவது கை தவறிச் செய்திருப்பார்கள். அது நன்றாக வாய்த்துத் தொலைத்திருக்கும். நம் மாளிகைச் சமையற்காரர்கள் அற்புதத் திறமையையும், உற்சாகத்தையும் எப்படி அப்பா காட்டுவார்கள்? அவர்கள் தாம் இந்த மாளிகைக்குள் நுழையு முன்பே அத்தகைய திறமையையும், உற்சாகத்தையும் எங்கோ தொலைத்து விட்டு வந்து சேர்ந்திருக்கிறார்களே, அப்பா!" என்று வானவல்லி வம்புப் பேச்சைத் தொடங்கினாள். அவள் கூறி முடித்ததும் பெண்களின் இன்னொலிச் சிரிப்புக்கள் அந்தக் கூடத்தில் அலை அலையாய் ஒலிபரப்பி அடங்கின. சுரமஞ்சரியையும், வசந்தமாலையையும் தவிர மற்றவர்கள் யாவரும் இந்த நகைச்சுவை மகிழ்ச்சியில் கலந்து கொண்டார்கள். சுரமஞ்சரி, வானவல்லி ஆகியோரின் அன்னையும் இந்த மகிழ்ச்சியில் கலந்து கொண்டாள்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை, பெண்ணே! நம் மாளிகைச் சமையற்காரர்களைப்பற்றி நீ வேண்டுமென்றே மிகைப்படுத்திக் குற்றம் சொல்கிறாய். எப்போதாவது கொஞ்சம் உப்பைக் கூடப் போட்டிருப்பார்கள். 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்ற பழமொழி இருக்கிறதல்லவா? நமது மாளிகையில் உண்டு சென்றவர்கள் நீண்ட காலம் நம்மை நினைத்துக் கொண்டிருக்கவேண்டுமென்றும் அப்படி நம்மை நினைப்பதற்காகவே அவர்கள் நீண்ட காலம் இருக்க வேண்டுமென்றும் தான் நமது சமையற்காரர்கள் இப்படி உப்பை அதிகமாகப் போடுகிறார்கள் போலிருக்கிறது" என்று அன்னை கூறியபோது சிரிப்பொலி முன்னைக் காட்டிலும் பெரிதாக எழுந்தது. நகைவேழம்பரும் சேர்ந்து கொண்டு சிரித்தார். அந்த மனிதரின் ஒற்றைக் கண்ணோடு கூடிய முகத்துக்குச் சிரிப்பு நன்றாயில்லை. பேய் சிரிக்கிறாற் போல் விகாரமாக இருந்தது. செம்மையில்லாத கெட்ட கண்ணாடியில் முகம் பார்த்தது போல், சிரிக்கும்போது பூத பயங்கரம் காட்டியது நகைவேழம்பரின் முகம். குறும்புக்காரியான வானவல்லி விடாமல் மேலும் அந்த வம்புப் பேச்சை வளர்த்தாள் :

"நீ சொல்வதை நான் அப்படியே ஒப்புக் கொள்ள முடியாதம்மா! ஏனென்றால் காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையில் உப்புக் காய்ச்சும் உப்பளங்கள் நிறைய இருக்கின்றன என்ற செய்தியையே நம் மாளிகை உணவு மூலமாகத் தான் மிகப் பலர் தெரிந்து கொள்ள நேர்ந்திருக்கிறது. அப்பாவைத் தேடி

எத்தனையோ கடல் கடந்த தேசங்களி லிருந்து பெரிய வாணிகர்கள், சிற்றர சர்கள் எல்லாம் நம் மாளிகைக்கு வந்து தங்கிச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் எல்லாரும் இங்கு முதன்முறை யாக உணவு உண்டு முடிந்தவுடன் அப்பாவைக் கேட்டிருக்கிற முதல் கேள்வி என்ன தெரியுமா? 'உங்கள் நகரத்தில் நிறைய உப்பளங்கள் இருக் கின்றனவோ?' என்பதுதான். நான்கு நாட்களுக்கு முன் இரத்தினத் தீவி லிருந்து வந்திருந்த வைரவணிகர் கூட இதே கேள்வியைத்தானே கேட்டார்?" என்று தன் அன்னையிடம் வேடிக்கை யாகக் கூறினாள் வானவல்லி. இப் படியே சிரிப்பும் கலகலப்புமாக, உற்சாக மும் உரையாடல்களுமாக உண்ணும் நேரம் கழிந்து கொண்டிருந்தது. சுர மஞ்சரியும், வசந்தமாலையும் மட்டும் சிரிப்போ, பேச்சோ இல்லாமல் எதையோ ஆழ்ந்து சிந்திப்பது போல் அமைதியாக அமர்ந்து உண்பதைத் தந்தையார் கவனித்து விட்டார். அந்த மௌனத்தின் காரணத்தைச் சுரமஞ்சரி யிடமே நேரில் கேட்காமல் வானவல்லி யிடம் கேட்டார் அவர்.

"வானவல்லி! இன்றைக்கு உன் சகோதரி சுரமஞ்சரி மௌன விரதம் பூண்டிருக்கிறாளா, என்ன? பேச்சுமில்லை. சிரிப்புமில்லை. பதுமை போல் அமர்ந்து உண்கிறாளே!" தந்தையார் இப்படித் தூண்டிக் கேட்டபின்பும் சுரமஞ்சரி ஒன்றும் பேசவில்லை. தன் சகோதரி சுர மஞ்சரியும், அவளுடைய தோழி வசந்த மாலையும் உற்சாகமாயில்லை என்பதை வானவல்லியும் கவனித்தாள். சகோதரி அப்படி அமைதியாயிருக்கும்போது தான் மட்டும் அதிகப்பிரசங்கியாக வம்பு பேசுவது நாகரிகமில்லை என்று உணர்ந்த வளாய் வானவல்லியும் பேச்சை நிறுத் திக் கொண்டு அமைதியாய் உண்ணத் தொடங்கினாள்.

"என்னடி, பெண்ணே! உனக்கு உடல் நலமில்லையா? ஏன் இப்படி இருக் கிறாய்?" என்று தாய் சுரமஞ்சரியை விசாரித்தாள். "அதெல்லாம் ஒன்று மில்லையம்மா!" என்று பெண்ணிட மிருந்து சுருக்கமாகப் பதில் கிடைத்தது தாயாருக்கு.

ஆனால் தந்தையார் சுரமஞ்சரியை அவ்வளவு எளிதில் விடவில்லை. எப்படி யாவது அவளைப் பேச வைத்துவிட வேண்டுமென்று முனைந்தவர் போல் மீண்டும் அவளிடம் நேரிலேயே பேச லானார்.

"சுரமஞ்சரீ! இன்று உனக்குச் சொல்ல வேண்டுமென்பதற்காக மிகவும் நல்ல செய்தி ஒன்று வைத்திருக்கிறேன். இதோ இந்த ஓவியனை நமது மாளிகையி லேயே பணி புரிவதற்கு நியமித்திருக் கிறேன். எல்லாம் உனக்காகத்தான் பெண்ணே! ஓவியக் கலையில் உனக்கு இருக்கும் பற்று எனக்குத் தெரியும். இவனைப் பயன்படுத்திக் கொண்டு உனது சித்திரசாலையின் எஞ்சிய இடங்களை யெல்லாம் சித்திரங்களால் நிரப்பி விட லாம்" என்று அவள் முகத்தில் மலர்ச் சியை எதிர்பார்த்துக் கொண்டே கூறிய அவர் அங்கே மலர்ச்சி தோன்றாததைக் கண்டு திகைத்தார். ஓவியன் முகத்தைப் பார்த்தாள் சுரமஞ்சரி. அவன் முகத்தில் பதவி பெற்ற பெருமிதம் இல்லை. ஏதோ பயம்தான் இருந்தது. தந்தையார் நல்ல செய்தி என்று தொடங்கிக் கூறிய இந்தப் பதவி நியமனம் அவள் மனத்தில் பல சந்தேகங்களை உண்டாக்கியது

## ௨௨-நகைவேழம்பர் நடுக்கம்

மணிமார்பன் என்னும் அந்த ஓவி யனைத் திரும்பிப் போகவிடாமல் தன் தந்தையார் மாளிகையிலேயே தேக்கி வைத்துக்கொண்டிருப்பதன் மெய்யான நோக்கம் என்னவாக இருக்கும் என்று சுரமஞ்சரி சிந்தித்தாள். தன்னுடைய சித்திரசாலைக்குப் படங்கள் வரைந்து நிரப்புவதற்காகவே அவனை மாளி கையின் ஓவியக் கலைஞனாகப் பதவி தந்து நியமித்திருப்பதாகத் தந்தையார் கூறியதை அவள் அப்படியே நம்பி ஒப்புக் கொள்வதற்கு இயலவில்லை. எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட அந் தரங்க நோக்கம் ஒன்று தந்தையாருக்கு இருக்குமென்று அவள் சந்தேகப்பட் டாள். ஓவியனுக்குப் பதவியளித்திருக் கும் செய்தியைத் தந்தையார் தாம் மகிழ்ச்சியோடு கூறினாரே தவிர அதைக் கேட்டுக் கொண்டே அருகில் அமர்ந் திருந்த ஓவியன் முகத்தில் மலர்ச்சியோ மகிழ்ச்சியோ தோன்றவில்லை என்பதை யும் அவள் கவனித்திருந்தாள். அது வேறு அவளுடைய சந்தேகத்தை வளர்த்தது.

"அம்மா! இந்த ஒற்றைக் கண் மனித ருக்கு நகைவேழம்பர் என்று யார் பேர் வைத்தார்கள்? இவர் சிரிப்பதைப் பார்க்கச் சகிக்க வில்லையே" என்று சுரமஞ்சரியின் காதருகில் மெல்லக் கேட்டாள் வசந்தமாலை. சுரமஞ்சரி உடனே தோழிக்கு மட்டும் கேட்கும்படி,

"அது இவருடைய சொந்தப் பெயர் இல்லையம்மா, வசந்தமாலை. கூத்தரங்குகளிலும், நாடக மேடைகளிலும், கூத்து, நாடகம் முதலியன தொடங்குமுன் கோமாளி வேடத்தோடு விதூடகன் ஒருவன் வருவது உண்டல்லவா? எதை யாவது சொல்லி அவையிலிருப்பவர்களுக்கு நகைப்பு உண்டாக்கும் கலைஞர்களுக்கு *நகைவேழம்பர் என்று தமிழில் பெயர் உண்டு. எங்கள் தந்தையாரோடு வந்து சேர்ந்துகொள்வதற்கு முன்னால் இந்த மனிதர் நம் காவிரிப்பூம்பட்டினத்தில் ஏதோ ஒரு நாடக அரங்கில் நகைவேழம்பராக நடித்துப் பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தாராம். அதனால் அந்தத் தொழிற் பெயர் இன்னும் இவரை விடாமல் பற்றிக்கொண்டு நிற்கிறது" என்று மறுமொழி கூறினாள்.

"இந்த மனிதருடைய குரூர முகத்தைப் பார்த்தால் வந்த சிரிப்புக்கூடப் போய் விடுமேயம்மா. இவரை எப்படி நாடக அரங்கில் நகைவேழம்பராக வைத்துக்கொண்டு பொறுமையாக நாடகம் நடத்தினார்கள்? பார்த்தவர்களும் தான் எப்படிப் பொறுமையோடு பார்த்தார்கள்? சிரிப்பு மூட்டுகிற முகமா இது? எரிந்த கொள்ளிக் கட்டையைப்போல விகாரமாக இருக்கிறதே?" என்று மேலும் கேட்ட வசந்தமாலைக்கு. "இவர் நகைவேழம்பராக நடிப்பதைப் பொறுமையாகப் பார்க்க முடியாததனால்தானோ என்னவோ, இவருடைய முகத்தைக் கண்டு சிரிப்பு மூள்வதற்குப் பதில் சீற்றம் மூண்டு யாரோ ஒற்றைக் கண்ணைப் பொட்டையாக்கி அனுப்பி விட்டார்கள் போலிருக்கிறது" என்று வயிற்றெரிச்சல் தீர மறுமொழி கூறினாள் கரமஞ்சரி

"நாடக மேடையில் ஆடிய கூத்துக்களைவிட இவர் வாழ்க்கையில் ஆடும் கூத்துக்கள்தான் அதிகம் போலிருக்கிறதம்மா....!"

"தந்தையாரிடம் வந்து சேர்ந்தபின் இவருடைய கூத்துக்கள் மிகவும் அதிகமம்மா, வசந்தமாலை."

உணவுக் கூடத்தில் எல்லாருக்கும் நடுவே கரமஞ்சரியும், வசந்தமாலையும் இப்படித் தங்களுக்குள் இரகசியம் பேசுவதுபோல் பேசிக் கொண்ட பேச்சினால் எல்லாருடைய கவனமும் அவர்கள் பக்கம் திரும்பவே பேச்சை அவ்வளவில் நிறுத்திக் கொண்டனர்.

"என்னவோ நீயும் உன் தோழியுமாக உங்களுக்குள்ளேயே பேசிக் கொள்கிறீர்களே? கரமஞ்சரி! எங்களோடு [illegible]என்று உனக்கு என்ன கோபம் வந்து விட்டதம்மா?" என்று தந்தையார் மறுபடியும் அவளுக்கு உற்சாக மூட்டிப் பேச வைக்கும் முயற்சியைத் தொடங்கினார். அவர் இவ்வளவு தூண்டிக் கேட்ட பின்னும் பேசாமலிருந்தால் நன்றாயிராதென்று பட்டும் படாமலும் ஏதோ பேசினாள் கரமஞ்சரி.

"கரமஞ்சரி தேவிக்கு இன்று ஏதோ சில காரணங்களால் மனம் குழப்பமடைந்துள்ளது போல் தோன்றுகிறது. ஐயா!" என்று அதுவரை பேசாமலிருந்த நகைவேழம்பர் முதல் முறையாக வாய் திறந்தார். அந்த நேரத்தில் அங்கே அவரைப் போன்று தன்னால் விரும்பத்தகாத ஒருவர் தன் பெயரைக் குறிப்பிட்டுப் பேசியதே கரமஞ்சரிக்குப் பிடிக்கவில்லை. அழுக்கும் சேறும் படிந்த தரையில் கால் அழுந்தி நிற்க அருவருப்படைந்து கூசுகிறாற்போலச் சிலருடைய பேச்சில் செவிகளும், மனமும் அழுந்தித் தோய்வதற்கு விரும்புவதில்லை. அப்படிப் பட்டவர்கள் பேசும்போது கேட்கிறவர்களுக்கு அருவருப்பும், கூச்சமுமே ஏற்படுகின்றன. நகைவேழம்பரின் பேச்சும் கரமஞ்சரிக்கு இத்தகைய அருவருப்பைத்தான் உண்டாக்கிற்று. அத்தகைய மனிதர் ஒருவரின் நாவிலிருந்து தன் பெயர் ஒலிக்கும்போது அந்த நாவின் அழுக்குத் தனது அழகிய பெயரிலும் தோய்வது போன்று மிகவும் கூச்சத்தோடு கூடியதொரு வெறுப்பைக் கரமஞ்சரி அடைந்தாள்.



"நகைவேழம்பரே! புதிதாக நம் மாளிகைக்கு வந்துள்ள இந்த ஓவியனை உங்கள் பொறுப்பில் ஒப்படைக்க எண்ணியுள்ளேன். வெளியில் அநாவசியமாக அலைந்துதிரியாமல் இவன் மாளிகையிலேயே தங்கி வேலைகளைச் செய்யுமாறு கண்காணித்துக் கொள்ள வேண்டியது உங்கள் வேலை. இதற்குமேல் விவரமாக நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியது இல்லை. உங்களுக்குக் குறிப்பறியத் தெரியும்" என்று உணவு முடிகிற நேரத்தில் தந்தையார் நகைவேழம்பருக்கு இரு

* நகைவேழம்பர் - சிரிப்பு மூட்டும் பரிகாசகர். அதாவது நகைச்சுவை நடிகர்கள். ஆதாரம்:- சிலப்பதிகாரம் 5-ம் காதை 53-வது அடி. வேழம்பர் - 'பலவகையாலும் நகுவித்து நகைப் பயன் கொண்டு ஒழிவார்' என்று 817-வது குறளுரையில் பரிமேலழகர் கூறியுள்ளார்.

பொருள் தொனிக்கும் குறிப்புடன் உத்தரவிட்டதையும் சுரமஞ்சரி கவனித்துக் கொண்டாள். 'இந்த மாளிகையை விட்டு ஆள் வெளியேறி விடாமல் ஓவியனைச் சிறை செய்து பாதுகாத்துக் கொள்' என்று சொல்ல வேண்டியதற்குப் பதில் அதையே கௌரவமான வார்த்தைகளில் கௌரவமான தொனியோடு தந்தையார் நகைவேழம்பருக்குச் சொல்லியிருக்கிறார் என்பதை அவள் உய்த்துணர்ந்து புரிந்து கொள்ள முடிந்தது. தந்தையாருக்கு என்னதான் வயதும், தகுதியும், செல்வமும் இருந்த போதிலும் அந்த ஓவியக் கலைஞனை அவர் ஏக வசனத்தில் குறிப்பிட்டுப் பேசியது சுரமஞ்சரிக்கு என்னவோ போலிருந்தது. நுண்கலைகளை மதிக்கும் நளினமான மனமுள்ளவள் அவள். அவளுடைய கோமளமான சுபாவத்துக்குக் கலைகள் பிறக்குமிடத்தைச் சுலபமாக நினைப்பவர்களைப் பொறுத்துப் பழக்கமில்லை. அதுவும் ஓவியம் இளமையிலிருந்து அவள் மனத்தில் பித்து ஏறிப் பதிந்த கலை. அந்தக் கலைக்கு உரியவர்களைப் பற்றி எளிதாக நினைப்பவர்களையோ, பேசுபவர்களையோ, அவளால் ஏற்க முடிவதில்லை.

உண்டு முடிந்தபின் உணவுக் கூடத்திலிருந்து எல்லாரும் வெளியேறியபோது, "வசந்தமாலை! விரைவாக நடந்து வா. சிறிது முன்னால் சென்று உணவுக் கூடத்தின் வாயிலுக்கு அருகே நின்று கவனிக்கலாம். உள்ளிருந்து ஒவ்வொருவராக வெளியேறிப் படிகளில் இறங்கும்போது நீயும், நானுமாக அவர்கள் பாதங்களை நாம் கவனிப்பதை அவர்கள் அறிந்து கொள்ளாதபடி கவனிக்க வேண்டும்" என்று காதருகில் மெல்லச் சொல்லி அவளை வேகமாக நடக்கச் செய்து அவளுடன் வாயிற்பக்கம் வந்து நின்று கொண்டாள் சுரமஞ்சரி. முதலில் தந்தையாரும், தாயும், வானவல்லியும் பிறபெண்களும் படியிறங்கி வந்தார்கள்.

"என்னம்மா? இங்கே எதற்கு நின்று கொண்டிருக்கிறாய்? போகலாம், வா!" என்று தந்தையார் அவளைக்கூப்பிட்டார்.

"வருகிறேன் அப்பா. நீங்கள் முன்னால் செல்லுங்கள்" என்று அவரை முன்னால் அனுப்பிவிட்டு மேலும் படியிறங்கி வருகிற பாதங்களைக் கவனிக்கத் தொடங்கினாள் சுரமஞ்சரி. ஒவ்வொருவராக எல்லாரும் போய் விட்டார்கள். மணிமார்பனும், நகைவேழம்பரும்தான் வரவில்லை. உள்ளே சமையற்காரர்களோடு ஏதோ பேசிக்கொண்டு நின்றார் நகைவேழம்பர்.

சிறிது நேரத்தில் மணிமார்பனைக் கைப்பற்றி அழைத்துக்கொண்டு நகைவேழம்பர் படியிறங்கி வந்தபோதும் சுரமஞ்சரி தோழியோடு அங்கே நின்று கொண்டிருந்தாள். அவள் அங்கே நின்று கொண்டிருப்பாளென்று அந்த ஒற்றைக் கண் மனிதர் எதிர்பார்க்கவில்லை. அப்போது அங்கே அவள் நின்று கொண்டிருந்ததைக் கண்டபோது சிறிது அதிர்ச்சி கூட அவருக்கு உண்டாயிற்று. சாமர்த்தியமாக அந்த அதிர்ச்சி வெளியே தெரியாமல் மறைத்துக்கொண்டு நடந்து சென்றார். தற்செயலாக நடந்து உடன் வருபவர்களைப் போல் சுரமஞ்சரியும் தோழியும் நகைவேழம்பரோடு கூட நடந்தார்கள். அவர்களும் உடன் வருவதைக் கண்டபின் நகைவேழம்பரின் நடை இன்னும் துரிதமாயிற்று. ஓவியனும் அவருக்கு ஏற்பத் துரிதமாக நடந்தான். விரைவாய்த் தங்களைக் கடந்து அடுத்த கூடத்துக்குள் நுழைந்து முன்னால் போய் விடுவதற்காக அவர் முந்துகிறார் என்பது சுரமஞ்சரிக்கும், தோழிக்கும் புரிந்தது. உடனே அவர்களும் விட்டுக் கொடுக்காமல் தங்கள் நடையையும் வேகமாக்கினார்கள்.

ஆயினும் அவர்களைக் கடந்து பாய்ந்து முந்திச் செல்வதுபோல் ஓவியனை இழுத்துக் கொண்டு அந்தக் கூடத்துக்குள் காலெடுத்து வைத்து விட்டார் நகைவேழம்பர். மேலே தொடர்ந்து நடப்பது சாத்தியமில்லை என்றுணர்ந்த சுரமஞ்சரி வார்த்தைகளால் அவரைத் தடுத்து நிறுத்தினாள்: 'ஐயா! ஒரு விநாடி நின்று போகலாமல்லவா? உங்களிடம் சிறிது பேசவேண்டும்"

முன்புறம் விரைந்து கொண்டிருந்த நகைவேழம்பர் திரும்பி நின்றார். 'என்ன பேச வேண்டும், சுரமஞ்சரிதேவி! சொல்லுங்கள் கேட்கிறேன். எனக்கு அவசரமாகப் போகவேண்டும். நேரமாகிறது."

"போகலாம்! ஆனால் இவ்வளவு தலைபோகிற அவசரம் வேண்டியதில்லை, ஐயா! நீங்கள் நெடுங்காலத்துக்குமுன் கூத்தரங்குகளில் நடித்துக் கொண்டிருந்த நாட்களில் முகத்துக்கு அரிதாரமும், கண்களுக்கு மையும், கால்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பும் இட்டுக் கொண்டு அழகாக இருந்ததாகச் சொல்வார்கள். கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இத்தனை காலத்துக்குப் பின் காலுக்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசிக்கொள்ளும் ஆசை உங்களுக்குத் திடீரென்று எப்படி ஐயா உண்டாயிற்று? அதுவும் இவ்வளவு நன்றாகச் சிவப்பு நிறம் பற்றும் செம்பஞ்சுக் குழம்பு உங்களுக்கு எங்கேதான் கிடைத்ததோ?" என்று அவருடைய பாதத்தைச் சுட்டிக் காட்டிச் சிரித்துக் கொண்டே கேட்டாள் அவள்.

அதைக் கேட்டு நகைவேழம்பர் மெய் விதிர் விதிர்த்து நடுங்கி நின்றார். அவருடைய ஒற்றைக் கண் மிரண்டு பார்த்தது.

(தொடரும்)




**வா**லிப வயதில் ஏற்படும் காதலையும், அந்தக காதலுக்குக் குறுக்கே முளைக்கும் வில் லன்யும்தான் சாதாரணமாகச் சினிமாக் களில் அதிகமாகப் பார்க்க முடிவும். ''ஆஞ்சல்'' என்ற ஹிந்திப் படத்தில், அதற்கு மாருக, அமைதியான மணவாழ்க் கையில், விதியின் விளையாட்டினுல் நேர்ந்து விடும் விபரீதங்களே அடிப்படையாக அமைந் திருக்கின்றன. (ஆஞ்சல் என்ருல் புடவை முன்தானே. பெண்களுக்குக் கற்பு நெறிதான் இன்றியமையாதது என்று வலியுறுத்திக் கூற முயல்கிறது இந்தப் படம்).

ராமு ஒரு பஞ்சாலையில் வேலே செய்கிருன். அவனுடைய தாயும், அன்பு மனைவியும், ஆசை மகள் சந்தாவும் அவனது இல்லறத்தை இன்ப ராஜ்யமாகச் செய்கின்றனர். வரும் தீபாவளிக்குள் அன்னேக்குச் சால்வையும், மனைவிக்கு வளையல்களும், குழந்தைக்குப் பட்டாசும் வாங்கப் போவதாகக் கூறுகிருன் ராமு. அதற்கேற்ருற்போல் அவனுக்குச் சம்பள உயர்வு கிடைக்கிறது. அவனது சக தொழிலாளிக்கு இதனுல் ராமுவி னிடம் ஆத்திரம் உண்டாகிறது. இது போதாத குறைக்கு அவனுடைய கைப்பிடியில் அகப்பட்டுத் தவித்த ஒரு பெண் தொழி லாளியை ராமு சமயத்தில் வந்து காப்பாற்று கிருன். இது பகையை உண்டாக்குகிறது. அந்தப் பெண் தொழிலாளி ராமுவைத் தன் வீடு வரையில் துணைக்குக் கூப்பிட்டு அந்தப் பகையை அதிகமாக்குகிருள். ராமுவுக்கும் வில்லனுக்கும் ரயில் பாதையில் மல் யுத்தம் நடக்கிறது. ரயில் வண்டி தூரத்தில் வருவ தும், இருவருக்குமிடையே போர் நடைபெறு வதும், என்ன நடக்குமோ என்று மக்களைத் திகைக்க வைப்பதும் இந்தப் படத்திலும் எல்லாப் படங்களையும் போல் வழக்கமாகவே வருகின்றன. அதோடு ராமு தனது குடும்பத் தினருக்காக வாங்கியிருந்த பொருள்களும், கோட்டும் ராமுவே மரித்து விட்டான் என்று தீர்மானிக்கப் பெரிதும் உதவியா யிருக் கின்றன. தீபாவளியைக் கொண்டாடும் மும்முரத்தில் இருந்த ராமுவின் மனைவிக்கும் தாய்க்கும் அவன் இறந்து விட்டதாகப் போலீஸ் இன்ஸ்பெக்டர் மூலம் தெரிய வரு கிறது. அவ்வளவுதான் ; குதூகலமாயிருந்த குடும்பம் குட்டிச்சுவராகி விடுகிறது. ராமுவின் மனைவி பூவிழந்து, பொட்டிழந்து, விடிழந்து, வாழ்வை இழந்து குழந்தை சந்தாவுடனும் வயோதிக மாமியாருடனும் பம்பாய்க்குச் சென்று மனிதப் பண்பு நிறைந்த ஒரு போலீஸ் காரரின் ஆதரவில் தங்குகிருள்.

சாதாரணமாகச் செல்லும் கதையில் திருப் பங்களையும், திண்டாட்டங்களையும் ஏற் படுத்துவதற்காக ராமு தப்பிப் பிழைத்து வில்லனின் இல்லம் சென்று, அவன் கணவன் ரயிலில் அகப்பட்டு இறந்த செய்தியைச் சொல்லுகிருன். அவன் கூற்றை அவள் நம்பா மல் அவனையே சந்தேகிக்கிருள். இதே சமயம் போலீஸ்காரர்கள் அவனைத் துரத்தி வந்து, கதவைப் பெயர்த்துக் கொண்டு உள்ளே நுழைகிருர்கள். தான் போலீசார் கையில் அகப்பட்டுக் கொண்டு விட்டால் என்ன செய்

வதுளென்று எண்ணிய ராமு ஆத்திரம் கொண்டு அவன் கழுத்தை நெரித்துவிட்டு ஓடிவிடுகிறான். ராமுவைக் காப்பாற்றுவதற்கென்றே ஒரு கதா போக்கிரி காருடன் லெவல்கிராஸிங்கில் காத்திருக்கிறான்.

முற்பகுதியில், ராமுவின் வீடு கேலியும், கும்மாளமுமாக அமர்க்களப்படுகிறது. மணமாகிப் பல வருஷங்களான தம்பதிகளின் சல்லாபங்களுக்கிடையில் இருவரும் சேர்ந்து பாடும் ஒரு பாட்டு வேறு நம்மைப் பழி வாங்குகிறது! அந்தக் காட்சி இன்னும் நாம் படத்துறையில் மிகவும் முன்னேற வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாயிருக்கிறது.

இதற்கு மேல்தான் திரைக்கதையில் ஒரு சங்கடமான திருப்பம். கண் பார்வையை இழந்துவிடும் பாட்டிக்குக் கண் வைத்தியம் செய்ய வேண்டும் என்று ராமுவின் மகள் சந்தா நாட்டியமாடப் போகிறாள். நாட்டியமாடும் சந்தாவின் அழகிலே மயங்கிக் கதா போக்கிரி அவளை அடையத் திட்டமிடுகிறான். ராமுவைப் போலீசாரிடமிருந்து காப்பாற்றியவன் அவன்தான். ராமு அச்சமயம் அங்கு வந்து அவன் கையிலிருந்து அவளை விடுவிக்கிறான். அவளோடு அவன் இருப்பிடம் வரை வந்த அவனுக்கு அவள் தன் மகள் என்று தெரிய வருகிறது. சந்தாவுடன் வீட்டுக்கு வந்த ராமுவை அவன் மனைவியும் அடையாளம் கண்டுகொள்ளுகிறாள். மகள் சந்தாவிடம் மட்டும் உண்மையைச் சொல்லவில்லை. ராமு ஒரு நாள் இரவு அந்த வீட்டில் தங்கியதன் காரணமாக அவன் மனைவி தாய்மை அடைகிறாள். அது தாய்மையற்ற நடத்தையினால் ஏற்பட்டதென்று ஊரார் தூற்றுகின்றனர். ஏன், அவள் மகள் சந்தாவே அன்னையை ஏசுகிறாள். இந்தக் கட்டம் மிகவும் வேதனையை அளிக்கிறது. சந்தாவின் காதலனை ஸப்-இன்ஸ்பெக்டர் சுந்தர், ராமுவைப் பழைய கொலைக்காகக் கைது செய்கிறான். ராமுவின் குடும்பத்துக்குப் புகலிடம் அளித்த புண்ணிய புருஷரான போலீஸ்காரர், ராமு கொலை செய்யவில்லை என்பதை ருசுப்படுத்தி அவனை விடுதலை செய்கிறார். ராமு கழுத்தை நெரித்துக் கொல்ல முயன்ற வில்லனின் மனைவியை டாக்ஸியில் அழைத்து வந்து விடுகிறார். அது எப்படிச் சாத்தியமாயிற்று என்பதுதான் விளங்கவில்லை!

அசோக்குமாருக்குப் படத்தில் வேலை அதிகமில்லை. ஆகவே, நடிப்பிலும் ஒன்றுமில்லை.

ராமுவின் மனைவியாக வரும் நிருபராய் நன்றாய் நடிக்கிறார். சந்தாவாக நந்தா நடிக்கிறார்; நடனமாடுகிறார்; கண்ணீர் வடிக்கிறார்; காதலிக்கிறார். அவர் பகுதி நன்றாயிருக்கிறது. பழைய நடிகை லலிதா பவர் ராமுவின் தாயாராக வந்து உருக்கமாக நடிக்கிறார்.

''அஞ்சல்'' படத்தில் அஞ்சலி செலுத்தும்படி உயர்வாக எதுவும் இல்லை. தமிழ்ப் படங்களுக்கு அஞ்சேல் என்று அபயமளிக்கும் விதத்தில், கதைப் பகுதி கனிசமாக நீட்டப்பட்டிருக்கிறது. சாரமெல்லாம் படத்தின் முற்பகுதியில் தங்கி விடுகிறது; சக்கையெல்லாம் வண்டலாகப் பிற்பகுதியில் நின்று சங்கடப்படுத்துகிறது! இளங்காதலர் இருவரும் பாடும் பாட்டு நன்றாயிருக்கிறது;

# தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

★

எல்லா மக்களின் தேவைகளையும் பூர்த்தி செய்ய

## ஒரு ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்தை

ஆரம்பித்திருக்கிறார்கள்

★

குறைந்த பட்சம் ரூ. 5/– லிருந்து அதிக பட்சமாக, அதன் பெருக்குத் தொகை ரூ. 500/– வரையில் டெபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்

பிரதி மாதம் டெபாஸிட் செய்யும் தொகையான

| | ரூ. 5 | ரூ. 10 | ரூ. 50 | ரூ. 100 |
|---|---|---|---|---|
| | கீழ்க் கண்டபடி பெருகும் | | | |
| 34 மாதங்களில் | ரூ. 180 | ரூ. 360 | ரூ. 1,800 | ரூ. 3,600 |
| 46 மாதங்களில் | ரூ. 250 | ரூ. 50) | ரூ. 2,500 | ரூ. 5,000 |
| 86 மாதங்களில் | ரூ. 500 | ரூ. 1,000 | ரூ. 5,000 | ரூ. 10,000 |

முழு விவரங்களுக்கு பாங்கின் எந்தக் கிளைக் காரியாலயங்களுக்காவது தயவுசெய்து எழுதவும்:

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

ஸி. பி. துரைக்கண்ணு
ஜெனரல் மானேஜர்

# காதல் பலி

சிற்பி

இரவின் பெரும் பகுதியை நித்திரையின்றிக் கழித்த சோமாவதி எழுந்தாள். சற்றுத் தூரத்திலுள்ள தாமரைக்குளத்தை நோக்கி ஓடினாள்.

கிழக்கு வெளுத்தது. செக்கச் செவேலென்றிருந்த கீழ்வானம் மஞ்சளாகி, வெண்மையடையத் தொடங்கியது. காலைச் சூரியனின் வெண் பொற்கிரணங்கள் மாநிலத் தாயின் மடியை வருடின. மணாளனைக் கண்ட மகிழ்ச்சியில் மெல்ல மெல்ல இதழ் விரிக்கும் தாமரைப் பெண்ணின் எழிலைத் தன் உள்ளம் நிறைய ரசித்தாள் சோமாவதி.

'எப்போது இதழ் விரிக்கும்' என்று காத்திருந்தாற்போல், கன்னங் கரேலென்ற வண்டு ஒன்றும், வெள்ளை வெளேரென்ற வாத்து ஒன்றும் அந்த அழகுத் தாமரையைச் சுற்றி வட்டமிட்டன. வாத்து கொத்தி விடுமோ என்ற பயம் வண்டுக்கு. வண்டு கொட்டி விடுமோ என்ற அச்சம் வாத்துக்கு. இந்தப் பரஸ்பர அச்சத்தினால் ஒன்றையொன்று முறைத்துப் பார்க்க, அவற்றைச் சிறிதும் இலட்சியம் செய்யாது, தன் ஆசைக் காதலன் அருகே வரமாட்டானா என்ற ஏக்கத்தில் சூரியனைப் பார்த்துக் கொண்டிருந்தாள் தாமரைப் பெண்.

குளிப்பதற்காக மார்பளவு நீரில் இறங்கிய சோமாவதியை அந்தக் காட்சி என்னவோ செய்தது. 'வண்டைப்போல் ஏதோ முணுமுணுத்தபடி என்னைச் சித்திரவதை செய்கின்றான் பியதாஸா. எதுவுமே பேசாது, வாத்தைப் போல் என்னையே பார்த்தபடி நிற்கிறார் ஞானானந்தர். ஆனால் என் மனமோ எங்கோ இருக்கிற என் இனிய மாதவனுக்காகவல்லவா தவமிருக்கிறது! ஏக்கப் பெருமூச்சுடன் இதழ்களை உதிர்த்து உதிர்த்து இறந்தொழியும் தாமரையைப்போல் நானும் ஏங்கி ஏங்கி இதயம் வெடித்துச் சாகத்தான்



வேண்டுமோ ! சோமாவதியின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் குளத்தில் விழுந்தது.

சோமாவதி கருணரத்னவின் அருமைப் புதல்வி. நன்றாக இருந்து நலிந்து போன குடும்பம் அவர்களுடையது. கருணரத்னவின் பீட்டன் ஒல்லாந்தர் காலத்தில் துவிபாஷியாக இருந்தவராம். அதன் காரணமாக அந்தக் காலத்திலேயே அவருக்குச் செல்வாக்கு அதிகம். செல்வம் சேர்ந்தது. பெரிய மாளிகை கட்டி அதில் ஆடம்பரமாக வாழ்ந்தார். நல்ல அந்தஸ்தையும் கௌரவத்தையும் தேடி வைத்தார். ஒல்லாந்தர் போக ஆங்கிலேயர் வந்தார்கள். அப்பொழுதும் அந்தக் குடும்பத்தின் செல்வாக்குக் குறையவில்லை. கருணரத்ன சிறுவனாக இருந்தபொழுது கூடச் செல்வமும் செல்வாக்குமாகத்தான் அவர் குடும்பம் வாழ்ந்தது. காலச் சுழற்சியில் எல்லாமே மாறிவிட்டன. நாட்கள் ஓட, மக்களின் மனத்தில் சுதந்திர உணர்ச்சி பொங்கி எழ, ஆங்கிலேயர் மீது இந்நாட்டு மக்கள் வைத்திருந்த பற்றும் பாசமும் ஓட, அதனுடன் சேர்ந்து கருணரத்னவின் செல்வமும் ஓடிவிட்டது !

ஒரு சிறிய வீடும் அதையடுத்து இரண்டு பரப்பு நிலமுமே மிஞ்சி யிருந்தன. நாள் முழுதும் நிலத்தில் பாடுபட்டாலும் அதிலிருந்து வரும் விளைச்சல் ஒரு மாதத்துக்குமேல் குடும்பத்தை நடத்தப் போதாது. வாழ்க்கை வண்டியை ஓட்டுவது கஷ்டமாக இருந்தது. பழைய கௌரவத்தைப் பற்றி இடக்காகப் பேசிக்கொண்டிராது ஏதாவது கூலி வேலை செய்வதற்கும் தயாராக இருந்தார் கருணரத்ன. ஆனால் நலிந்து மெலிந்திருந்த உடல் ஒத்துழைக்க மறுத்தது.

தானுக்கு நான் 'மதமத'வென்று வளர்ந்து வரும் சோமாவதி அவர் நிம்மதியைக் குலைத்து வந்தாள். கண்ணின்மணி போன்று வளர்த்த அவளைக் கண் கலங்க விடலாமா ? அவர் ஏழை என்பது உண்மைதான். அதற்காக, வாழ்வைச் சுவைக்கத் துடிக்கும் அவருடைய செல்வக்குமாரியைத் தடுத்து நிறுத்த அவர் ஒருப்படவில்லை.

தம் மனைவி சீலாவதியுடன் கலந்து யோசித்தார். காணியில் ஒரு பகுதியை விற்று விட்டு, அந்தப் பணத்தை முதலாக வைத்து ஒரு தேநீர்க் கடை ஆரம்பித்தார். வேறு வேலையாட்களை வைக்காது தமது குடும்பத்துடன் பாடுபட்டார் கருணரத்ன. பலகாரம் தயாரிப்பதில் தாயாரும் மகளும் ஈடுபட்டனர். பரிமாறும் வேலையும் பணம் வாங்கும் பொறுப்பும் கருணரத்னவினுடையவை. பலகார வேலை, நேரத்துடன் முடிந்து விட்டால், தகப்பனுருக்கு உதவியாகச் சோமாவதி வெளியில் வந்து வேலை செய்வாள். ஆனால் வியாபாரம் என்னவோ நடக்கவில்லை ; நகரவுமில்லை ; விழுந்து படுத்துக் கொண்டது. அநேக நாட்களில், விற்பதற்காகத் தயாரித்த பலகாரங்களைத் தின்பதற்காகமூன்றே மூன்று பேர்கள்தான் இருந்தனர் ; கருணரத்ன, சீலாவதி, சோமாவதி !

பூர்வீக சொத்தாகிய நிலத்தை விற்றதை நினைந்து நினைந்து வருந்தினர் கருணரத்ன. நிலம் கொடுத்த கொஞ்ச நஞ்ச நம்பிக்கையை நிலத்தை விற்ற பணம் கொடுக்கவில்லை. வறுமையை ஓட்ட நினைத்த அவர் வெறும் ஈயை மட்டும் ஓட்டிக் கொண்டிருந்தார் !







யாழ்ப்பாணம் கச்சேரிக்கு முன்னால் நடைபெறும் தமிழ் அரசுக் கட்சியின் மறியல் போராட்டத்தில் பொலிசாரின் குண்டாந்தடி பட்டுக் கால் முறிந்த தொண்டரை இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் பிரமுகர்களான திரு கே. ராஜலிங்கம், திரு சோமசுந்தரம், ஜனாப் அஸீஸ் ஆகியோர் யாழ்ப்பாணம் பெரிய ஆஸ்பத்திரியில் சந்தித்து ஆறுதல் கூறுகின்றனர்.

நாட்கள் கரைந்து, நம்பிக்கை கரைந்து, உடல் கரைந்து, உயிரும் கரைய ஆரம்பித்த கடைசி நேரத்திலேதான், அதிர்ஷ்ட தேவதை அவர் மீது தன் கண்ணோட்டத்தைச் செலுத்த ஆரம்பித்தாள்.

இரண்டாம் உலகப் போர் மிக மும்முரமாக நடைபெற்ற வேளை அது. பிரிட்டிஷாரின் யுத்ததளமாக இலங்கையும் உபயோகிக்கப் பட்டு வந்தது. ஜப்பான் போரில் குதித்து, இலங்கை இந்தியா முதலிய நாடுகளைக் கைப் பற்றுவதற்குத் திட்டமிட்டுக் கொண்டிருந்தது. ஆகவே இலங்கையிலுள்ள படைவீரர்களின் தொகையை அதிகரித்தது பிரிட்டிஷ் அரசாங்கம். இந்தியாவிலிருந்தும் மற்றைய நாடுகளிலிருந்தும் படைவீரர்கள் பலர் இங்கு கொண்டு வரப்பட்டனர்.

கருணாரத்னவின் கடையை அடுத்துள்ள கட்டுநாயக்காவில் இரண்டாயிரம் வீரர்கள் முகாமிட்டனர். எதிரியை விரட்டும் பணியில் தம் உயிரைக் கூடத் தியாகம் செய்யத் தயாராக இருந்த இந்த வீரர்களுக்காக, ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான ஆடுகளும், மாடுகளும், கோழிகளும் தம் உயிரைத் தியாகம் செய்தன. இவை போதாவென்று 'தேநீர் அலவன்ஸ்' என்ற பெயரில் தினமொன்றுக்குப் பத்து ரூபாய் ஒவ்வொருவருக்கும் வழங்கப்பட்டது. இந்தப் பணத்தைச் செலவு செய்யும் நோக்கத்துடன் பலர் கருணாரத்னவின் கடைக்கு வந்தனர்.

படுத்த வியாபாரம் எழுந்தது. தாயும் மகளும் தங்கள் கைவண்ணத்தைக் காட்டி ருசியான பலகாரங்களைத் தயாரித்தனர். அவர்களின் 'கிரிபத்' இராணுவ வீரர்களிடையே மிகுந்த புகழ் பெற்றிருந்தது.

மாலையில், மற்றவர்களுடன் நெருக்கியடித்துக் கொண்டு 'கிரிபத்' சாப்பிட விரும்பாத ஒரு சிலர் மற்றவர்களுக்குத் தெரியாதபடி ரகசியமாகப் பகல் வேளைகளில் கடைக்கு வந்து சாப்பிட்டு விட்டுப் பறந்து விடுவார்கள்.

அப்படி ரகசியமாக வந்து போனவர்களில் மாதவனும் ஒருவன். தினமும் பகல் பதினொரு மணிக்கு அங்கே வருவான்.

அந்தக் கிராமத்திலிருந்து அருகேயுள்ள சிறு நகரங்களுக்கும் வெகு தொலைவிலுள்ள கொழும்புக்கும் செல்லும் கந்தோர் உத்தியோகஸ்தர் சிலர் காலை ஏழு மணி சுமாருக்கு அங்கே வருவார்கள். அப்போதைய 'சிறு நெருக்கடி'க்குப் பிறகு, மாலை நாலரை மணி வரைக்கும் கடையில் ஈ ஓட்டுவதைத் தவிர வேறு வேலை இராது. அந்த வேலையைக் கருணாரத்ன தம் அருமை மகளிடம் ஒப்படைத்திருந்தார். சிலாவதி வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருப்பாள். கருணாரத்னவுக்கு வேறு பல வேலைகள் இருக்கும். ஆகவே மாதவன் வரும் வேளைகளில் சோமாவதி மட்டுமே கடையில் இருப்பாள்.

'கிரிபத்' என்ற சிங்களச் சொல் மட்டும் அவனுக்குத் தெரியும். 'சார்' என்பதைத் தவிர வேறு ஆங்கிலச் சொல் அவளுக்குத் தெரியாது. மாதவன் வந்தவுடன் 'கிரிபத்' எடுத்து வைப்பாள் அவள். மௌனமாக அதைச் சாப்பிட்டு விட்டுப் பத்து ரூபாய்த் தாளை எடுத்து நீட்டுவான் அவன். சில சமயம், அவள் சில்லறையை எண்ணிக் கொடுக்கும் வரைக்கும், காத்திருந்து வாங்கிக் கொண்டு போவான். பல தடவைகள் மிகுதிப் பணத்துக்குக் காத்திராமலே பறந்து விடுவான்.

பணத்தின் அருமையை உணராத அந்த மனிதனைப் பற்றி நினைக்கத் தொடங்கினாள் சோமாவதி. கடிய சொல்லும் கொடிய செயலும் நிறைந்த இராணுவத்தினரை அவள் கண்டிருக்கிறாள். குடிபோதையில் வந்து கடையில் நின்று கூச்சலிடுபவர்களைப் பார்த்துப் பயந்திருக்கிறாள். மாதவன் அவர்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டவனாக இருந்தான். அவனுடைய இரும்புத் தொப்பி, அரும்பு மீசை, சிவந்த மேனி, சிரித்த முகம், காக்கிச் சட்டை, காந்தப் பார்வை எல்லாம் அவளைக் கவர்ந்து இழுத்தன. பதினொரு மணியானதும் அவன் வரும் வழி மேல் விழி பதிக்கத் தொடங்கி விடுவாள்.

மாதவனுக்கும் ஏறக்குறைய இதே நிலைதான். கிணற்றடியில் நிற்கும் வாழையைப் போல் வாளிப்பாக வளர்ந்திருந்த அவள் கனவுக் கன்னியாக அவனுக்குத் தோற்றமளித்தாள். சாதாரணமாகவே நல்ல சுவையுடனிருந்த 'கிரிபத்' சோமாவதியின் கைபட்டு இன்னும் அதிகமாக இனித்தது.

எங்கோ பார்த்து எதையோ நினைத்து ஏங்கியபடி இருக்கும் சோமாவதியின் எழில் அவனைப் பைத்தியமாக அடிக்கும். தன் ஆசையை அடக்க முடியாமல் தவித்தான் மாதவன். உயிரைத் திருணமாக மதித்து இரா

# கோடை நெருங்கிவிட்டது




கோடைக்குகந்த துணிகளை வாங்க இதுவே தருணம்

உயர்தர பருத்தி நூலைக்கொண்டு நெய்யப்படும் பின்னி துணிகளை வாங்குங்கள். வெகு கவனத்துடன் கெட்டிச்சாயமிடப்பட்டோ அல்லது வெளுக்கப்படுவதால் பின்னி துணிகளின் உறுதி கெடுவதில்லை.

உற்பத்தியின் ஒவ்வொரு கட்டத்திலும் தரப் பரிசோதனை செய்வதால் பின்னி துணிகள் நேர்த்தியாக அமைந்து, நீடித்து உழைக்கின்றன.

கீழ்க்கண்ட ரகங்களிலிருந்து தேர்ந்தெடுங்கள்

ஷர்டிங்குகள் • காக்கி டிரில் வெளுத்ததும் மற்றும் கலர் டிரில்கள் • டவல்கள் • சுருக்கம் விழாத ஸூட்டிங்குகள் • டஸ்ஸார் பட்டுப் புடவைகள் மற்றும் பல




## பின்னி —
## துணி உலகில் புகழ்பெற்ற பெயர்

உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்கவும்

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
உரிமையாளர்கள் : பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

னுவத்தில் சேர்ந்த அவனுக்குத் தன் இதயத்தைத் திறந்துகாட்டும் தைரியம் இருக்கவில்லை. சோமாவதியின் எண்ணம் வேருக இருந்து, அவனைப் பற்றித் தாய்தந்தையருக்கு அவள் அறிவித்தால் அவனுடைய முதுகுத் தோல் உரிக்கப்பட்டு விடுமே! இராணுவத் தளபதி அறிந்தாராஞல், அவன் நிலை என்னுவது? 'கோர்ட் மார்ஷலை'ப் பற்றியோ, கொலைத் தண்டனைக்காகவோ அவன் அஞ்சவில்லை. அவனுடைய காதல் பகிரங்கப்படுத்தப் பட்டால், அவனுக்கு மட்டுமல்ல, அவனுடன் வந்த பாரத நாட்டு வீரர்களுக்குமல்லவா பொல்லாப்பு ஏற்படும்?

இப்படி ஒருவரை யொருவர் அறியாது ஒருவருக்காக ஒருவர் ஏங்கிக் கொண்டிருக்க, நாட்கள் ஒன்றையொன்று விழுங்கி ஏப்பம் விட்டுக் கொண்டிருந்தன.

அன்று என்ன காரணத்தினலோ மணி பன்னிரண்டு ஆகியும் மாதவன் வரவில்லை. அவன் வரவை எதிர்பார்த்து வழிமேல் விழி வைத்த வண்ணம் வாசலிலேயே நின்ருள் சோமாவதி. அதற்குப் பதிலாக இராணுவ லாரிகள் பல கன வேகத்தில் பறந்து வந்தன. ஏழெட்டு ஆகாய விமானங்கள் ஏககாலத்தில் பயங்கரக் கூச்சலுடன் அந்தப் பிரதேசத்தில் வட்டமிட்டன. பெரும் போருக்கான ஆயத்தம் தொடங்கியது.

உயிருக்கு அஞ்சிய மக்கள் மூட்டை முடிச்சுடன் ஊரை விட்டு ஓடினர். கருணரத்னவும் சீலாவதியும் அதற்கு விதி விலக்கல்லவே? தங்கள் மகளை அழைத்துக்கொண்டு திலகரத்னவின் ஊருக்கு ஓடினர்கள். திலகரத்ன அவள் தாயோடுகூடப் பிறந்தவர்; அவளுக்குமாமன்; பியதாஸா என்னும் பிள்ளைக்குத் தந்தை.

சில மாதங்களுக்கெல்லாம் இலங்கை மக்களைக் 'கெடிக் கலக்கு' கலக்கிய ஜப்பான் இறுதியில் சரணுகதி அடைந்து விட்டது. சண்டை முடிந்து சமாதானம் ஏற்பட்டது.

வந்த இடத்தில் இருந்தவர்கள் சொந்த இடத்துக்குத் திரும்பினர்கள். போர்க் கிலி மறைந்த பிறகு, மக்கள் மனத்தில் மறுபடியும் மகிழ்ச்சியும் கலகலப்பும் ஏற்படத் தொடங்கின.

கட்டுநாயக்காவுக்குத் திரும்பிச் செல்ல விரும்பிய கருணரத்னவையும் சீலாவதியையும் தடுத்து நிறுத்தினர் திலகரத்ன.

"இந்தக் கிழ வயதில், ஓய்வெடுத்துக் கொண்டு உல்லாசமாக வாழ்வதை விட்டு விட்டு, ஏன் உடம்பு முறியப் பாடுபட வேண்டும்? புத்த தேவனின் அருளால் என்னிடம் ஏராளமாகப் பணம் குவிந்து கிடக்கிறது. என் மகன் பியதாஸாவுக்கும் உங்கள் மகள் சோமாவதியை நன்ருகப் பிடித்துவிட்டது. இருவருக்கும் கல்யாணத்தைச் செய்து விட்டோமானுல், என் செல்வமும் வெளியே செல்லாது. நமது உறவு முறை இறுகிவிடும். நீங்களும் இனி இங்கேயே தங்கி விடலாம்" என்ருர் திலகரத்ன.

'எல்லாம் நன்மைக்கே' என்ற நம்பிக்கையுடைய கருணரத்ன மானஸிகமாக ஜப்பான்காரனை வாழ்த்தினர். அந்தஸ்து வேறுபாடு காரணமாக, தம் மைத்துனரே தம்மை அவமதித்து விடுவாரோ என்று பயந்திருந்த அவர் காதுகளில் இந்த அமிர்த வார்த்தைகள் விழுவதற்கு ஆதிகாரணம் அந்த ஜப்பான்காரன்தான் அல்லவா?

அவரைப் பொறுத்தவரையில், அவருடைய வாழ்க்கைப் பிரச்னையும், மகளின் கல்யாணப் பிரச்னையும் சுலபமாகத் தீர்ந்துவிட்டன. ஆனல் சோமாவதி...!

பெரியவர்களுக்கிடையில் நடைபெற்ற பேச்சு வார்த்தை அவளுக்குத் தெரியாது. காணியை விற்றுக் கடை கட்டிய தாய் தந்தையர் அதைக் கவனியாது, ஒண்ட வந்த இடத்தில் ஒரேயடியாக உட்கார்ந்திருப்பதன் காரணமும் அவளுக்குத் தெரியாது; பியதாஸா நேரத்துக்கொரு 'கைலி'யும் நிமிடத்துக்கொரு 'சிகரெட்'டுமாகப் புகைத்துத் தள்ளுவதும் அவளைக் கவர்வதற்காகத்தான் என்பதும் தெரியாது.

போரணியில் நிற்கும் மாதவனின் பொலிந்த உருவம்தான் அவள் கண்களுக்குத் தெரிந்தது. அவளுடைய கனவிலும் நினைவிலும் உடலிலும் உள்ளத்திலும் மாதவன்தான் நிறைந்திருந்தான். அவள் தனியாக இருக்கும்பொழுது அவன் வந்து சரஸ சல்லாபம் செய்தான். 'கிரிபத்' சாப்பிடும்பொழுது மாதவன் அதற்குள் கிடந்து இனித்தான்.

நாட்கள் செல்லச் செல்ல, பியதாஸாவையும் தன்னையும் பெற்ருேர்கள் இணைத்துக் கதைப்பது சிறிது சிறிதாகத் தெரிய வந்தது. உள்ளத்தில் உள்ளதை உரைக்கும் துணிவு அவளிடம் இருக்க வில்லை. வற்புறுத்தித் தன்னைக் கல்யாணம் செய்து கொடுத்து விடுவார்களோ என்ற பயம் அவள் மனத்தை அரித்தது.

தன் உள்ளங் கலந்து உறவாடியவரைத் தன்னுடன் என்றென்றும் இணைத்து வைக்கும்படி போதி முனிவனிடம் மன்ருடினுள். அந்தக் கிராமத்திலுள்ள பௌத்த விஹாரைக்குச் சென்று தினமும் தவம் கிடந்தாள். ஒவ்வொரு பௌர்ணமியின் போதும் 'சில்' அனுஷ்டித்தாள். காலையில் வீடு தேடி வரும் பௌத்த பிட்சுக்களுக்குத் தன் கையாலேயே அன்னமிட்டாள். இந்தப் புண்ணியச் செயல்களெல்லாம் ஒன்று இரண்டு தன் மாதவனை இழுத்து வந்து கண் முன்னே நிறுத்த மாட்டாவா என்ற ஏக்கம் அவளுக்கு.

ஆண்டுகள் இரண்டு உருண்டன. பல தடவைகள் பியதாஸா வெளிப்படையாகவே தன் ஆசையை அவளிடம் வெளியிட்டான். தனக்கு இருக்கும் சொத்து முழுவதையும் அவளுடைய காலடியில் கொட்டிக் குவிக்க அவன் தயாரா யிருந்தான். வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பேசி அவனுடைய வெறுப்பையும், மாமனின் பகையையும், தாய் தந்தையரின் அதிருப்தியையும் ஒரே முறையிலேயே கொள்முதல் செய்ய விரும்பாத அவள் ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு காரணத்தைச் சொல்லி அவனைச் சமாளித்து வந்தாள்.

தாய் தந்தையரின் நச்சரிப்பையும், பியதாஸாவின் கரைச்சலையும் பொறுத்துக்கொண்டு, தன் காதல் மாதவனின் வருகைக்காகப் போதி மாதவனின் புனித அடியார்களுக்குத்

தொண்டு செய்து கொண்டு வந்தபோது, அந்த விஹாரைக்குப் புதிதாக வந்து சேர்ந்தார் ஞானானந்த தேரோ. வந்தது மட்டுமல்ல, சோமாவதியின் வீட்டுக்கே, உணவு பெறுவதற்காகக் காலை வேளைகளில் வரவும் தொடங்கினார்.

அந்தப் பிட்சுவைப் பக்தியும் பணிவும் பரிவும் நிறைந்த கண்களால் பார்த்தாள் சோமாவதி. அவரைப் பார்க்கும்போது, தன் மாதவனையே பார்த்துக்கொள்வது போன்ற திருப்தி ஏற்பட்டது சோமாவதிக்கு. காலையில் அவர் வருவதற்கு முன்பாகவே, உணவுடன் அவருக்காகக் காத்திருக்கத் தொடங்கினாள்.

ஆனால், முடிவு விபரீதமாகி விட்டது. அவளைப்போலவே, அவரும் அவளை வெறித்து நோக்கினார். வீட்டில் வேறு யாரும் இல்லை என்பதை அறிந்தால் மெல்ல ஒரு மோகனப் புன்னகையை அவள்மீது வீசுவார். அவள் உணவளித்துவிட்டு உள்ளே சென்று மறையும் வரைக்கும் அவளையே பார்த்துப் பெருமூச்சு விட்டபடி, திரும்பிச் செல்வார்.

சோமாவதியின் நெஞ்சு நடுங்கியது. புனிதமான ஒரு தொண்டில் ஈடுபட்டிருக்கும் பிட்சுவைப் புன்மைப் படுகுழியில் வீழச் செய்தது அவளல்லவா? பாபத்தைச் சம்பாதித்தது மட்டுமல்ல, பிட்சு முறை தவறி நடந்தால்—எங்கோ இருக்கும் அவளுடைய மாதவன் என்றாவது ஒருநாள் அதை அறிந்தால்-என்ன கதி? புத்த பிட்சுக்களுக்கு எதிராக எதையும் சொல்லவோ, செய்யவோ கூடாது என்ற நம்பிக்கையில் ஊறிப் போனவள் அவள். இப்பொழுது, ஞானானந்தருக்கு எதிராக எதைச் சொன்னாலும், அவளுடைய தாய் தந்தையர் கூட நம்பப் போவதில்லை. ஒரு பக்கத்தில் பிட்சுவும் மறுபக்கத்தில் பியதாஸாவும் நின்று அவளைச் சித்திரவதை செய்தனர்.

ஆடவர் சிலர் குளத்துக்கு வந்தனர். நீரில் நின்று நினைவில் குளித்த அவள் வெளியே வந்தாள். யாரோ தூரத்து உறவினர் வீட்டுக்கு அவளது பெற்றோர் சென்றுவிட்டார்கள். அன்றைய உணவை அவளே தனியாகத் தயாரிக்க வேண்டியிருந்தது. இன்னும் சில மணி நேரத்தில் பிட்சுக்கள் வந்துவிடுவார்கள். அவசரமாக அவள் உணவைத் தயாரித்து முடிப்பதற்கும் வெளி வாசலில் ஞானானந்தர் வருவதற்கும் சரியாக இருந்தது.

ஞானானந்த தேரோ மட்டும் அன்று தனியாக வந்திருந்தார். மிகவும் பயபக்தியுடன் உணவை எடுத்துச் சென்றாள் சோமாவதி. பிட்சு அன்னத்தை வாங்கவில்லை. அவளையே பார்த்தார்: புன்முறுவல் பூத்தார். பயந்து பயந்து மிரண்டு மிரண்டு விழித்த சோமாவதியின் கைகளை எட்டிப் பிடித்து, ஒரு கடிதத்தைத் திணித்துவிட்டு ஓடிவிட்டார்.

திக்கித் திணறித் திகைத்து விட்டாள் சோமாவதி. உடம்பு ஒரேயடியாக வியர்த்துக் கொட்டியது. சில நிமிட நேரங்கள், ஒன்றுமே செய்வதறியாது அசைவற்று நின்றாள்.

நேரம் செல்லச் செல்ல, அவள் உள்ளம் சூடேறிக் கொதித்தது: பிட்சுவின் இந்த நடத்தைக்கு முடிவு காணத் துடித்தது.

பியதாஸாவைத் தவிர வேறெவரும் அவள் சொல்லை நம்ப மாட்டார்கள்; அவ

சொற்படி நடக்கவும் மாட்டார்கள். வாழ்க்கையில் முதன் முதலாக, பியதாஸாவின் வருகைக்காகக் காத்திருந்தாள் சோமாவதி. கடிதத்தைப் படிக்காமலே மடியுள் வைத்து மறைத்துக் கொண்டு அவனுக்காகக் காத்திருந்தாள்.

பியதாஸா வந்தான். 'காற்றில் ஏறியவ் விண்ணையும் சாட'த் தயாராயிருந்த அவன் சோமாவதியின் சொல்லைக் கேட்டவுடன் பறந்தான் பௌத்த விஹாரையை நோக்கி.

அவன் சென்ற பின், சற்று நிம்மதியடைந்த சோமாவதி, கடிதத்தைப் பிரித்தாள். அதைக் கிழித்து அடுப்புக்குள் எறிவதற்கு முன், அதில் என்ன எழுதப்பட்டிருக்கின்ற தென்பதை அறியும் ஆவல் அவளுக்கு!

பிட்சு எழுதியிருந்தார்:

அன்புள்ள சோமாவதி,

பௌத்த 'விநாயா'வுக்கு மாறாக நான் இந்தக் கடிதத்தை எழுதுவதற்காகப் பகவான் புத்தர் என்னை மன்னித்தருள்வாராக.

சில ஆண்டுகளுக்கு முன், கட்டுநாயக்காவில் உன் தந்தை தேநீர்க் கடை வைத்திருந்த போது 'இரிபத்' சாப்பிடுவதற்குத் தனியாக வரும் மாதவன் என்ற இராணுவ வீரனை நீ மறந்திருக்க மாட்டாய். உன் அழகிலும் குணத்திலும் தன் மனத்தைப் பறி கொடுத்த அவன் உனக்காக, தன் இராணுவ உத்தியோகத்தையும் உதறித் தள்ளத் தயாரா யிருந்தான். தற்செயலாக நடைபெற்ற ஒரு சம்பவத்தினால் உன்னுடைய மனநிலையையும் நன்கு தெரிந்துகொண்ட அவன், தன் முடிவை இராணுவ அதிகாரிக்குத் தெரிவிக்கும் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி யிருந்தான். ஆனால் அவனுடைய துரதிர்ஷ்டம், ஜப்பான்காரரின் படையெடுப்பு பற்றிய செய்தி கிட்டி உடனேயே போருக்குப் புறப்பட வேண்டியதாயிற்று. இந்தியாவுக்கும், பர்மாவுக்கும் சிங்கப்பூருக்குமாக அவன் மாறி மாறிப் பறந்து திரிந்தான். ஒரு வழியாகப் போர் முடிந்து சமாதானம் ஏற்பட்டபிறகு மறுபடியும் உன்னைத் தேடிக் கட்டுநாயக்காவுக்கு வந்தான். உன்னைக் காணவில்லை. கடையை அடுத்து வாழ்ந்த மக்களிடம் உன் குடும்பத்தைப் பற்றி விசாரித்தான். சரியான தகவல் அவனுக்குக் கிடைக்கவில்லை. அக்கம்பக்கத்திலுள்ள கிராமங்களில் தேடினான்; பலன் கிடைக்கவில்லை. என்றாலும் என்றாவது ஒரு நாள் உன்னைச் சந்திக்க முடியும் என்ற நம்பிக்கை அவனிடம் இருக்கத்தான் செய்தது. அப்படி உன்னைச் சந்திக்கும் சந்தர்ப்பத்தில், உள்ளம் திறந்து உன்னுடன் உரையாடி ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் உனக்கு ஊட்ட வேண்டும் என்பதற்காக உன் மொழியைக் கற்கத் தொடங்கினான். மிகுந்த ஆவலுடன் உன் சிங்கள மொழியைக் கற்ற போது, அந்த மொழியில் எழுதப்பட்டுள்ள ஏராளமான பௌத்த நூல்களையும் படித்தான். அன்பு மதமாகிய பௌத்தத்தைப் பற்றி நன்கு அறியும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. உன்னைக் காணாத ஏக்கத்தில் உள்ளம் சோர்ந்திருந்த அவனுக்கு, பௌத்தம் புதியதோர் உலகைக் காட்டியது. அனுகுண்டினால் உலகினை அடக்கி ஆள முயலும் ஆங்கிலேயரின் கீழிருந்து, அனுதினமும் ஆடு, கோழிகளைத் தின்று வயிறு வளர்க்கும் தன் அவல வாழ்வையும், அன்பினால் உலகினை ஆண்ட ஆரியஜோதியின் அற வாழ்வையும் எண்ணிப் பார்த்தான். சமரின் முடிவில் சாம்ராட் அசோகனுக்குக் கிடைத்த சன்மார்க்க ஒளி உன் மாதவனுக்கும் கிடைத்தது. தன்னை மறந்து, உலக மக்களின் ஈடேற்றத்துக்காகத் தன்னை அர்ப்பணித்தான்; பௌத்தத் துறவியானான்; மாதவன் என்ற பெயரை விட்டெறிந்தான். ஞானானந்த தேரோ என்ற பெயர் அவனுடன் ஒட்டிக் கொண்டது. ஆனால்....''

'அம்மே'யென்று பயங்கர ஓலமிட்டாள் சோமாவதி. கடிதத்தை அதற்கு மேல் படிக்க முடியவில்லை அவளால்! தினமும் அவள் வீட்டுக்கு வந்து அவள் கையால் உணவு வாங்கும் பிட்சுவா அவளுடைய ஆசைக் காதலன் மாதவன்? அவரைக் கண்டுபிடித்து விடும்படியாகவா பியதாஸாவிடம் அவள் சொல்லியனுப்பினாள்? ஆச்சரியப்படுவதா, ஆனந்தப்படுவதா, ஆத்திரப்படுவதா என்று புரியாமல் தவித்தாள் அவள்.

தன் மேலுள்ள ஆசையினால், பியதாஸா விபரீதமாக ஏதாவது செய்து விடுவானோ என்ற பயம் இப்பொழுதுதான் அவளுக்கு ஏற்பட்டது. உடனடியாகச் சென்று அவனைத் தடுத்துவிடத் துடித்தாள் அவள். படபடத்தது அவள் உள்ளம்.

போட்டது போட்டபடியே கிடக்க ஓடினாள், பௌத்த விஹாரையை நோக்கி.

இடைவழியில் —

வெட்டுக் காயங்களுடன் இரத்த வெள்ளத்தில் மிதந்த ஞானானந்த தேரோ உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தார். அருகில் வேறு எவருமே இல்லை.

உடல் நடுங்க, உயிர் கலங்கக் 'கோ'வென்று கதறிய சோமாவதி அந்தப் புனிதரைத் தூக்கித் தன் மடியில் கிடத்தினாள். இதயம் கரைந்து கண்ணீராக ஓடியது.

''சோமாவதி! வந்து விட்டாயா? கடைசி நேரத்திலாவது உன்னைப் பார்த்ததில் எனக்கு மகிழ்ச்சி. மஞ்சள் உடைக்குள் இருந்து கொண்டு மங்கை ஒருத்தியிடம் மனத்தைச் செலுத்திய நான் மகா பாபிதான்... அதற்காக உரிய தண்டனையை நான் பெற்று விட்டேன். சோமாவதி! உன் தூய அன்பை என்னால் மறக்க முடியவில்லை. உன்னை ஏமாற்றி விட்டேனே என்ற நினைவைப் பொறுக்கவே முடியவில்லை'' என்று முக்கி முனகிப் பேசினார் ஞானானந்தர்.

உணர்ச்சிக் கொந்தளிப்பினால் எதையுமே பேச முடியாதபடி இருந்த சோமாவதியின் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாய், ஆறாய், கடலாய்ப் பெருகியது. துடிக்கும் நெஞ்சுடன் அவரைத் தூக்கி யணைத்து, தன் துன்ப வாழ்வை நினைத்துக் கண்ணீர் பெருக்கினாள்.

தற்செயலாக வருபவனைப் போல் வந்த பியதாஸாவுக்கு ஞானானந்தரின் செந்நீருடன் அவர் மீது தன்னை ஏவிவிட்ட சோமாவதியின் கண்ணீர் கலந்த காரணம் என்னவென்பது தெரியவேயில்லை!

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 17. உல்லாச மாளிகை!

**ப்**ரைட்டன் ஸ்டேஷனுக்கு எங்கள் ரயில் வண்டி வந்தபோது, மத்தியானம் பன்னி ரண்டு மணி! ப்ரைட்டனில் முதல்தரமான இந்திய விடுதி இருக்கிறது என்று லண்டனி லேயே கேள்விப்பட்டிருந்ததால், அந்தச் சாப்பாட்டுக்கும் இடம் வைத்துக் கொண்டே சென்றிருந்தேன். வண்டியிலிருந்து இறங்கி னேனோ இல்லையோ, ''கூலி'' என்று சத்தம் கேட்டது! எனக்குத் தூக்கிவாரிப் போடா மல் என்ன செய்யும்! ஆனால் கையில் மூட்டை முடிச்சுக்கள் ஏதும் இல்லாததால் போர்ட்ட ரைப் பார்த்து ஓர் ஆனந்தப் புன்னகைமட்டும் செய்தவண்ணம் மேலே நடந்தேன்.

'கூலி' என்ற சொல் ''கூலம் - தானியம்'' என்ற பழைய தமிழ்ச் சொல்லிலிருந்து தோன் றிய அசல் தமிழ் வார்த்தை! இந்தியாவி லிருந்து இப்படி ஒரு வார்த்தை ப்ரைட்டன் போர்ட்டரின் நாக்கிலே போய் உட்கார்ந் திருந்தது எப்படி என்று யோசித்த எனக்கு, அந்த ஊரில் இந்திய நாகரிகமே போய் உட் கார்ந்துகொண்டிருப்பதும், பல இந்தியர்களின் உடல் அந்த ப்ரைட்டனின் வான வெளி யிலே கலந்திருப்பதும் பிறகு தெரிய வந்தன.

ஸ்டேஷனுக்கு வெளியே வந்ததும், தொலை பேசிக் கூண்டுக்குள்ளே நுழைந்தேன். ''ஐ'' என்ற ஆங்கில எழுத்துக்குக் கீழே 'இந்திய விடுதி' எங்கே இருக்கிறது என்று தொலை பேசிப் புத்தகத்தைப் புரட்டினேன். அப்படிப் பட்ட பெயரையே காணோம்! மறுபடியும் மெதுவாகப் புரட்டிக் கொண்டே வந்தபோது, ''மதராஸ் காபே'' என்ற பெயரைப் பார்த்து அப்படியே பிரமித்துப் போய் விட்டேன். 'வாழ்க மதராஸ்' என்று நெஞ்சுக்குள் வாழ்த் திக் கொண்டே தொலைபேசியிலே மதராஸ் காபேயின் எண்களை வட்டம் சுற்றினேன்.

'மதராஸ் காபே'யின் சொந்தக்காரர் யார் என்ற சந்தேகத்துக்கு இடம் வைக்காமல், ''நமஸ்தே, நமஸ்காரம், வணக்கம்!'' என்று மூன்று வார்த்தைகளையும் சேர்த்துச் சரமாரி யாக ஒரு போடு போட்டேன்.

''அப்படி வாங்க ஸாஆஅர் வழிக்கு!'' என்று வந்ததே பதில்!

''சென்னையிலிருந்து வந்திருக்கிறேன்...'' என்றேனோ இல்லையோ, மடமட வென்று மேலே பேசினார் ஆசாமி. ''வாங்க ஸார் நேரே இங்கே! ஏ ஒன் எலுமிச்சம்பழச் சாதம் சூடா ரெடியா இருக்கு'' என்று தனித் தமிழிலே சொன்னார் நாராயண ராயர்!!

நம்முடைய ராயப்பேட்டை ஐ. ஓ. ஏ. விடுதியில் இருந்த நாராயண ராவ்தான் இப்பொழுது ப்ரைட்டனில் 'மதராஸ் காபே' என்ற பெயரில் சித்திரான்னங்களை ''ஜமாய்''த்துக் கொண்டிருக்கிறார்!

'பஸ்'ஸில் ஏறி நேரே ப்ரின்ஸ் ஆல்பேர்ட் தெருவுக்குப் போய் இறங்கினேன்! கறிவேப் பிலை தமிழ் மணம் கமழ வரவேற்றது! அப்பள மும் ஊறுகாயும் அவியலும் பக்கவாத்தியங்க ளாக வைத்துக்கொண்டு, சித்திரான்னக் கச்சேரியை ''சவிஸ்தாரமாக''வே முடித் தேன். நாராயண ராயரும் அவருடைய மனைவியும் செய்த உபசாரத்தில் எலுமிச்சம் பழச் சாதம் சர்க்கரைப் பொங்கலாகத் தித்தித்தது!

**'ம**தராஸ் காபே'யிலிருந்து வெளியே வந்து வலது பக்கம் திரும்பியதுமே 'குளுகுளு' என்று கடற்காற்று வீசியது. தூரத்தில் அலை வீசிக்கொண்டு நின்ற நீலக்கடல் உள்ளத்தை ஈர்த்தது!

போகும்போதே வழியில் இருந்த கடற் காட்சி நிலையத்துக்குள் நுழைந்தேன். அங்கே எத்தனையோ விதமான நீர்வாழ் விலங்குகளை யும் விநோதப் பறவைகளையும் கண்டு வியப் படைந்தேன். 'பெங்க்வின்' பறவைகள் இரண்டு கண்டேன். இவை தவிர கருநீலக் கிளி ஒன்று; கழுத்து மஞ்சள் நிறம், அடியும் மஞ்சள். மேனி முழுதும் நீலமேக சியாமள வர்ணம். இரண்டடி நீளம் ஓரடி உயரத்தில் நின்றது இந்தக் கிளி ஒரு வண்ணக் கூண்டுக் குள்ளே! இதன் அருகில் இன்னொரு கூண் டிலே ஒரு தண்டி வெள்ளைக் கிளி: இறகு ரோஜா நிறம்! கொண்டை கனகாம்பரம்! பக்கத்திலே சென்றதும் அது உடலைச் சிலிர்த் துக்கொண்டே எம்பி நின்ற காட்சி இப்பொ ழுது நினைத்தாலும் கண் முன்னே நிற்கிறது.

இந்தக் காட்சிச்சாலையிலிருந்து நேரே கடற் கரையை நோக்கி நடந்தேன். ஆகா! என்ன கடற்கரை போங்கள்! நம்முடைய சாந்தோம் மாதிரி மணற்பரப்பு இல்லைதான். ஆனாலும் என்ன? பொடிப் பொடிக் கற்களாகக் கரை யெல்லாம் பரவிக் கிடக்கிறது. கடலின் தண்ணீரோ மிதமிஞ்சிய கப்பல்களின் போக்குவரத்து காரணமாக ஒரே எண்ணெ

யாக மிதக்கிறது! என்றாலும் ஆங்கில மக்கள் மனம் கலங்கவில்லை. எண்ணெயை உறிஞ்சிக் கொள்வதற்காக ஒரு மாற்று மருந்தை அங்கே மூட்டை மூட்டையாகக் கொட்டி விட்டு, கடலிலே குளித்த பிறகு மேலேயுள்ள எண்ணெய் போவதற்காகக் கரையிலேயே பல குளியறைகளும் கட்டி வைத்திருக்கிறார்கள்! நீந்தும்போது உபயோகிப்பதற்கான காற்றுப் பைகள், குளிப்பதற்குரிய சிறிய அங்கிகள் ஆகிய கோலங்களுடன் உயரமான செயற்கை மேடைகளிலிருந்து ஆணும் பெண்ணும் குழந்தைகளும் வரால்-பாய்ச்சல் பாய்ந்த வண்ணமாக இருக்கிறார்கள்! கூழாங்கற்கள் பரப்பிய கரையிலே இன்னொரு விநோதக் காட்சி. சாய்வு நாற்காலிகளிலும், சிறு சிறு இருக்கைகளிலும், விரிப்புக்களிலும் உட்கார்ந்துகொண்டும் புரண்டு கொண்டும் ஆங்கில மக்கள் வெயில் காய்வது ப்ரைட்டனின் முக்கிய சிறப்புக்களில் ஒன்று!

நம்மூரில் கறுப்பாகப் பிறந்து விட்டதற்காக எத்தனை குழந்தைகள் மிகவும் கவலைப் படுகிறார்கள்! ஆனால் இங்கிலாந்தில் வெள்ளை வெளேர் என்று இருக்கும் குழந்தைகள் கறுப்பு நிறம் வேண்டும், அல்லது ஒரு தவிட்டு நிறமாவது வேண்டும் என்று சூரிய பகவானைப் பார்த்துத் தவமிருக்கிறார்கள்! கடற்கரை முழுதும் தம்பி தங்கைகளும், அப்பா அம்மாக்களும், பாட்டிகளும் கூடச் சூரியனை நோக்கி உட்கார்ந்துகொண்டு வெய்யில் மிக நன்றாக உடம்பிலே படும்படி நீண்ட நேரம் கதிர் காய்கிறார்கள்! வெள்ளை நிறம் கொஞ்சம் கறுப்பாக மாறுவதற்கென்றே இங்கே சில சாயப்பூச்சுக்கள் விற்கிறார்கள். இதையும் பூசிக்கொண்டு இவர்கள் வெய்யிலிலே உட்கார்ந்திருப்பதைக் கூட்டம் கூட்டமாகப் பார்க்கலாம்!

கடற்கரையிலிருந்து மேலே நடைபாதைக்கு வந்து, நெடுஞ்சாலையிலே வளைந்து சென்றால் விநோதக் கேளிக்கை நகரம் என்று ஒன்று நிற்கிறது! கடலுக்குள்ளே நெடுந்தூரம் பாலம் போன்று அமைத்து, அந்தப் பாலத்தின் மேலேயே இந்தக் கேளிக்கைபுரத்தை நிர்மாணித்திருக்கிறார்கள் என்றால் அந்தப் பாலத்தின் நீளமும் அகலமும் எத்தனை என்பதை ஊகித்துக் கொள்ளுங்கள்! நம் ஊரில் "பாம்பே ஷோ" "இங் ஷோ" என்றெல்லாம் பார்த்திருக்கிறோமே அத்தனையும் இந்த உல்லாசபுரிக்குள்ளே இருக்கின்றன! வேடிக்கை விநோதக் காட்சிகள், சூதாடும் இடங்கள், விதம் விதமான அங்காடிகள், குட்டி ரயில்கள், வேடிக்கை மோட்டார்கள், ராட்டினங்கள், இவற்றுக்கு மத்தியிலே சோளப்பொரியும் நிலக்கடலையும் சூடாக விற்கும் கடைகள்! இந்தப் பொரியை வாங்கிச் சாப்பிடலாமா, அதிலும் நம்முடைய கோட்டும், டையும், ஓவர்கோட்டும் என்ன போடு போடுகின்றன என்று நான் தயங்குவதற்கு அவசியமே இருக்கவில்லை! அங்கே நான் பார்த்த ஆங்கில ஆடவர், பெண்டிர், குழந்தைகள் எல்லாரும் பொரியையும் கடலையும் வாங்கிக் கொறித்துக் கொண்டே நடந்து சென்றார்கள்! அதுமட்டுமில்லை; நம்மூரில் விற்கிறதே பஞ்சுமிட்டாய், இதற்கு அங்கே (காண்டி ப்ளவர்) "சர்க்கரைப் பூ" என்று பெயர்! கன்னிப் பெண்கள் எல்லாம் இந்தக் "காண்டி ப்ளவ"ரும் கையுமாகவே நடந்து செல்கிறார்கள்! நானும் துணிந்து சென்று ஒரு கையில் சோளப் பொரியும் இன்னொரு கையில் நிலக்கடலையுமாகக் கம்பீரமாக நடந்து சென்றேன்.

மாஜிக் நடக்கும் காட்சிகள், திரைப் படங்கள், சங்கீத விளையாட்டுக்கள் ஆகியவற்றுக்கு மத்தியிலே சோதிடச் சாலைகள்! இயந்திரம் ஒன்றில் அரை ஷில்லிங்கைத் திணித்துவிட்டு அதிலுள்ள ஒரு தளத்திலே உள்ளங்கையைக் கொண்டு வைக்கவேண்டும். 'தடதட' வென்று இரண்டு நிமிஷங்கள் அந்த இயந்திரம் இயங்குகிறது. சத்தம் நின்றதும், கீழேயுள்ள ஒரு குழியில் கைரேகையும் பலன்களும் அச்சிட்ட ஒரு காகித அட்டை குதித்துக் கொண்டு வந்து விழுகிறது. இது போலவே 'பிரச்னைகளும்' ஆருடக் குறிகளும் சொல்லுகிற இயந்திரங்கள் அங்கே வரிசையாக நிற்கின்றன. லண்டனிலும் சில இடங்களில் இந்த இயந்திரங்கள் உண்டு. என்றாலும் ப்ரைட்டனில் மிக மிக அதிகம்!

"பார் பார் பட்டணம் பார்" என்கிற இந்தக் கேளிக்கை உலகத்திலிருந்து வெளியே வந்து, பஸ்ஸில் ஏறிச் சென்றால், புகழ் பெற்ற "அணி மாளிகை" என்ற அரச இல்லத்துக்கு வந்து சேருகிறோம். இந்தியர்கள் பலர் தங்கியிருந்த இடம் என்றும் இந்தியக் கட்டடக்கலையும், இந்தியப் பண்பாடும் இணைந்து அமைந்த மாளிகை என்றும் பாராட்டப்படுகிற இந்த அரண்மனைப் பகுதியை நெருங்கும்போதே, இந்தியாவில் இருப்பது போன்ற ஒரு மயக்கம் ஏற்படுகிறது. பெரிய வெங்காயத்தை வைத்தாற் போன்று தோற்றம் தருகிற கூண்டுக் கோபுரங்களோடு கூடியதாய்த் தில்லியிலேயுள்ள முகலாய மாளிகைகளை நினைவுபடுத்துகிறது இந்த அழகான அரண்மனை!

பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியில் டாக்டர் ரஸ்ஸெல் என்ற நிபுணர் கடலில் நீராடுதல் உடம்புக்கு நல்லது என்று ஒரு வைத்திய முறையை ஆங்கில மக்களிடையே பிரசாரம் செய்யத் தொடங்கினார். இதைச் சோதித்துப் பார்க்க வேண்டும் என்று விரும்பி 1783ம் ஆண்டில் வேல்ஸ் இளவரசர் ப்ரைட்டனுக்கு வந்தார். கடலில் நீராட வந்தவர் ஒரு காதலிலே சிக்கினார். இதன் விளைவாக அடிக்கடி இந்த ஊர்க் கடலை நாடி வர ஆரம்பித்தார் அவர். தந்தையான மூன்றாம் ஜார்ஜ் மன்னருக்கும் இளவரசருக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது. என்றாலும் இளவரசர் இதைப் பொருட்படுத்தவில்லை. யாருக்கும் தெரியாமல் இரகசியமாகவே தமது காதலியைத் திருமணம் செய்துகொண்டு விட்டார்! அந்தக் காதலோடு சேர்ந்து வளர்ந்த மாளிகைதான் இந்த அரண்மனை! பழைய கட்டடத்தை உல்லாச மாளிகையாய் மாற்றியமைப்பதற்காக இளவரசர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலப் பல. சீன முறைப்படி இந்தக் கட்டடம் அமையவேண்டும் என்று ஆரம்பித்து, படிப்படியாக அது இந்திய முறையிலே

உருவாகியது! தினந்தோறும் நூற்று ஐம்பது கொத்தர்கள் வேலை செய்தார்களாம். இந்தச் செலவும் இளவரசரின் கேளிக்கைகளும் படாடோபங்களுமாகச் சேர்ந்து சுமார் ஆறரை லட்சம் பவுன் வரை கடனிலே கொண்டு போய் விட்டதாம்! இரகசிய மனைவியைப் புறக்கணித்துவிட்டு முறைப்படி வேறு திருமணம் செய்து கொண்டாலன்றி இந்தக் கடனைத் தீர்ப்பதில் தாம் உதவி செய்ய முடியாது என்று அரசர் மறுத்து விட்டாராம். இதனால் இளவரசர் தமது காதலியை மறந்து விட்டு அரசகுமாரி காரொலினை மணந்தார். என்றாலும், வாழ்க்கை நிம்மதியில்லாமல், மனைவிக்கும் இவருக்கும் சண்டை ஏற்பட்டு இருவரும் பிரிந்தார்கள். மறுபடியும் இளவரசர் ப்ரைட்டனுக்கு வந்து தமது காதலியை நாடினாராம். அந்த உறவு மீண்டும் புதுப்பிக்கப்பட்டதாம். இதையெல்லாம் பற்றி இன்னும் பல்வேறு செய்திகளோடு சரித்திரக் குறிப்புக்கள் அங்கே இருக்கின்றன.



ப்ரைட்டன் மாளிகை

1808-ம் ஆண்டில் எழுபதினாயிரம் பவுன் செலவில் இந்த அரச மாளிகை புதுப்பிக்கப்பட்டு, இந்தியாவில் உள்ள முகலாய மாளிகைகளின் ''மோஸ்த''ரில் புனர் நிர்மாணம் பெற்றது. இந்தியாவுக்கு வந்து போன இரண்டு ஆங்கிலேய நிபுணர்களின் சித்திரங்களைக் கொண்டே இந்தச் சிற்ப முறை வகுக்கப்பட்டதாம்.

மூன்றாம் ஜார்ஜ் மன்னர் இறந்ததும் (1820) இளவரசர், நான்காம் ஜார்ஜ் என்ற பெயரில் பட்டம் சூடினார். அடுத்த ஆண்டில் இந்தக் கட்டட வேலை முழுதும் சீராக முடிந்து, இந்த மாளிகையின் புகழ் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் பரவியது. விக்டோரியா ராணியின் ஆட்சிக் காலத்தில் இந்த மாளிகை ப்ரைட்டன் நகராண்மைக் கழகத்துக்கு விற்பனை செய்யப்பட்டது.

முதலாவது உலகப் போரின்போது ஆங்கிலேயர்களுக்காகச் சண்டை செய்த நம்முடைய இந்திய வீரர்களிலே பலர் படுகாயமடைந்து இந்த மாளிகைக்கு வந்துதான் சிகிச்சை பெற்றார்களாம்! மடிந்துபோன இந்திய வீரர்களை எரித்த இடத்தில் ஒரு நினைவுச் சின்னம் இருக்கிறது. இதுதவிர, மாளிகைக்கு வெளியே ''தெற்கு வாசல்'' என்ற பெயரில் ஒரு பெரிய நகர வளைவும் கட்டப்பட்டிருக்கிறது. இது இந்தியர்கள் நன்கொடை!

அரச மாளிகைக்குள் ஜார்ஜ் மன்னர் உபயோகித்த புத்தகங்களிலே திருக்குர் ஆன் ஒன்றும், இந்தியாவின் சரித்திரம் பற்றி மூன்று பாகங்கள் கொண்ட ஆங்கில நூல் ஒன்றும் இருப்பதைப் பார்த்தேன். இவை தவிர, நம்முடைய பாடலிபுரத்திலிருந்து சென்ற ஷேக்தீன் முகம்மது என்ற ஒரு வைத்தியருடைய உருவப்படங்கள் இரண்டும் மாளிகையின் மாடியிலே தொங்குகின்றன. ஆராய்ந்து பார்த்ததில் இந்த வைத்தியர் அரசருக்கு லேகியங்களும், தைலங்களும் செய்து கொடுத்தார் என்று தெரிந்தது.

இந்த மாளிகைக்குச் சற்றுத் தொலைவில் ஒரு காட்சிச்சாலை இருக்கிறது. இதில் என்னைக் கவர்ந்த பொருள் கி. மு. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த நம்மூர் நாணயம்!

இரவில் அரச மாளிகையும், அதைச் சுற்றி நின்ற கட்டடங்களும், பள்ளிவாசல் போன்ற கோபுரங்களுமாக நிலவிலே எழுந்து நின்ற காட்சி இந்தியாவின் தலைநகரமாகிய தில்லியில் இருப்பது போன்ற ஒரு நினைவையே உண்டாக்கிற்று. வின்சர் நகரத்துக்குப் போய் அங்குள்ள மாளிகையைப் பார்ப்பதுவரையில் இந்த நினைவே மனத்தில் சுழன்று கொண்டிருந்தது!

(தொடரும்)

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## ஈரல் குலைக் கட்டிகளுக்கு

### வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும் சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் **ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதி**களில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரைக் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | நேரம் | விலாசம் |
|---|---|---|---|
| கரூர் | 1 | 9 to 11 காலை | சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| நாமக்கல் | 1 | 2 to 3 மாலை | டவுன் மெடிகல் ஹால், பரமதி ரோடு |
| சேலம் | 2 | 9 to 11 காலை | சாந்திநிகேதன் லாட்ஜ் (கோயமுத்தூர் |
| | | 3 to 5 மாலை | லாட்ஜ் பிராஞ்ச்) |
| பவானி | 3 | 9 to 10 காலை | எம்.எஸ்.செட்டியார் & சன்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| ஈரோடு | 3 | 11 to 12 பகல் | நவபவனம் லாட்ஜில் (கோஷா ஆஸ்பத்திரி எதிரில்) |
| திருப்பூர் | 3 | 3 to 5 மாலை | ஆர். எஸ். வாசன் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| கோயம்புத்தூர் | 4 | 9 to 11 காலை | ஈஸ்வர் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| | | 3 to 5 மாலை | நாடார் மான்ஷன், ரங்கை கவுடர் தெரு |
| பொள்ளாச்சி | 5 | 9 to 11 காலை | எஸ். எஸ். மணி & கோ., கெமிஸ்ட்ஸ் |
| உடுமலைப்பேட்டை | 5 | 4 to 5 மாலை | ராஜேந்திரா & கோ., மெடிகல் ஷாப் |
| பழனி | 6 | 9 to 11 காலை | ஷண்முகானந்தா பவன், ரயில்வே பீடர்ஸ் ரோடு |
| திண்டுக்கல் | 6 | 3 to 5 மாலை | சி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ், ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மதுரை | 7 | 9 to 12 பகல் | டி.என்.சி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ் கெமிஸ்ட்ஸ், வடக்கு சித்திரை வீதி |
| | | 4 to 6 மாலை | |
| | 8 | 9 to 11 காலை | |
| | 23 | 9 to 12 பகல் | |
| விருதுநகர் | 9 | 8 to 9 காலை | சரவணமுத்து பிள்ளை சத்திரம் மதுரை ரோடு |
| கோயில்பட்டி | 9 | 10½ to 12 பகல் | தனலக்ஷ்மி மெடிகல் மார்ட், கெமிஸ்ட்ஸ் |
| தூத்துக்குடி | 9 | 3 to 5 மாலை | வி. எஸ். சங்கரலிங்கம் பிள்ளை தூத்துக்குடி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருநெல்வேலி ஜங். | 10 | 8 to 12 பகல் | சந்திர விலாஸ் ஓட்டல், திருநெல்வேலி |
| | | 3 to 5 மாலை | ஜங்ஷன் |
| திருச்செந்தூர் | 11 | 9 to 11 காலை | விநாயக சுப்ரமணியம், கர்ணம், மேல ரத வீதி |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | 3 to 5 மாலை | எஸ்.கோமதிநாயகம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| அம்பாசமுத்திரம் | 12 | 9 to 11 காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| தென்காசி | 12 | 3 to 5 மாலை | எஸ்.கிருஷ்ணா & கோ., மெடிகல் ஸ்டோர்ஸ் |
| ராஜபாளையம் | 13 | 9 to 11 காலை | வி. எஸ். திருப்பதிராஜா, ஜெனரல் மெர்ச்சண்ட் |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 13 | 12½ to 1½ மாலை | பி. கே. அஸ்ஸன் ராவுத்தர் சன்ஸ் கெமிஸ்ட்ஸ் |
| சிவகங்கை | 14 | 9 to 11 காலை | மீனாட்சி & கோ., கெமிஸ்ட்ஸ் |
| தேவகோட்டை | 14 | 3 to 5 மாலை | ஸ்ரீ மீனாட்சி ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் |
| காரைக்குடி | 15 | 9 to 12 பகல் | ஏ வி. & சன்ஸ் டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| | | 3 to 5 மாலை | |
| புதுப்பட்டி | 16 | 9 to 11 காலை | கலைமகள் நூல் நிலையம், கெமிஸ்ட்ஸ் |
| புதுக்கோட்டை | 16 | 3 to 5 மாலை | வஸந்தா லாட்ஜ் |
| அரியலூர் | 17 | 11 to 12 பகல் | லட்சுமி மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் பெரிய பஜார் தெரு |
| ராமநாதபுரம் | 22 | 9 to 11 காலை | ராஜன் மெடிகல் ஹால், கெமிஸ்ட்ஸ் |
| சித்தூர் | 30 | 9 to 11 காலை | ஓரியண்டல் லாட்ஜ், ஹை ரோடு |

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

# சனுக்தகந்தகல்

ர.சு. நல்லபெருமாள்

சந்தேகமில்லாமல் ஆண்டியப்பன் ஒரு மனிதப் பிறவிதான். ஆள் நல்ல வாட்ட சாட்டமாக இருப்பான். ஆனால், அறிவு சூனியம்! பிறந்து ஐந்து வருடங்களுக்கு வாய் பேசாத மௌனியா யிருந்தான். அழகிய கண்களை உருட்டி விழிப்பான். பார்வையில் சூனியந்தான் தேங்கியிருக்கும். கண்டகாட்சி, அறிவில் பதியாது. அறிவில் கூர்மை யில்லை. பிறகு, எங்கு பதிவது? பசிக்கும்; உணவு கேட்கத் தெரியாது. தாகம் எடுக்கும்; தண்ணீர் கேட்கத் தெரியாது. அவனுக்கு என்னதான் தெரியும்? அசட்டுச் சிரிப்பு மட்டும்தான் சிரிக்கத் தெரியும். அந்தச் சிரிப்புக் கூட அறிவின் கட்டளையா யிருக்காது. வாய், தானாக நெளிந்து கொள்ளுமோ என்னவோ? இதென்ன பிறவி என்கிறீர்களா? விசித்திரப் பிறவிதான்.

இட்டாமணிக்கு இவன் இரண்டாவது குழந்தை. மூத்த குழந்தை, பெண். இரண்டாவதைப் பல கோயில்களைச் சுற்றிப் பெற்றெடுத்தாள், இட்டாமணியின் மனைவி காவேரி. குழந்தை அழகாகத்தான் பிறந்தது. ஆனால் அறிவு சூனியமாகப் பிறந்து விட்டதே. கடவுள்தான் மூளையை வைக்க மறந்து விட்டாரோ; அல்லது, அதற்குள்ளாக அவசரப்பட்டு ஆண்டியப்பன், இந்த மண்ணுக்கு வரத் துடித்து விட்டானோ? இது, சிருஷ்டி இரகசியம். இதன் காரணங்களையெல்லாம் நாம் எப்படி அறிவது?

காவேரிக்கு அதற்குப் பிறகு பிள்ளையும் இல்லை. ஆண்டியப்பன் வளர்ந்தான். வயது, பதினெட்டை நெருங்கி விட்டான். அறிவு மட்டும் ஆரம்ப கதியிலேயே இருந்தது. அவனுடைய அழகான மேனி கண்களைக் கவரும். அவனுடைய அழகிய கண்கள் ஆளையே விழுங்கும். ஆனால் அவன் பார்வையில் ஒளி இல்லை; உயிர் இல்லை. பத்து வயதுக்கு மேல் தான் பேசவே ஆரம்பித்தான். தன் தேவைகளை மட்டும் கேட்கத் தெரிந்துகொண்டான்.

இப்போது இக்கித் இக்கிப் பேசுவான். பேசுவதைப் புரிந்து கொள்வான்.

தினமும் காவேரி, அவனை மாலையில் தன்னுடன் சிவன் கோயிலுக்கு அழைத்துச் சென்று, சந்நிதியில் அவனை நிறுத்தி, சுவாமிக்கு அர்ச்சனை செய்வாள். ஆண்டியப்பனுக்குக் கோயில், கடவுள், இது பற்றியெல்லாம் புரிந்ததோ இல்லையோ; அம்மா சொல்லை மறுக்காமல் விழுந்து விழுந்து கும்பிடுவான். விபூதியை அள்ளி நெற்றி முழுதும் பூசிக் கொள்வான்.

என்றாவது ஒரு நாள் தன் மகனுக்கு அறிவு இடரென்று வளர்ந்து விடும் என்று நம்பினாள் காவேரி. மூன்று வயதுக் குழந்தை ஞானசம்பந்தனுக்கு ஞானப் பால் கிடைக்கவில்லையா? அந்த நினைவு காவேரிக்கு. இட்டாமணிக்கோ அந்த நம்பிக்கைகூட இல்லை. அவரிடம் பணமிருந்து என்ன செய்ய? உடலை வளர்க்கலாம். அறிவை...?

தன் காலத்துக்குப் பிறகு, ஆண்டியப்பனுக்கு ஆதரவு ஒருவரும் இல்லையே என்பது தான் காவேரியின் கவலை. கண் நிறைந்த மகனை எண்ணிக் கண்ணீர் சிந்தாத நாளில்லை.

காலமும் ஓடிக் கொண்டிருந்தது. ஆண்டியப்பனும் வளர்ந்து கொண்டிருந்தான். காலையில் எழுந்திருப்பான். கிணற்றடியில் தண்ணீர் இறைத்துக் குளிப்பான். பிறகு, விபூதியை அள்ளி நெற்றி முழுவதும் அப்பிக் கொண்டு வெளித் திண்ணையில் வந்து உட்கார்ந்து விடுவான். அந்தப் பக்கம் வரும் சிறுவர்களுக்கு அவனைக் கேலி செய்வதில் பிரியம். அவனுக்கும் அவர்கள் மீது பிரியம்.

"பித்துக்குளி மாமா! உனக்குக் கலியாண மாமே?" என்பான் ஒருவன்.

ஆண்டியப்பனுக்கு எப்படியோ வெட்கம் வரும். வெட்கப்பட அவனுக்கு யார் சொல்லிக் கொடுத்தார்களோ? ஓர் அசட்டுச் சிரிப்பைச் சிரித்து விட்டு, கையினால் முகத்தை மூடிக் கொள்வான்.

காவேரி, அவனைக் கூப்பிட்டு உணவு ஊட்டுவாள். பிறகு வீட்டை விட்டுக் கிளம்பி, பின் பக்கம் உள்ள குளத்தங்கரை மண்டபத்தில் போய் உட்காருவான். தினமும் அவனுக்கு அங்கு என்னதான் வேலையோ? குளத்தைப் பார்ப்பான். ஆகாயத்தைப் பார்ப்பான். அங்கு எதைத் தேடுவானோ? ஒரே பார்வை தான்! மத்தியானம் பசி எடுத்து விடும். மண்டபத்திலேயே படுத்துவிடுவான். காவேரி அவனைத் தேடி வருவாள். அவளோடு வீட்டுக்குச் சென்று சாப்பிட்டு விட்டு, மீண்டும் அந்த மண்டபத்துக்கு வந்து விடுவான். பிறகு, ஆகாயத்தையும் குளத்தையும் மாறி மாறிப் பார்ப்பதில் ஈடுபட்டு விடுவான். இதற்கிடையில், குளத்தங் கரையில் தண்ணீர் எடுக்க வருபவர்கள் அவனிடம் பேச்சுக் கொடுப்பார்கள். சில சமயம் அவர்களுக்குப் பதில் சொல்லுவான். சில சமயம் அசட்டுச் சிரிப்பை மட்டும் உதிர்ப்பான்.

அவனுக்குக் கோபம் கூட வருவதுண்டு. சிறுவர்கள் கேலி செய்தால் பொறுத்துக் கொள்வான். ஆனால், வேறு யாரும் அவனைக் கேலி செய்தால், அவ்வளவுதான்; தெருவில் கிடக்கும் கல்லை ஆயுதமாக்கி விடுவான். இதற்குப் பயந்தே அவனிடம் யாரும் கேலி பேசுவது கிடையாது. 'நாம் இவனைக் கேலி செய்கிறோம் என்று எப்படி இந்த அறிவு சூனியத்துக்குத் தெரிகிறது?' என்று சிலர் வியப்பதும் உண்டு.

ஒரு நாள், அதிகாலையில் எழுந்ததும் ஆண்டியப்பன் வாசலுக்கு வந்தான். எதிர் வீட்டில்,

அந்த வீட்டுக் கார் டிரைவர் நின்று கொண்டிருந்தான்.

"ஏ டைவர், வா" என்று கூப்பிட்டான், ஆண்டியப்பன். டிரைவர் பக்கத்தில் வந்தான். ஆண்டியப்பன் அவன் கன்னத்தில் ஓங்கி ஒரு குத்து விட்டான். டிரைவர் பதறிப் போய் விட்டான்.

"ஏன் அடிக்கிறே?" என்று டிரைவர் கேட்டான்.

"நேத்து ராத்திரி என்மேலே காரை ஏத்தினியே?" என்றான் ஆண்டியப்பன்.

"நேத்து ராத்திரி எப்போ ஏத்தினேன்?" என்று டிரைவர் கேட்டான்.

"நான் தூங்கும்போது ஏத்தினியே" என்று கூறிக் கொண்டு மீண்டும் டிரைவரை அடிக்க ஓங்கினான். அதற்குள் டிரைவர் ஓடிவிட்டான். முந்தின நாள் இரவு, ஆண்டியப்பன், கனவு கண்டிருக்கிறான். அதன் விளைவு டிரைவருக்கு அடி கிடைத்தது. இம்மாதிரி விசித்திரமான கோபங்கள் அவனுக்குத் திடீரென்று தோன்றி விடும்.

ஆண்டியப்பனுக்குப் பெண்களைக் கண்டு விட்டால் பயம். குளத்தங்கரைக்கு வரும் பெண்களுக்கு அவனைக் கண்டுவிட்டால் ஒரே கும்மாளம். அவனோடு பேசி, அவன் பேசும் அசட்டுப் பேச்சை ரசிப்பதில் பொழுது போவது தெரியாது. அவனைச் சூழ்ந்துகொண்டு பெண்கள் உட்கார்ந்து விட்டால் அவன் பரக்கப்பரக்க விழிப்பான்.

"ஆண்டியப்பா! உனக்கு எப்போது கல்யாணம்?"—ஒருத்தி கேட்பாள். அவன் சிரிப்பான். அந்த அசட்டுச் சிரிப்பைப் பார்ப்பதில் அந்தப் பெண்களுக்கு எவ்வளவு ஆசை!

"உனக்கு முறைப் பெண் இருக்கிறாளே, காமாட்சி" என்பாள் ஒருத்தி.

"ஆண்டியப்பா! என்னைக் கலியாணம் செய்துக்கிறாயா?" என்று ஒருத்தி கேட்கும் போது, அவனுக்கு என்ன தோன்றுமோ; முகத்தை மூடிக்கொள்வான்.

"அட, இவனுக்கும் வெட்கம் வருகிறதடா!" என்று கூறி எல்லாரும் சிரிப்பார்கள். அவனும் சிரிப்பான். அசட்டுச் சிரிப்புத்தான்.

மொத்தத்தில் அவன் ஒரு மனிதப் பிராணி - வேடிக்கையான சிருஷ்டி.

ஒரு நாள் காலை, குளத்து மண்டபத்தில் ஆண்டியப்பன் உட்கார்ந்திருந்தான். சற்று முன்தான் மழை பெய்து ஓய்ந்திருந்தது. மண்டபத்தின் முகட்டிலிருந்து தண்ணீர் மண்டபத்தின் ஓரத்தில் கிடந்த ஓர் உருண்டைக் கல்லின் மீது விழுந்து கொண்டிருந்தது. அவன், அந்தக் கல்லின் பக்கத்தில் குந்தி உட்கார்ந்து கொண்டு, தண்ணீர் அதன்மீது விழுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அந்த நிகழ்ச்சியில் என்ன லயிப்போ? வெகு நேரம் அதையே பார்த்தான். மண்டபத்துக்குப் பக்கத்தில் நிற்கும் வாதா மரத்திலிருந்து விழும் கொட்டையை உடைப்பதற்காகச் சிறுவர்கள் உபயோகிக்கும் கல்தான் அது. அதில் வாதாங்கொட்டையின் கறை படிந்திருந்தது.

"என்ன பார்க்கிறே, ஆண்டியப்பா?" என்ற குரல் கேட்டுத் திரும்பினான். வடக்குத் தெரு செல்லம் நின்று கொண்டிருந்தாள். செல்லத்துக்கு அவனுடைய வயது தானிருக்கும். சிறு குழந்தை முதலே செல்லத்துக்கு அவன் ஒரு விளையாட்டுப் பிராணியாகத் தானிருந்தான். செல்லத்திடம் அவனுக்கு மரியாதைஉண்டு. ஆண்டியப்பன் மீண்டும் கல்லைப் பார்த்தான்.

"என்னது.........?"—செல்லம் கேட்டுக் கொண்டே கல்லைப் பார்த்தாள். கல் மீது தண்ணீர் விழுந்து கொண்டிருந்தது.

"சாமிக்கு அபிஷேகம் நடக்கிறது" என்று கூறிச் செல்லம் சிரித்தாள். ஆண்டியப்பனுக்கு ஒன்றும் புரியவில்லை. எது தான் அவனுக்குப் புரிந்திருக்கிறது?

"ஆமாண்டா! சிவபெருமானுக்கு அபிஷேகம் நடக்கிறது. இது சிவபெருமானுக்கும்" என்றாள், செல்லம் கேலியாக.

ஆண்டியப்பனின் புருவங்கள் ஆச்சரியத்தால் உயர்ந்தன. செல்லத்தைப் பார்த்தான். ஏதோ கேட்கத் தோன்றியது



அவனுக்கு. ஆனால், கேட்கத் தெரியவில்லையே!

"நீ, தினம் சிவன் கோயிலுக்குப் போறியே; அந்தச் சிவபெருமானுக்கும் இது! இதோ பார்" என்று கூறிக் கொண்டே இடுப்பிலிருந்த குடத்துக்குள் இருந்து மஞ்சள் துண்டு ஒன்றை எடுத்து, அந்தக் கல்லின்மீது கோணல் மாணலாக ஒரு முகம் வரைந்தாள்.

"பார்த்தாயா, சிவபெருமான்!" என்று சிரித்தாள். ஆண்டியப்பனுக்கு என்ன தோன்றியதோ; அந்தக் கல்லுக்கு முன்னால் விழுந்து வணங்கினான். பிறகு, அதையே பார்த்தான். செல்லம் சிரித்துக் கொண்டிருந்தாள். பிறகு குளத்துக்குப் போய் விட்டாள்.

கைக்குள் அடங்கும் அந்த உருண்டைக் கல்லில் அவன் என்ன கண்டான்? அவன் மனம் எதையோ அதில் கண்டு விட்டது. அவன் முகத்தில்தான் எவ்வளவு களை பிறந்துவிட்டது! அவனது பார்வையில் கூட அறிவின் சுடர் வீசுகிறதே! ஞானப்பால் கிடைத்து விட்டதா, அந்த அறிவு சூன்யத்துக்கு? அந்தக் கல்லை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டான், ஆண்டியப்பன். குளித்து விட்டுத் திரும்பிய செல்லம், அவனைத் தேடி மண்டபத்துக்கு வந்தாள் அவன் இல்லை; அந்தக் கல்லும் இல்லை.

"பைத்தியம். நல்ல வேடிக்கை" என்று முனகிக் கொண்டு தனக்



# ஆனந்தமான வாழ்க்கைக்கு




காட்பரீஸ் சாக்கலேட்...
மிட்டாய் மட்டுமல்ல-
ஒரு உணவும் கூட

காட்பரி என்றாலே தரத்தில் உயர்ந்தது

குள்ளே சிரித்துக் கொண்டான் செல்வம்.

ஆண்டியப்பனுக்கு இப்போது ஆதாரம் கிடைத்து விட்டது. அவனுக்கே புரியாத ஓர் உணர்வு. அந்தக் கல்லோடு பொழுதுபோக்க ஆரம்பித்து விட்டான். அதோடு அவன் மனம் ஐக்கியமாகி விட்டது. அந்தக் கல், தெய்வமாகி விட்டது! ஆம்! தெய்வம் அந்தக் கல்லில் அவனுக்காக சாந்நித்தியமாகி விட்டது. அவன் அதைச் சிவபெருமான் என்றான். மற்றவர்கள் சிரித்தார்கள். என்ன சிரிப்பு வேண்டியிருக்கிறது? கடவுளை எப்படியெல்லாமோ பாடாய்ப் படுத்துகிறார்கள் இந்த மனிதர்கள். இவன் கடவுளை அந்தக் கல்லில் சிறைப்படுத்தக் கூடாதா? அதோடு அவன் பேசினான். அதுவும் அவனோடு பேசியது! ஏன் பேசக் கூடாதா? ஜடப் பொருளை மனிதன், விஞ்ஞானத்தால் பேச வைக்கும் போது கடவுள், கல்லாயிருந்து பேசக் கூடாதா? மந்திரத்தை ஜபிக்கும் போது கடவுள் வருவதாக வேதங்கள் கூறுகின்றன. மந்திர ஒலியோடு உள்ளம் ஒடுங்கும்போது தெய்வம் பிரசன்னமாகிறது. இங்கும் அதே நிலைதான். மாயனை நாடி, மனமெனும் தேர் ஏறித் திரிந்த துறவிகளுக்கும் கிட்டாத பாக்கியம், ஆண்டியப்பனின் உள்ளம் கல்லில் ஒடுங்கிவிட்டது. கல் தெய்வமாகி, அவனோடு பேசவும் ஆரம்பித்து விட்டது. இப்போது, அவனது அசட்டுச் சிரிப்பு மறைந்து விட்டது.

கிட்டாமணிக்கு இது, புதுப் பிரச்னையாகி விட்டது. ஆண்டியப்பனின் அறிவு சூன்யத்தில் கண் கலங்கி நின்றவருக்கு அவனுடைய புதுப் போக்குப் புரியவில்லை. பைத்தியமாகி விட்டானே என்று பயந்தார். காவேரி கதறி அழுதாள்.

தினமும் மாலையில் அந்தக் கல்லுக்கு முன்னால் அவன் விழுந்து விழுந்து வணங்குவதைப் பார்க்கும் பெற்றோர்களுக்கு வயிறு பற்றி எரிந்தது.

"ஐயோ, என் பிள்ளையை அந்தக் குளத்து மோகினிதான் பிடிச்சிருக்கு. இல்லேன்னா, தினமும் அந்த மண்டபத்தில் பழியாகக் கிடப்பானா?" என்று காவேரி பதறி அழுதாள். கிட்டாமணி மந்திரவாதிகளை அழைத்து வந்தார். ஒரு மந்திரமும் பலிக்கவில்லை. அந்தக் கல்தான் சிவபெருமான் என்று சாதித்தான், ஆண்டியப்பன். ஆனால், அதை யாரும் நம்பத் தயாரில்லையே, ஏன்? கல்லை லிங்கமாக அமைத்துத் தினமும் பூசை செய்கிறாரே சிவன் கோயில் பூசாரி, அவரே நம்பவில்லையே!

வடக்குத் தெரு செல்லம், இது விஷயமாக வாய் திறக்கவேயில்லை. அவளுக்குத் தெரியும், ஆண்டியப்பனின் மாறுதலுக்குத் தான் தான் காரணம் என்று. அது தெரிந்தால், காவேரி அவளை விட்டு வைப்பாளா? செல்லம் செய்த கேலியின் பயன் இது. 'கேலியா?'



பிப்ரவரி 9-ந் தேதி நடைபெற்ற கூட்டத்தில் திரு எம். எஸ். லிங்கா கவுடர் அவர்கள் நீலகிரி ஜில்லா சுதந்திரக் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் சிறந்த தேசியவாதி; காந்திய ஊழியர். இவருடைய தேர்வைக் குறித்து நீலகிரி ஜில்லா மக்கள் பெருமகிழ்ச்சியடைந்திருக்கிறார்கள்.

அவள் தான் அவனுக்கு அமைந்த குரு. அவள் கொடுத்து விட்டாள் ஞானப்பாலை! அறிவு சூன்யத்தில் ஓர் ஒளிச்சுடர் தங்கிவிட்டது. இதெல்லாம் ஆண்டியப்பனுக்கே தெரியாது. அவனுக்குப் புரிந்ததெல்லாம், அந்தக் கல் சிவபெருமான். அவ்வளவுதான்; அது போதாதா? இந்த நிலைக்குத்தானே வேதாந்தங்களும், சித்தாந்தங்களும் மனிதனை இழுத்துச் செல்லப் படாதபாடுபடுகின்றன? ஆடிப் பாடி, அழுது, அரற்றித் தேடியும் காண முடியாத மூலத்தை ஆண்டியப்பன், அந்தக் கறை பிடித்த கல்லில் கண்டு விட்டான்!

காவேரிக்குக் கவலை அதிகமாகி விட்டது. அசட்டுப் பிள்ளையாக மட்டுமிருந்த ஆண்டியப்பன், இப்போது பைத்தியக்காரப் பிள்ளையாகவும் ஆகி விட்டானே. அந்தக் கல்லை விழுந்து கும்பிடுவதும், அதைக் குளிப்பாட்டுவதும், அதற்கு உடை அணிவிப்பதும்...எந்தத் தாயார்தான் பொறுப்பாள்? ஊராருக்குப் பொழுது போக இந்த நிகழ்ச்சி போதாதா?

"ஏண்டா, ஆண்டியப்பா! உன் சிவபெருமான் சௌக்கியமா?" என்று கேட்பார்கள் ஊர் மக்கள். அவன் தலை ஆட்டுவான்.

"உன் சிவபெருமானுக்கு ஒரு பெண்ணைத் தேடிக் கலியாணத்தைச் செய்து வைக்கக் கூடாதோ?" என்று ஒருவர் கேட்டு வைத்தார். அவ்வளவுதான்! அன்று மாலை, குளக்கரையிலிருந்து இன்னொரு கல்லைத் தூக்கி வந்தான். வீட்டுக்குள் நுழையும்போது கிட்டாமணி பார்த்து விட்டார்.

"டேய் இறக்கு! அது என்னடா புதுக் கல்லு?" என்று இரைந்தார்.

"பார்வதி!" என்று கூறிக் கொண்டே வீட்டினுள் நுழைந்தான். கிட்டாமணிக்குக் கோபம் தாங்கவில்லை. "நீயும் உன் கல்லுச் சாமியும்" என்று கத்திக் கொண்டே அவன் கையிலிருந்த கல்லைப் பிடுங்கித் தெருவில் விட்டெறிந்தார். மறுகணம், அவர் பார்வை, வீட்டின் மேற்கு மூலையில் ஸ்தாபிதமாகியிருந்த அந்த உருண்டைக் கல்லின் மீது—சிவபெருமான் மீது—விழுந்தது. அதை நெருங்கினார். ஆண்டியப்பன் அதற்குள் அந்தக் கல்லைத் தன் கையில் எடுத்துக் கொண்டான். தன் குஞ்சை எதிரியிடமிருந்து காக்கத் தயாராயிருக்கும் கோழியைப் போல் நின்றான் ஆண்டியப்பன். அவனுடைய இந்தச் செய்கை

கிட்டாமணிக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. அசட்டுப் பயலுக்கு இந்தத் தைரியம் எப்படி வந்தது? கிட்டாமணி ஒன்றும் செய்யாமல் போய் விட்டார்.

"அந்தக் கல்லைத் தூர எறிந்து விடுங்கள். அவன் பைத்தியம் தானாகத் தெளிந்து விடும்" என்று கிட்டாமணிக்கு யோசனை கூறினார், கோயில் பூசாரி.

மறு நாள் காலையில் ஆண்டியப்பன் தூங்கி விழித்தபோது சிவபெருமானைக் காணவில்லை! எங்கெல்லாமோ தேடினான். அது இல்லை. பேசாமல் குளத்து மண்டபத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டான்.

சிவபெருமான் எங்கே போயிருப்பார்? அவனால் சிந்திக்க முடியவில்லை. சிந்திக்கவே தெரியாதே. அன்று முழுதும் வீட்டுக்கு வர மறுத்து விட்டான்.

"கழுதை எப்படியாவது தொலையட்டும்" என்று கிட்டாமணி அலுத்துக் கொண்டார்.

"ஏன் இப்படிக் குழந்தையைத் திட்டு றீர்கள்? அந்தக் கல்லை அவனிடம் கொடுத்து விடுங்கள்" என்றாள் காவேரி.

"கல் எங்கேடி இருக்கு? நேற்றே குளத்துக்குள் போட்டு விட்டேன்" என்றார் கிட்டாமணி எரிச்சலுடன். காவேரி வேறு ஒரு கல்லைத் தேடி எடுத்துக் கொண்டு மண்டபத்துக்கு வந்தாள். கல்லை ஆண்டியப்பனிடம் கொடுத்தாள்.

"இந்தாடா, உன் கல்லு, வீட்டுக்கு வா. சாப்பிட்டுட்டு வந்து உட்கார்" என்றாள். அந்தக் கல்லைக் கூர்ந்து பார்த்தான். செல்லம் வரைந்த மஞ்சள் கோடு அதில் இல்லையே. அவனுக்குத் தெரியாதா, அவனுடைய சிவ பெருமானை? அந்தக் கல்லைத் தூர எறிந்து விட்டு ஆகாயத்தைப் பார்த்தான். காவேரி கெஞ்சினாள். அவன் வர மறுத்து விட்டான்.

மாலையிலும் அந்த மண்டபத்திலேயேதான் இருந்தான். அவனுக்குத் தேவை அந்தச் சிவ பெருமான்தான். அதை எப்படி அடைவது? எங்குதான் போனாரோ, அந்தப் பெருமான்? வடக்குத் தெரு செல்லம் குடத்தோடு அங்கு வந்தாள்.

"ஆண்டியப்பா! உன்னுடைய சிவபெருமானை உன் அப்பா இந்தக் குளத்துக்குள் போட்டு விட்டார். இனி என்ன செய்யப் போகிறாய்?" என்றாள்.

அவன் குளத்தையே வெறித்துப் பார்த்தான். அவனுடைய பார்வை அவளுக்கு வேடிக்கையாயிருந்தது.

"பாவம், சிவபெருமானுக்குத் தண்ணீருக்குள் மூச்சு முட்டுமே" என்றாள். ஆண்டியப்பன் என்ன நினைத்தானோ, எழுந்து குளத்தங் கரையை நோக்கி ஓடினான். செல்லம் பயந்து போய் விட்டாள். ஐயோ, குளத்தில் இறங்கி விட்டால்...? இந்தப் பைத்தியம் அதுவும் செய்யும். ஆழம் அதிகமே...

செல்லத்துக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஆண்டியப்பனின் வீட்டை நோக்கி வேகமாக ஓடினாள்.

சிறிது நேரத்தில் குளத்தங்கரையில் கூட்டம் கூடிவிட்டது. ஆனால் ஆண்டியப்பனை அங்கு காணவில்லை. காவேரி கதறினாள். கிட்டாமணி இடிந்து உட்கார்ந்து விட்டார். குளத்துக்குள் ஒருவன் குதித்துத் தேடினான். கொஞ்ச நேரத்தில், ஆண்டியப்பனின் உடல் கரைக்குக் கொண்டு வரப்பட்டது. அவனுடைய வலது கையில் ஒரு கல் இருந்தது! கோயில் பூசாரி அதை எடுத்துப் பார்த்தார். அதே உருண்டைக் கல்தான்! இல்லை இல்லை, அதே சிவபெருமான்தான். செல்லம் வரைந்த மஞ்சள் கோடுகூட அழியவில்லை! அந்தக் கல்லைத் தூர எறிந்தார் பூசாரி. வெகுதூரத்தில் போய்க் கல் விழுந்தது. இப்போது அது யாருக்கும் தெய்வமில்லை. சாதாரணக் கல்.

குளத்து மண்டபத்துக்குள் முடங்கிக் கிடந்த ஒரு பரதேசி, வறட்டுக் குரலில் சுருதிக்கும் தாளத்துக்கும் அப்பாற்பட்ட பாணியில் சித்தர் பாடலைப் பாடிக் கொண்டிருந்தான்:

"ஓசை உள்ள கல்லை, நீர்,
உடைத்து இரண்டாய்ச் செய்துமே,
வாசலில் பதித்த கல்லை
மழுங்கவே மிதிக்கிறீர்;
பூசனைக்கு வைத்த கல்லில்
பூவும், நீரும், சாத்துறீர்;
ஈசனுக்கு உகந்த கல்,
எந்தக் கல்லு சொல்லுமே?"

## தொழில் விற்பன்னர்களுக்கு
## சேவை செய்ய

துளையிடுதல்
தட்டி நீட்டுதல்
கத்தறித்தல்
வார்ப்பு வேலை
பற்ற வைத்தல்
கடைசல்

மற்றும் பதப்படுத்தும்
வேலைகளில் உதவுவோம்

★

*தயாரிப்புகள் :*

பித்தளை & ஸ்டெயின்லஸ் ஸ்டீல் டிபன் செட், டவரா முதலிய பாத்திரங்களும், விஸ் காக்குகள், இருகு குழாய்கள், மெஷின் ஸ்குருகள்

மற்றும் இதைச் சார்ந்த
எஞ்ஜினியரிங் சாதனங்கள்

★

அணுகுக:

**சூப்பரின்டென்டென்ட்**

**பித்தளை சாமான் மற்றும் கட்லரி தொழிலுக்கான அரசினர் சேவை நிலையம், கும்பகோணம்**






உலகப்
பிரசித்திபெற்ற
தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக் குணமளிக்கும்

## பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டதால், பிராங்கைடிஸ் விரைவில் அகன்றது

தொண்டை, மார்பு உபாதைகளுக்கான பெப்ஸ் வில்லைகளை உட்கொண்டு தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத்தை சீக்கிரம் நிவர்த்தி செய்து கொள்ளுங்கள். பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேலை செய்வதை உணருங்கள் . . . வேதனையைக் குறைக்கவும் கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது.




## பெப்ஸ்

**தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணம் அளிக்கும்
வில்லைகள்**

**எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.**

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.**

PPY-56-TAM

சோல் ஏஜண்டுகள் :
தாதா & கோ., 88, அதியப்ப நாயக் தெரு, சென்னை-3



# குழந்தைகள் எல்லோரும் விரும்புவது ப்ரௌன் அன்டு போல்ஸனில் தயாரித்த ப்ளாமாஞ்ச்

## ப்ரௌன் அன்டு போல்ஸன் பிளேவர்ட் கார்ன் ப்ளவர் வாய்க்கு ருசியான ஒரு சிறந்த பதார்த்தம்

ப்ரௌன் அன்டு போல்ஸன் ப்ளேவர்ட் கார்ன் ப்ளவரினுல் இதைத் தயாரிக்கும்போது எப்பொழுதுமே மிகச் சிறந்த பதார்த்தமாகிறது. ஏனென்ருல் ப்ரௌன் அன்ட் போல்ஸனின் கார்ன் ப்ளவர் மிருதுவாக, சரியான அளவுக்குக் கலங்கக்கூடியது. ஒருக்காலும் கட்டி பிடிப்பதில்லை. மேலும் இது சுவை மிகுந்த 5 வித வாசனைகளில் கிடைக்கின்றது. வனில்லா, ராஸ்பெரி, கேரமல், ஸ்ட்ருபெரி, மற்றும் பைனப்பிள் வாசனைகளில் கிடைக்கின்றன. ப்ரௌன் அன்டு போல்ஸனின் மற்ற சாதனங்கள் என்னவென்ருல் – பேட்டன்ட் கார்ன் ப்ளவர், ரெய்ஸ்லி, வொய்டி கஸ்டர்ட் மற்றும் கஸ்டர்ட் பவுடர்.




ப்ரௌன் அன்டு போல்ஸன் பிளேவர்ட் கார்ன் ப்ளவர்

கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.

**இலவசம்:** இங்கிலீஷ், ஹிந்தி, தமிழ், தெலுங்கு, குஜராத்தி, மலையாளம், வங்காளம், மராத்தி, அல்லது உருது பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அபூர்வமான சமையல் புத்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்துவிடவும்).

தபால் செலவிற்காக 25 ந. பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு நான் இத்துடன் அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/குமாரி ..........................

..........................

விலாசம் ..........................

டிப்பார்ட்மெண்ட் நம்பர்: KLK3

கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.

த. பெ. நி. 994, பம்பாய்—1.

இந்த இலவச அளிப்பு இந்தியாவிற்கு மாத்திரம்தான்.

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்:

பாரி அன்டு கோ. லிட்.

# வட்டமேஜை



## பண்ட விலையேற்றம்

மத்திய நிதிமந்திரி வரி விதிப்புக்குச் சமாதானமாக இன்னின்ன பண்டங்கள் இன்ன விலையாக இருக்குமென்று சொல்லிவைத்தார். அவர் குறிப்பிட்ட விலைக்கு மேல் விற்காமலிருக்கப் பார்த்துக் கொண்டாரா? வரி ஒரு பங்கு என்றால் விலை உயர்வு மூன்று பங்கு. இம்மாதிரி வரி விதிப்பைச் சில வர்த்தகர்கள் நல்வரம் என்று கொண்டாடுகின்றனர். கொள்ளை லாபத்தில் ஒரு பங்கு தேர்தல் காலத்தில் கொடுத்து விடவும் அவர்கள் தயார்தான். சில பண்டங்களைக் குறிப்பிட்டு ஒத்துப் பார்க்கலாம்.

காப்பிக்கொட்டை கி. ராம் ஒன்றுக்கு 14. ந. பை. தான் கூடுதலாக இருக்கும் என்றார். A ரகம் காப்பிக்கொட்டை பிப்ரவரி கடைசிவரை விலை ரூ. 7-25-க்கு விற்றது. வரிக்குப் பிறகு ரூ. 7-75-க்கு விற்கப்படுகிறது. மந்திரிக் கணக்குப்படி விலைக்கு 0.21 ந. பைசாதான் உயரவேண்டும். கெரோசின் வெள்ளை எண்ணெய் புட்டி 1-க்கு 25. ந. பை. யிலிருந்து 28 ந. பைசாவாகி விட்டது. உயர் ரக எண்ணெய்க்குத்தான் வரி உயர்வு என்று நிதிமந்திரி சொன்னார். ஆனால் ஏழை மக்கள் அதிக விலை கொடுக்கும்படி ஆயிற்று. இம்மாதிரி ஒவ்வொரு பண்டத்தையும் எடுத்துச் சொல்லலாம்.

''ஏழை மக்களுக்காகவே அரசாங்கம் பணக்காரர்களிடம் வரி விதித்து ஏழைகளுக்கு இலவசப் படிப்பு, சமுதாயத் திட்டம் போன்ற வகையில் செலவிடுகிறோம்'' என்று அடிக்கடி நம் ராஜ்ய முதன் மந்திரி கூறி வருகிறார்.

சர்க்கரை ஏற்றுமதியில் நஷ்டம் ஏற்படுவதால் அதை ஈடுசெய்ய உள்நாட்டினர் அதிக விலை கொடுத்தே யாகவேண்டும் என்று அமைச்சர் கூறுகிறார். இது எப்படி நியாயமாகும்? அந்நிய நாணயம் சம்பாதிப்பதற்காக உள் நாட்டினர் துன்பத்துக் குள்ளாகின்றனர்.

''அந்நிய நாணய மூலம் இறக்குமதியாகும் இயந்திர வகைகளையும், பிற சாமான்களையும், சரிவர விநியோகிக்காமல்—அல்லது நிரம்பட நிர்வகிக்காமல் — திட்டமிட்டுச் செலவான தொகையில் பாதிக்கு மேல் வியர்த்தமாகி விட்டன'' என்று பிரதமர் முதல் ஏனைய அமைச்சர்களும் சொல்லிக் கொள்வதில் வெட்கம் அடையவில்லை.

வரும் தேர்தலில் காங்கிரசை முறியடிக்க எல்லோரும் ஒன்று சேரவேண்டும். காங்கிரஸ் ஊழல் பல மாகாணங்களில் நாற்றம் வீசுவதைச் சகிக்க முடியவில்லை.

மாயூரம்
14—3—61 மு. வைத்தியநாதன்

## கவனிப்பார் இல்லையா?

சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்பு ஆங்கிலேயர் ஆட்சியில் ஜஸ்டிஸ் கட்சி பதவியில் இருந்தபோது காலஞ்சென்ற பனகல் ராஜா யிருந்த முயற்சி எடுத்து இந்திய வைத்தியக் கல்லூரியை நிறுவினார். அன்று முதல் சிறப்பாக மக்களுக்குத் தொண்டு செய்து வந்த அந்தக் கல்லூரியைச் சென்ற ஆண்டில் காங்கிரஸ் சர்க்கார் மிக எளிதில் மூடிவிட்டார்கள். இது எல்லோரும் அறிந்ததே. ஒரு ஸ்தாபனத்தை எளிதில் அழித்து விடலாம். ஆனால் தொடங்குவது கடினம்.

தமிழ் நாடு தவிர மற்றெல்லா ராஜ்யங்களிலும் நாட்டு வைத்தியத்துக்கு நல்ல மதிப்பும், அந்தஸ்தும் வழங்கப்பட்டு வருவதை அன்றாடம் பத்திரிகைகள் வாயிலாக நாம் அறிந்தே இருக்கிறோம். நம் தமிழ் நாட்டு அரசாங்கம் மட்டும் இதற்கு மாறாக இருப்பது மிகவும் வருந்தத் தக்கதாகும்.

தொன்றுதொட்டு நம் நாட்டில் வழங்கி மக்களுக்கு நன்மை புரிந்து வரும் நாட்டு வைத்தியம் முழுதும் ஆதரவற்று தவிக்குமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது.

பொள்ளாச்சி
14—3—61 பி. எஸ். ஏ.

## தாமதம் ஏன்?

நான் சென்ற ஆண்டு (1959-60) நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனில் மேஸ்திரியாகப் பணியாற்றினேன். சனிக்கிழமை தோறும் வாரச் சம்பளம் பட்டுவாடா செய்யப்படும். ஒரு வாரத்தில் அந்தச் சனியன்று நான் போக முடியவில்லை. எனவே சம்பளம் பதினெட்டு ரூபாயைப் பெற முடியாமற் போய்விட்டது. அதனைப் பெற வேண்டுமானால் கைச்சாத்து (Hand Receipt) எழுதித் தர வேண்டும். அதுவும் எழுதிக் கொடுத்து விட்டேன். பிறகு ஒவ்வொரு வாரமும் புதன்று அக்கவுண்ட் ஆபீஸுக்குச் சம்பளம் பெற்றுவிடலாம் என்று எண்ணிச் செல்வதும், பிறகு அங்கே விசாரித்தால் 'எச். ஆர்.' பாஸ் ஆகவில்லையென்று அதற்குச் சம்பந்தப்பட்டவர்கள் பதில் அளிப்பதுமாக இருந்தது. என்ன செய்வது? மூன்று மாதங்கள் கால்கள் தேயும்படி நடந்ததுதான் மிச்சம். சம்பளம் கிடைக்கவில்லை.

பிறகு நான் சொந்த ஊர் வந்து தங்கும்படி ஆகிவிட்டது. தபாலில் மும்முறை சி.எ.ஓ.க்கு எழுதிவிட்டேன்; பதிலுமில்லை; பணமும் வரவில்லை. 24-4-60 லிருந்து 30-4-60 வரை எனக்குச் சம்பளம் வரவேண்டிய காலம். இப்பொழுது சுமார் பதினொரு மாதங்கள் ஆகின்றன. இதற்கு, சம்பந்தப்பட்டவர்கள் எவ்வித அக்கறையும் சிரமமும் எடுத்துக் கொள்ளா விட்டால் அங்கு நான் முழுதும் என்னைப்போல் வெயில், மழை பாராமல் உழைத்த - உழைக்கின்ற - தொழிலாளிகளின் கதி என்ன ஆவது? நினைக்கவே நெஞ்சம் அஞ்சுகிறது.

வசிவெடுப்பு
10-3-61 ஆ. துரைசாமி


ஆண்களே அவசரப் புத்தியுடையவர்கள் என்பதை மெய்யாக்கி விட்டீர்களே. இந்த என் சகோதரர் இல்லாவிட்டால் உங்களை மறுபடி நான் அடைந்திருக்க முடியுமா?
மரகதச் சிலை
கதை : வாண்டுமாமா
சித்திரம் : வினு


சகோதரி, என்னுடைய அசட்டுத்தனத்தை எண்ணி வெட்கமடைகிறேன். என்னை மன்னித்துவிடு.


அது போகட்டும் சோதரி. உன் பிறப்பை மறைத்து இப்படி ஆண் வேடம் பூண வேண்டிய காரணத்தை அறியலாமா?


இனி நீங்கள் அறியக் கூடாத ரகசியம் என்னிடம் ஏதுமில்லை. என் உண்மைப் பெயர் புஷ்ப குந்தள நாட்டு மன்னர் குபேரவர்மரின் செல்வ மகள் நான். ஒரு நாள் என் கனவில் கட்டழகன் ஒருவன் தோன்றினான்.


அந்த மன்மத ரூபனிடம் மனதைப் பறிகொடுத்தேன். அடைந்தால் அவனையே மணாளனாக அடைவதென்ற என் தீர்மானத்தை என் தந்தையிடமும் தெரிவித்தேன். ஆனால் கனவில் கண்டவர் யார் எங்கிருக்கிறார் என்று தெரியாதே


அவனைத் தேடி தேச சஞ்சாரம் கிளம்ப நிச்சயித்தேன்.
குழந்தாய், உன்னை மன்னர் மகனாக எண்ணியே வளர்த்திருக்கிறேன். வீரத்திலோ உனக்கு இணை நீயேதான். கனவில் கண்டவனைத் தேடி, கணவனாக்கிக் கொண்டு கல்யாணக் கோலத்தில் வரும் உன்னைக் காணும் நாள் வெகு தூரத்தில் இல்லை. வெற்றியோடு திரும்பு மகளே!

# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்

பெருமிதமும்... வசீகரமும் தரும் பிரசித்தி பெற்ற லவண்டரின் நறுமணம் இப்பொழுது உங்களுக்குப் பிடித்தமான பாமாலிவ் டால்க் மூலம் கிடைக்கிறது. இந்த மிக நுண்ணிய சேர்த்தியான டால்க் உங்கள் சருமத்தில் பரவி நாள்முழுவதும் நீடித்திருந்து, உங்களைப் புத்துணர்ச்சியுடனும் பரிமள அழகுடனும் வைத்திருக்கும் சேர்த்தியை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்.

**லவண்டர்**
பெருமிதமும்...வசீகரமும்
தரும் மணமுடையது

**டீ லக்ஸ்**
17 மயக்கும் ஸெண்டுகளின் அற்புதக் கலவை

PALMOLIVE
*Lavender*
TALC POWDER

PALMOLIVE
*Talcum Powder*
DE LUXE

# பாமாலிவ்

டால்கம் பவுடர்

PT.G 5 T.

# பெண்ணே நீ யார்?

கு. வேங்கடரமணி



அவன் நடந்துகொண்டிருந்தான், நடந்துகொண்டிருந்தான்; நடந்துகொண்டேயிருந்தான். எத்தனை காலமாக அப்படி நடக்கிறோம் என்று அவனுக்குத் தெரியாது. எத்தனை காதங்கள் நடந்து வந்திருக்கிறோம் என்பதையும் அவன் அறிய மாட்டான். அவனுக்கு அந்தக் கவலை இருந்ததாகவே தெரியவில்லை. பின்னால் தன் பாதங்கள் பட்டுப் பதிந்திருக்கும் அடையாளங்களைக்கூட அவன் திரும்பிப் பார்க்கவேயில்லை.

எல்லைக்குள் அகப்படாமல், பார்வையின் நோட்டத்தால் கணக்கிட்டுவிட முடியாத நெடும் பாதையோடு நடந்துகொண்டேயிருப்பதாக அவனுக்கு நினைப்பு. அதிலேயே அவனுக்குக் கட்டுக்கடங்காத பெருமை; கர்வம்.

அவனுடைய உடல் இரும்பைவிடக் கடினமாக இருக்கிறது. பொன்னை மங்கச் செய்யும் ஒளியோடு சுடர் விடுகிறது அவன் மேனி. தலையின் கரிய கேசக் கற்றைகள் தோள்களில் விழுந்து சுருண்டு காற்றில் அலைந்துகொண்டிருக்கின்றன. அகன்ற நெற்றியிலே சுடர் ஒளி போல் ஒரு தேஜஸ். ஓங்கி வளர்ந்த அடர்ப்புருவங்களின் கீழே சலிக்காத கண்கள். இரு இமை விளிம்புகளையும் தொட்டு நிற்கும் கரிய பெரிய வட்டக் கருமணிகள். இருளை ஒளியாக்கி விட்ட விந்தைபோல் அந்தக் கார் வண்ண வட்ட விழிகளிலே கூச வைக்கும் ஒளித் தேக்கத்தின் தீட்சண்யம். கண்களின் நடுவே ஓடி நிமிர்ந்த சிகரம் போன்ற நாசியிலே ஒரு தீர்க்கத்தின் அழகு கூடிக் கலந்து கடல் எறியும் அலைகள் மாதிரி இயங்கும் அதரங்களின் துடிப்பிலே, காட்டாற்றை நிகர்த்த இசைப் பெருக்கின் - ஜீவநாதத்தின் - உற்பத்தியைக் காட்டும் குவிப்பு.

அவனது தோள்கள் அகன்று, உயர்ந்து வலிமையின் இலக்கணமாகத் திகழ்கின்றன. நீண்ட இரு கைகளிலே ஒன்று குழலைப் பற்றியிருக்க, மற்றது தன்னிச்சையாகப் பறக்கும் புள்ளைப் போல அசைந்துகொண்டிருக்கிறது. இடையில், வண்ணங்கள் நிறைந்த பட்டாடை, நடையின் வேகத்திலே, அவனுக்கு ஒத்திசைப்பது போல் சலசலக்கிறது.

அவனுடைய கால்கள் சீராகத் தாள கதி பிசகாத வண்ணம் இடை வெளியிட்டு அடியெடுத்து வைக்கின்றன. அவற்றிலே தளர்வும் குழைவும் இல்லவே யில்லை. ஒவ்வொரு அடியை அவன் பெயர்த்து வைக்கும் போதும், முகில்கள் ஒன்றோடு ஒன்று மோதிப் புரளும் போது எழும் ஒலியே கேட்கிறது.

அவன் நடக்கிறான். அவனைக் கடந்து சென்று சுழலும் காற்று 'கடமை-கடமை' என்று முழங்குகிறது.

பிரயாணத்தின் களைப்பையே அறியாமல் அவன் தன் குழலை ஊதுகிறான். குழலின் மாயமா, அவன் நெஞ்சில் உறைந்து பாயும் காற்றின் விந்தையா என்று கண்டு கொள்ளவே முடியவில்லை. இதழோடு குழல் பொருந்தும்போது அதிசயமான ஸ்வர ஜாலங்கள் உதிர்கின்றன.

உதய கன்னி தன் அந்தரங்க சயன அறையில் கண் மலர்கிறாள். மஞ்சத்தை விட்டு இழிந்து அவள் கீழிறங்கி மேகலைத் தோகை விரிக்க மஞ்ஞை நடை பயிலும் போது, அவளுடைய பாதங்களை அணிசெய்யும் நூபுரங்கள் 'கலீர்-கலீர்' என்று இன்னொலி எழுப்புகின்றன. உறக்கக் களைப்பு நீங்க அவள் நீராடி, ஆடையும் அணியும் பூண்டு, கண்ணாடியின் எதிரே ஒயிலாகச் சாய்ந்து நின்று, அன்றலர்ந்த தன் காதளவோடிய கண்களுக்கு அஞ்சனம் இட்டுகிறாள். சாளரத்தில் நுழைந்துவரும் தென்றல் அவள் மேனியை, நாயகனின் பிரிவு மருவும் தாபத்தோடு தீண்டி விளையாடுகிறது. அவள் அழகாய்ச் சிணுங்கி ஓடி விடுகிறாள். ஆனால்...

கால்களைப் பெயர்த்து வைத்து அவன் நடந்துகொண்டே யிருக்கிறான். அவன் பார்வை திரும்பவே யில்லை.

கீழ்வானில் செம்மை படர்கிறது. இரவு பகலாக மாறும் ரஸ

வாதக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகத் திகழ்கிறது. கதிரவன் தன்னுடைய ஆயிர மாயிரம் ஒளிக் கதிர்களை வாரி யிறைக்கிறான். அப்பொழுது...

நடை பயிலும் அவனுடைய நெஞ்சம் விம்மித் தணிகிறது. தன்னுடைய உயிர்ப்பின் ஒரு துளியை அவன் நெட்டுயிர்ப்பாகக் கொட்டுகிறான். எதிரே வெறும் வெளியாய் விரிந்து கிடக்கும் மணல்வெளியிலே அற்புதங்கள் அதே கணத்தில் இடம் பெறுகின்றன.

அருவிகளாய்த் தண்ணீர் சொரிகிறது. அடவிகள் நிரம்பி வழிகின்றன. பசுமைக் கம்பளம் விரித்து விட்டதே போன்று எங்கும் புல்லும் பூண்டும் முளைத்தெழுகின்றன. கலீரென நிலமடந்தையின் சிரிப்பொலி இசைக்கிறது.

காய்கள் கனிகின்றன. கமுகும் தென்னையும், பலாவும் வாழையும், மாவும் திராட்சையும், நாரத்தையும் எலுமிச்சையும் பல்வகைப் பழங்களை உதிர்க்கின்றன.

ஜோடிப் பறவைகள் கூடிக் களித்துக் கூவித் திரிகின்றன. காதல் என்னும் அற்புதக் காந்த சக்தி சூட்சுமமாய் ஈர்க்கிறது.

அப்பொழுதும், அவன் தன்னுடைய அடிகளை எடுத்து வைக்கிறான். இதழ்க்கடையிலே அலட்சிய நகைப்பும், விழிக் கடையிலே தற்பெருமையின் செருக்குமாக. நிற்கவும் நோக்கவும் தயங்கவும் அவனிடம் சிந்தையே இல்லை.

அவனுடைய குழலின் வாயில்களிலே விரல்கள் விசையோடு இயங்குகின்றன. ராகங்கள் சுநாதமாகப் பொழிகின்றன. ஸப்த ஸ்வரங்களின் ஆட்சி சப்த ஜாலமாக வியாபிக்கிறது.

எங்கும் தங்க நிறம் பூசியிருக்கிறது. நீர்க்கரையைக் கடந்து மெல்லடி பெயர்த்து மானாகத் துள்ளி யௌவன மங்கை ஒருத்தி ஓடுகிறாள். திரும்பித் திரும்பி அவள் கயல் விழிகளால் எங்கோ பார்த்துப் பெருமூச்சு விடுகிறாள். கச்சைகளின் கீழே அவள் நெஞ்சம் விம்மித் தணிகிறது; பெண்மை கண்களில் கனிகிறது.

பகல் முடிந்து இருள் பரவும் நேரத்தில் அவளைத் தேடிக் கட்டழகு உடல் அமைந்த இளைஞன் ஒருவன் வருகிறான்; வந்து அவள் கையைப் பற்றி, பட்டு விரல்களைத் தீண்டுகிறான். மீட்டிய வீணையாக உணர்வு அலைகளை பீதாரவிட்டு, அவள் அமர்கிறாள். அவளருகே இளைஞனும் இருக்கை கொள்கிறான்.

வானில் தண்ணிலவு, காய்ச்சிக் கவிழ்த்த வெள்ளித் தட்டாய் விழுந்து, மிதந்து ஓடுகிறது. அள்ளித் தெளித்த வைரப் புள்ளிகளாய் விண்மீன்கள் எண்ணில் அடங்காதனவாய் இமைத்து வெண்ணிறச் சுடரிடுகின்றன.

இருந்தாலும், நடந்து கொண்



யிருந்த அவன் கவனம் கலையாமல் முன்னோக்கிச் செல்கிறது. அவன் திரும்பவேயில்லை. அதே அலட்சியம்; கர்வ நடை.

சிறுவன் ஒருவனும் அவனுடன் தள்ளாடி நடந்தான். மேட்டிலும் பள்ளத்திலும் கல்லிலும் முள்ளிலும் நடந்து நடந்து அவன் கால்களில் இரத்தம் கசிந்தது. கடைசியில் அவன் உருண்டு கீழே விழுந்தே விட்டான்.

அந்த வயோதிகனின் கடைசி வார்த்தைகள் ஓலமாய் வெளிப்பட்டன: "ஏ காலமே! என்னை ஏன் படைத்தாய்? உயிராசையைக் காட்டி என்னை ஏன் அலைக்கழித்தாய்?"

இந்தக் குரலின் வேதனைக்கு அவன் செவி சாய்க்கவும் இல்லை; நிற்கவும் இல்லை. மேலே, மேலே அதே வேகத்தோடு நடந்தான்.

ஒரு புறத்தில் மாடமாளிகைகள் இடிந்து சிதைந்து கிடந்தன. மேலும் சில காதங்களுக்கப்பால் ஒரு தாழ்ந்த குடிசை. இரவின் அந்தகாரத்தின் நடுவே நடுங்கும் சிறு அகல் விளக்கின் மங்கிய ஒளியில் படுக்கையொன்று விரித்திருப்பது தெரிகிறது. அதிலே துவண்டு கிடக்கும் சிறுவனின் அருகில் அமர்ந்து தாயார் அரற்றுகிறாள். அவளது பாசம் கண்ணீராக வடிகிறது.

"என் ஒரே மகனும் நோயால் வாடி என்னை விட்டுப் போய் விடுவான் போலிருக்கிறதே! நான் என்ன செய்வேன்?" விம்மலும் விசும்பலும் தொடர்ந்தன.

இதற்கெல்லாம் எட்டாத உள்ளத்தோடு அவன் நடந்தான், நடந்தான். அப்பால் நடந்தான். திரும்ப விரும்பாத மனத்தோடு, பார்வையோடு.

சோலையின் நடுவே நீர்க்கலையின் கரையிலே தனிமையில் சோகச் சுமையாக அழகி ஒருத்தி அமர்ந்திருக்கிறாள். பூங்காற்று தவழ்கிறது. நிலவு தண்மை பொழிகிறது. தனிமை பழைய இன்பக் கதைகளின் இரகசியம் பேசுகிறது. அவள் விம்முகிறாள். அவள் உடல் குலுங்குகிறது. நெஞ்சம் வெடிக்கிறது.

"அத்தனையும் பொய்யா? காலம் காட்டிய மாயக் கோலமா? இந்தப் பிரிவின் வேதனை என்னை வதைக்கிறது. இனிமேல் ஒரு கண நேரமும் என்னால் தாங்க முடியாது. நிலவும் காற்றும், நீரும் தனிமையும் இதோ என் உயிரைக் குடித்து முடித்து விட்டன."

ஆனால், அவன் நடையின் வேகம் தளரவில்லை; அவன் நின்று செவிமடுக்கவும் இல்லை.

"காலதேவா! நில்!"

அவனைத் தொடர்ந்து அழகும் இளமையும் மிக்க பெண்ணொருத்தியும் நடந்தாள். அவனை நோக்கி அழைத்த அவள் குரலையும் அவன் இலட்சியம் பண்ணவில்லை.

"காலதேவா! நில்!"

அவன் நடையின் வேகம் இம்மிகூடக் குறையவில்லை; திரும்பாது சொன்னான்: "நான் நிற்கவும் மாட்டேன்; திரும்பிப் பார்க்கவும் மாட்டேன்."

"உனக்குப் பாசம், தயை எதுவுமே கிடையாதா? உன் நெஞ்சம் ஈரமற்றதா?"

"பாசமா? அது பலமற்றவனிடம் காணும் பொருள். தயை! இதற்கு என்னிடம் இடமே இல்லை. என் வழி நேர்மையானது. என்னுடைய பாதையை நானே வகுத்துக்கொள்கிறேன். யாருக்காகவும், எந்த நேரமும் நான் காத்து நிற்பதில்லை."

"நீ உணர்ச்சியற்றவன்."

அவன் கடகடவென்று சிரித்தான்.

"இப்படியெல்லாம் பேசி என்னை ஏமாற்றி விட முடியாது, பெண்ணே!"

அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

"உணர்ச்சியில்லாதவன், உயிர் இல்லாதவன்...."

ஒரு கணம் அவன் செயலற்று நின்றான். அவன் மனம் தனக்குள் கேட்டுக் கொண்டது:

'நானா உணர்ச்சியற்றவன்? என் நெஞ்சமா சூன்யமானது? என் ஜீவிதம் பொய்யா?'

இருந்தாலும் அவன் விட்டுக் கொடுக்காமல் பேசினான்.

"பெண்ணே! வீணாக என்னிடம் தர்க்கம் பண்ணாதே! நான் காலதேவன் — தோல்வி என்பதையே அறியாதவன். நீ போய் விடு!"

"சரி காலதேவா! நான் போய் விடுகிறேன். உன் பெருமை பொய்யானது. நீ தோற்றுவிட்டாய்! உன்னை நான் வெகு நாட்களுக்கு முன்பே வென்று விட்டேன்."

"பெண்ணே! கனவு காணாதே!"

"என்னை ஒரு விநாடி திரும்பிப் பார். உண்மையை நீயே உணர்ந்து கொள்வாய்!"

"ஊஹூம்! நான் மாட்டேன்."

"அப்படியானால் நான் போகிறேன்."

அவள் திரும்பி நடந்தாள். காலதேவனின் இதயத்தைப் பின்னால் யாரோ கவ்வி இழுப்பதுபோலிருந்தது. அவன் நின்றான்; திரும்பிப் பார்த்தான்.

"பெண்ணே! நீ யார்? சொல்லி விட்டுப் போ."

"நானா? நான்தான் கவிதை. நிமிஷத்தை நித்தியத்துவமாக்கி, எனக்கு அழியாத ஆயுளும், அழகும் கொடுத்திருக்கிறான் கவி. நான் காலத்தைக் கடந்தவள். காலமே என்னுள் சிறைப்பட்டுக் கிடக்கிறது. என்னுடைய ரஸத்தில் மூழ்கியவர்கள் காலத்தை மறந்துவிடுகிறார்கள். புரிந்துகொண்டாயா காலதேவா? என்னை மட்டும் உன்னால் அழிக்க முடியாது."

சொல்லிவிட்டு அவள் திரும்பி நடந்து சென்றுவிட்டாள். தனது பார்வையின் எல்லையைக் கடந்து அவள் உருவம் சென்று மறையும் வரையில் காலதேவன் திகைத்து நின்றபடியே பார்த்தான். அவன் கைகள் கூம்பி அஞ்சலி செய்தன, அந்தத் திசையில்!

பெருமூச்சுடன் அவன் திரும்பி நடந்தான். எதிரே நீண்ட பாதையைக் காணும்போது அவனுக்கு இப்பொழுது என்றுமில்லாத சலிப்பு உண்டாயிற்று. ஆயினும் அவன் நடந்தான். விதியை மீற முடியாத விரக்தியோடு அவன் ஒவ்வோர் அடியாக எடுத்து வைத்தான். அந்த நடையில் பழைய எக்களிப்பு இருந்த இடம் தெரியவில்லை!

தன்னுடைய இரக்கத்தை வெளிக் காட்ட முடியாத தவிப்புக்கும், தன்னைத் தானே மயக்கிக் கொண்ட ஆதாரமற்ற அகந்தைக்கும் உள்ளூற நைந்து உருகியபடி காலதேவன் முடிவற்ற தன் பயணத்தை இதோ தொடர்ந்துகொண்டே போகிறான்.

க்ளாக்ஸோ

## அருந்தி குழந்தைகள் நன்கு வளர்கின்றன



போதிய தாய்ப்பாலற்ற குழந்தைகளுக்கு க்ளாக்ஸோவே சிறந்த பாலுணவு. க்ளாக்ஸோ சுத்தமானது, எளிதில் ஜீரணமாகக் கூடியது. மேலும், குழந்தையின் நல்வளர்ச்சிக்கு அவசியமான இரும்புச்சத்தும், வைட்டமின் 'டி' யும் க்ளாக்ஸோவில் சேர்க்கப்பட்டுள்ளன. இலவசமாக க்ளாக்ஸோ குழந்தைப் புத்தகம் பெற விரும்புவோர், 50 ந. பைசா தபால் வில்லைகளை (தபால்செலவிற்காக) கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்புங்கள்: க்ளாக்ஸோ, உட்ஸ் ரோடு, மதராஸ்-2

Glaxo



பாரெக்ஸ்—தாய்ப்பால் அல்லது புட்டிப்பால் அருந்தும் குழந்தைகளுக்கு, 4-5 மாதம் முதல் பாலுணவைத்தவிர பாரெக்ஸ் தானிய உணவும் அவசியம்.

க்ளாக்ஸோ லாபரெட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.

பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • புது டில்லி    டிப்போக்கள்: ஸ்ரீநகர் • கோஹாத்தி • விஜயவாடா

# அவசரம் அவசரம் அவசரம்

கடுமையான சுரம். உடல் நிலை கவலைக்
கிடமாயிருக்கிறது... உடனே செய்தி அனுப்ப வேண்டும்

அதற்காகவே "ப்ரயாரிட்டி" தந்தி உள்ளது

நோய், விபத்து, மரணம் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் "ப்ரயாரிட்டி" தந்தியை உபயோகியுங்கள்.

எல்லா எக்ஸ்பிரஸ், அவசர தந்திகளைவிட இது வேகமாகப் போய்ச்சேரும். செலவும் அதிகம் இல்லை. வழக்கமான எக்ஸ்பிரஸ் தந்திக்கு உள்ள கட்டணம்தான் இதற்கும்.

தந்தியை அனுப்பும்போது மட்டும் "ப்ரயாரிட்டி" என்று குறிப்பிடுங்கள்

உங்களுக்கு சிறந்த முறையில்
சேவை செய்ய எங்களுக்கு உதவுங்கள்

தபால் தந்தி இலாகா

DA 60/623



புதுதில்லி திரு அய்யாசாமி அவர்களின் புதல்வி சௌ. கமலாவுக்கும், திரு கணபதிக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



சட்டக் கமிஷன் அங்கத்தினர் திரு ஜி. ஆர். ராஜகோபால் அவர்களின் புதல்வர் திரு வெங்கடேஷுக்கும், சௌ. மரகதத்துக்கும் விவாகம் நடைபெற்றது.



கல்கத்தா திரு கே. எஸ். மணி அய்யர் அவர்களின் புதல்வர் திரு எஸ். ராமையாவுக்கும் சௌ. கங்காவுக்கும் திருமணம் விமரிசையாக நடந்தது.



ரீகல் புராடக்ட்ஸைச் சேர்ந்த திரு என். எஸ். ராமன் அவர்களின் புதல்வர் திரு ராஜாராமனுக்கும், சௌ. மாலதிக்கும் விவாகம் நடைபெற்றது.

# வாழ்க மணமக்கள்



மதுரை அட்வகேட் திரு ஆர். கணபதிராமன் அவர்களுக்கும், சௌபாக்கியவதி ஜயலக்ஷ்மிக்கும் விவாகம் சிறப்பாக நடந்தேறியது.



தென்காசி எல். ஐ. சி. உதவி பிரா மானேஜர் திரு வெங்கடகப்பன் அவர்களின் புதல்வி சௌ. சாந்தாவைத் திரு வெங்கடேஸ்வரன் மணந்து கொண்டார்.

# ஸ்ரீ ஸ்வாமிநாதஸ்வாமி கோடி அர்ச்சனை

○✱○



கோடி அர்ச்சனை, ஸங்கல்பித்த கோடிக்கு மேல் 35 லக்ஷம் நடந்து திருப்திகரமாக முடிய உதவிய ஸ்ரீ ஸ்வாமிநாதஸ்வாமி பக்த கோடிகளுக்கும், பூர்த்தி விழா சிறப்புற நடைபெறவும், ஸஹஸ்ரநாம மாலை கைகூடும் வண்ணம், பொருள் உதவி செய்த நன்கொடையாளர்களுக்கும், மற்றும் இப்பணியில் பங்கு கொண்ட அனைவருக்கும், கோடி அர்ச்சனைக் கமிட்டியின் நன்றியை இங்கு பகிரங்கமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். எங்களுடன் மிகவும் ஒத்துழைத்த தேவஸ்தானத்தின் டிரஸ்டி போர்டாரும், அதன் மானேஜிங் டிரஸ்டியும், எக்ஸிகுடிவ் ஆபீஸரும், குருக்கள், மற்றும் தேவஸ்தானத்தில் தெய்வத் தொண்டு செய்யும் சிப்பந்திகளுக்கும் எங்கள் நன்றியைத் தனியே எடுத்துரைக்க விரும்புகிறோம்.

ஸ்வர்ண புஷ்ப அர்ச்சனையும் நன்கு நடக்கப் பெற்று சுமார் 3400 மந்திர சக்தி ஏற்றிய புஷ்பங்கள் பக்தர்களுக்கு விநியோகிக்கப்பட்டன.

ஸ்ரீ ஸ்வாமிநாதனின் அருள் மேலே குறிப்பிட்ட எல்லோருக்கும், நிரம்ப கிட்ட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம்.

கோடி அர்ச்சனைக் கமிட்டி, கும்பகோணம்

## அறிவிப்பு

# பஞ்சாப் நேஷனல் பாங்க் லிட்.

(ஸ்தாபிதம்: 1895)

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: **பார்லிமெண்ட் தெரு, புது டில்லி**

பாங்கிங் கம்பெனிகள் சட்டம் 1949-ன் 45 (7) பிரிவின் கீழ் இந்திய சர்க்காரால் அனுமதிக்கப்பட்டுள்ள திட்டத்திற்கிணங்க, 1961 மார்ச் 25உ அன்று இண்டோ-கமர்ஷியல் பாங்க் லிமிடெட்டானது பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட்டுடன் இணைக்கப்படும். அன்றிலிருந்து தற்போதுள்ள இண்டோ-கமர்ஷியல் பாங்க் லிமிடெட்டின் எல்லாக் கிளைகளும் பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட்டின் அலுவலகங்களாகப் பணி புரியும்.

ஏ. எம். வாக்கர்

*ஜெனரல் மானேஜர்*



# படித்துப் பாருங்கள்



## "நில உச்சவரம்பு மசோதா சட்டமானால்..."

சில காலத்துக்கு முன், சென்னை அரசாங்கத்தார், சென்னை சட்டசபையில் கொண்டு வந்த நில உச்சவரம்பு மசோதாவைப் பொது மக்கள் எதிர்ப்பதை விட அதிகமாக இது வரையில் எந்த மசோதாவும் எதிர்க்கப் படவில்லை என்றே சொல்லலாம் — அம் மசோதாவைப் பரிசோதிப்பதற்காக, கீழ்ச் சட்டசபை, மேற் சட்டசபை இரண்டும் சேர்ந்து ஏற்படுத்தியிருக்கும் கூட்டுப் பொறுக்குக் கமிட்டி அனுப்பியிருக்கும் வினாத் தாளும், அதன் உறுப்பினர்கள் சில மாதங்களாக, இம் மசோதாவைப் பற்றிப் பொது மக்கள் அபிப்பிராயத்தை அறிந்து கொள்வதற்காக ஊரூராய்ப் போவதுமே இதற்கு அத்தாட்சி. இம் மசோதாவின் முக்கிய நோக்கம், உச்ச வரம்புக்கு மேல் நிலம் வைத்திருப்பவர்கள் நிலத்தையெல்லாம் அரசாங்கத்தார் கைப் பற்றிக் கொள்ளலாம் என்பதே. அப்படிக் கைப்பற்றிய நிலத்தை, நிலவுரிமையில்லாதவர்களுக்குப் பிரித்துக் கொடுப்பதே அரசாங்கத்தார் உத்தேசமாம். ஆனால் அதைப் பற்றி மசோதாவில் யாதொரு ஷரத்துமில்லை. அதைப் பற்றி மசோதா சட்டமான பிறகு விதிகள் இயற்றுவார்களாம். அவ்விதிகள் எப்படி யிருக்குமென்று இப்போது சொல்ல முடியாது. கூட்டுப் பொறுக்குக் கமிட்டியின் ஆராய்ச்சியால் மசோதா எப்படி மாறும் என்றும் இப்போது சொல்ல முடியாது. ஆயினும் மசோதாவின் உள் நோக்கத்தைப் பொதுமக்கள் அறிவது முக்கியமா யிருப்பதுடன், சட்டசபை அங்கத்தினரும், பொறுக்குக் கமிட்டி அங்கத்தினரும் அதைத் திருப்திகரமாய் ஆராய்ந்து, அதைப் பற்றித் தக்க முடிவு செய்வது அவசியமாதலால், அதைப் பற்றிய விமர்சனங்களை யெல்லாம் மக்கள் வரவேற்பது உசிதமே.

இங்கே ஆராயப்படும், இந்தச் சிறு புத்தகத்தில், இம்மசோதாவைப் பற்றிய விமர்சனம் அடங்கியிருக்கிறது. இப்புத்தகத்தை எழுதியவர் ஒரு சட்ட அறிஞரில்லாவிட்டாலும், அம் மசோதாவை வெகு திறமையுடன் ஆராய்ந்திருக்கிறார். ''நான் ஒரு கட்சியையும் சேர்ந்தவனல்ல. எனக்கு ஒரு கட்சியும் தேவையில்லை'' (ப. 134) என்றும், ''காங்கிரஸ் கட்சியின் பேரில் எனக்கு யாதொரு வெறுப்பும் கிடையாது. காங்கிரஸ் கட்சியும் ஆட்சியும் நாளுக்கு நாள் நீதியும் நேர்மையும் கொண்டதாய் வலுப்பெற்று விளங்கி வர வேண்டும் என்பதே என் களங்கமற்ற அவா'' (ப. 89) என்றும் சொல்லுகிறார். தானும் ஓர் ஏழையே யாதலால் பணக்காரர்களுக்காகப் பரிந்து பேசுகிறவனல்ல என்றும் சொல்லுகிறார். ஆதலால் அவர் இம்மசோதாவில் எடுத்துக்காட்டும் குறைகள் அசட்டை செய்யத் தக்கவையல்ல.

மக்கள் சொத்தை அவர்கள் குற்றம் யாதொன்று மின்றி அவர்களிடமிருந்து சர்க்கார் கைப்பற்றுவது அநீதி. நம் அரசியல் அமைப்புச் சட்டத்துக்கும், அதில் கண்டிருக்கும் மக்கள் நிரந்தர உரிமைகளுக்கும் விரோதம். அதனால் ஏழைஜனங்களுக்கும் நிலமில்லாதவர்களுக்கும் யாதொரு நன்மையுமில்லை. ''இம்மசோதாவின் உண்மையான கருத்து ஏழை விவசாயிகளுக்கு உதவி புரிய வல்லவென்று மாத்திரம் தலைமேலடித்து, ஒரு முறையல்ல, இருமுறையல்ல, பலமுறை சொல்லத் தயார். எங்கெடுத்தும் சொல்லத் தயார்.'' (ப. 139) இம்மசோதா உணவு உற்பத்தியைக் குறைக்குமே தவிர, அதிகப் படுத்தாது. அதனால், பெரிய குடும்பங்கள் கலைக்கப்படும். பெரிய நிலவுடைமைகளைப் பிரித்துப் பிறகு, மறுபடியும் அப்பிரிக்கப்பட்ட பங்குகளைக் கூட்டுறவு சங்கங்கள் மூலம் சேர்ப்போம் என்பது அர்த்தமற்றது. கூட்டுறவுச் சங்கங்கள் விவசாய அபிவிருத்திக்கு உதவா. இம்மசோதா மக்களுக்குள் ''பொறாமை யென்ற பேயைக் கிளப்பிவிட்டு, பகைமை என்ற விதையை விதைத்து, அவர்களுக்குள் பிளவை ஏற்படுத்தும்'' (ப. 94). மேலும் அப்படித்தான் சில ஏழைகளுக்கு நிலம் கொடுக்கப்பட்டாலும், ''சொல்லிவைத்த புத்தியும், கட்டிக்கொடுத்த சோறும் எத்தனை நாட்களுக்கு வரும்?'' (ப. 95) இம்மசோதாவை, அது சட்டமாவதற்கு முன்பே, அமுலுக்குக் கொண்டு வருவதும் அக்கிரமம். இப்படியெல்லாம் ஆட்சேபிக்கிறார்.

இந்தப் புத்தகம் நிலவரம்பு மசோதாவைப் பற்றின அபிப்பிராயங்களோடு நின்றுவிடவில்லை. இதில், பொதுமக்களுக்கும் அரசாங்கத்தாருக்கும் பயனளிக்கும் பல நீதிகளும் இருக்கின்றன. ''வறுமையை விரட்டுவதற்குத் தத்தம் முயற்சிதான் முக்கியம். முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார் என்பது உண்மையிலும் உண்மை'', ''பெரும்பான்மை வலுவைக் கொண்டு தத்தம் விருப்பப்படி எது வேண்டுமானாலும் செய்ய முடியும் என்ற துணிச்சல் ஆட்சியாளருக்கு நீடித்து வருமேயானால் அதைக் கண்டித்து நற்பாடம் கற்பிக்க வேண்டியவர் வாக்காளர்'', ''எதிர்க் கட்சியில்லா அரசாங்கமும், எதிர்க்கட்சியின் அபிப்பிராயங்களுக்குச் செவிசாய்க்கா ஆட்சியும், முட்டுக்கட்டையில்லாத் தேரையொக்கும்'', ''கடவுளுக்குப் பயந்து பாவ புண்ணியம் என்ற நம்பிக்கையால் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்ளல், சமூகத்துக்குக் கட்டுப்படுதல், இவ்விரண்டும் அவசியம்'' (ப. 117). இவைபோன்ற நற்சொற்களை யாவரும் மதிக்க வேண்டும். இந்தப் புத்தகத்தை அனைவரும் படிப்பார்களாக என்று ராஜாஜி எழுதியிருக்கும் முன்னுரைக்கு மேல்

இந்தப் புத்தகத்துக்கு வேறு பாராட்டு வேண்டியதில்லை.

ஆசிரியர் : உடுமலை பா. ரங்கநாதன், பிரசுரம் : சாம்ராஜ் பிரசுரம், 14, பூவிருந்த வல்லி நெடுஞ்சாலை, சென்னை-3. விலை ரூ. 1.

## அன்பு நெறியே தமிழர் நெறி

அன்பு நெறி (பக்தி மார்க்கம்) அறிவு நெறி (ஞான மார்க்கம்) என்னும் இரு நெறிகளுள் தமிழர் நெறி அன்பு நெறியே என்பதனைத் திருமுருகாற்றுப் படை, திருக்குறள், தொல்காப்பியம் ஆகிய நூல்களைக் கொண்டு முடிவு செய்கிறார் இதன் ஆசிரியர்.

பத்துப் பாட்டுள் முதலாவதாகிய திருமுருகாற்றுப் படைக்கு ஆசிரியர் தரும் புது முறை விளக்கமும், முடிபும், ஆசிரியரது புலமையைக் காட்டுகின்றன. திருமுருகாற்றுப்படை கூறும் நெறியும் அன்பு நெறிதான் என்பதை இயைபோடு இந்நூல் எடுத்துக் கூறுகிறது. திருமுருகாற்றுப்படை மூலமும், கருத்து விளக்கமும் நூலில் இணைந்து சிறப்புத் தருகின்றன. 'பொருள் விளக்கமும் கருத்து நயமும்' என்ற தலைப்பின் கீழ் வரும் பகுதியில் பயனுள்ள செய்திகள் பல கூறப்பட்டுள்ளன. கொடி நிலை, கந்தழி, வள்ளி ஆகிய பழந் தொடர்களைப் பற்றிப் பலவித ஆராய்ச்சி முடிபுகளையும் சேர்த்துத் தம் முடிபையும் கூறுவது தெளிவாக அமைந்துள்ளது. நக்கீரரைப் பற்றிய வரலாறும் இறுதியில் இடம் பெற்றுள்ளது. ஆராய்ச்சிப் புலமை மிக்க இந்நூலைத் தமிழகம் வரவேற்றுப் பயன்படுத்திக் கொள்ளுமாக.

ஆசிரியர் : டாக்டர் மொ. அ. துரையரங்கனார். வெளியீடு : மீனாட்சி புத்தக நிலையம், 60, மேலக் கோபுரத் தெரு, மதுரை. விலை: ரூ. 5.

## மநு விஞ்ஞானேசுவரீயம்

இந்நூல் மநுதர்ம சாஸ்திரத்தை விளக்கி விஞ்ஞானேசுவரர் என்பவர் எழுதியது எனப் பொருள்படப் பெயர் பெற்றுள்ளது. இந்நூலை அச்சிடுவதற்கு மூல பாடமாக இருந்த ஏட்டுச் சுவடிகளில் 'மநு விஞ்ஞானம்'— என்றும், 'மநு விஞ்ஞானேசுவரீய விருத்தம்' என்றும் வேறு பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளன. மிதாக்ஷரத்தின் வழி நூல் இது.

சென்னை அடையாறு உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தினர் இவ்வரிய நூலைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளனர். உயர் நீதிமன்ற நீதிபதி திரு பி. இராஜகோபாலன் இத்தமிழ் நூலுக்கு ஆங்கிலத்தில் சிறிய முன்னுரை ஒன்றும் வழங்கி யிருக்கிறார்கள்.

வாழ்வின் பலவித இலட்சணங்களையும், எளிய பாடல்களில் மநு முறையோடு தழுவித் தமிழில் தரும் நூலாகும் இது. நூலின் இறுதியில் எல்லாருக்கும் பயன்படும் பொருட்டு வடமொழி மேற்கோள்களும், அரும் பத அகராதியும் இணைக்கப்பெற்றுள்ளன.

பாடியவர்:—அழகின்பெருமாள், வெளியீடு: உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், அடையாறு, சென்னை—20. விலை ரூ. 4.

## நிழல்

மூன்று அங்கங்களைக் கொண்ட இந்தக் கருத்தமைதியுள்ள நாடகம் பேராசிரியர் அ. சீ. ரா. அவர்களால் எழுதப் பெற்றது. ஆங்கில நாடகாசிரியரான இப்ஸனின் நாடகமொன்றைத் தழுவியும், மொழிபெயர்த்தும் அமைக்க முயன்ற முயற்சியில் இந்நூல் புதிதான தொன்றாகவே அமைந்து விட்டதாக ஆசிரியர் முன்னுரையில் எழுதியுள்ளார். உரையாடல்களில் உயிரோட்டமும் கருத்தாழமும் பொருந்தி யிருக்கின்றன. வினை விளைத்தல், கதிர் முற்றுகிறது, அறுவடை,— தலைப்பு வகுப்பும், காட்சி அமைப்புக்களும் சிறப்பாயுள்ளன.

உயர்நிலைப்பள்ளி, கல்லூரி மாணவர் பெருமன்றங்களில் நடித்து மகிழவும் இந்நாடகம் பயன்படும்.

ஆசிரியர் : பேராசிரியர். அ. சீநிவாசராகவன், கிடைக்குமிடம்: மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயமுத்தூர்—1. விலை ரூ. 1—50.

## வாழ்வரசி

சீர்திருத்த நோக்குடன் எழுதப்பட்ட சமூக நாடகம் இது. கதையை இரண்டு நாட்களில் திட்டம் செய்து நாடகத்தை இரண்டு திங்கள் முயன்று உருவாக்கியதாக இதனாசிரியர் முன்னுரையில் கூறியுள்ளார். கைம்பெண் - அதாவது இளம் விதவையர் மணம் சமூகத்தில் எதிர்ப்பின்றிப் பலரும் ஒப்ப ஏற்று நிகழ்தல் வேண்டுமென்னும் கருத்தை வற்புறுத்தி இந்தக் கதை எழுதப் பெற்றதென்ற நோக்கையும் ஆசிரியரே கூறியிருக்கிறார். கலப்புமணக் கருத்தும் வற்புறுத்தப்படுகிறது. முற்போக்கான நாடகம். சமூக சீர்திருத்த நாடகங்களாக ஏற்கெனவே தமிழில் வந்துள்ளவற்றோடு இதனையும் சேர்த்துப்போற்றலாம். ஆசிரியரின் தமிழ் அறிவும் இலக்கிய உணர்வும் நாடகத்தில் அங்கங்கே நயம் காட்டுகின்றன.

ஆசிரியர்: மு. க. அருள்சாமி எம். ஏ. வெளியீடு: தமிழகம், பிராட்வே, சென்னை—1. விலை ரூ. 3.

## கவிஞரும் காதலும்

கவிஞர் பாரதிதாசன் பாடிய கவிதைகளில் காதல் துறை பற்றியவற்றை எடுத்துக் கொண்டு அவற்றின் சுவையும், நயமும் விளக்கிக் காட்டும் நூலாக வரையப் பெற்றுள்ளது இது. கவிஞரின் காதற் கவிதைகளில் அமைந்துள்ள பழந்தமிழ் இலக்கியச் சாயல்களையும், ஒப்புமைப் பகுதிகளையும் ஆசிரியர் எடுத்துக் காட்டியுள்ளார். கவிஞர் பாரதிதாசனின் சிறந்த காதற் கவிதைகளுக்கு நலம் பாராட்டு நூலாக வந்துள்ள இப் புத்தகம் சுவையானது. கவிஞரின் கவிதை நலம் காண விரும்புவோருக்குத் திறவுகோல் போல அமைவது.

ஆசிரியர்: புலவர். ந. இராமநாதன். வெளியீடு : முத்தமிழ் நூலகம், 1/65 பிராட்வே, சென்னை—1. விலை ரூ. 3—50.


நேற்று வரை வெட்டவெளியாக, பாழ் நிலமாகக் கிடந்த இடத்திலே இன்று லட்சக்கணக்கான மக்கள் வசிக்கக்கூடிய ஒரு பெரு நகரம் உருவாகி வருகிறது. எண்ணற்ற இரும்பு உத்திரங்களும், கான்கிரீட்டும் அந்த எழில் மிகுந்த நகரத்தை சிருஷ்டித்து வருகின்றன. சிற்பியின் கனவு நனவாகிறது. நவீன நகரமொன்றை நிர்மாணிக்க ஏராளமான எஃகு தேவைப்படுகிறது. மற்றும் பல பட்டணங்களிலும், புற நகரங்களிலும் மண் குடிசைகள் இருந்த இடங்களில் புதுப் புது குடியிருப்புகள் தோன்றி வருகின்றன. இத்தனை அபிவிருத்திக்கும் எஃகு தேவை. இன்றே இத்தகைய அபிவிருத்தி ஏற்பட்டு வருகிறது. உருக்கு உற்பத்தி விரைவில் பெருகும்போது மேன்மேலும் அபிவிருத்தி சாத்தியப்படும்.
அதற்கெனவே இஸ்கோ பணியாற்றி வருகிறது. அதிகப்படியாக எஃகு உற்பத்தி செய்து உங்கள் அனைவருக்குமே உதவ முழு மூச்சுடன் முயன்று வருகிறது. உங்களுக்கு செய்யும் சேவை நாட்டிற்குச் செய்யும் பெரும் பணியாகும். அதுவே எங்கள் பாக்கியமாகும்.
உங்கள் வாழ்வு
வளம் பெற
உருக்கு
உதவும்
தி இந்தியன் ஐரன் & ஸ்டீல் கோ லிட்.
INDIAN IISCO STEEL

# பேரூர் பட்டீசர்

## தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

மதுரையில் வாழ்கிறார் ஒரு கவிஞர். அவருக்குக் குளிர் சுரம். அந்தக் காய்ச்சலில் துவண்டு விடுகிறார். பெரிய பெரிய டாக்டர்கள் எல்லாம் வந்து பார்க்கின்றனர். காய்ச்சல் குறையக் காணோம். ஒரு மாதம்—முப்பது நாளுக்கு மேல் நோயில் அவதி உறுகிறார். கடைசியில் நாட்டு வைத்தியர் ஒருவர் வருகிறார். ஏதோ சிந்தூர மருந்து ஒன்று கொடுக்கிறார். இரண்டே தினங்களில் குணம் அடைகிறார் கவிஞர். கவிஞருக்கு நாட்டு வைத்தியரிடம் மிக்க மதிப்பு உண்டாகிறது. நோய் முற்றிலும் குணம் அடைந்து தலைக்குத் தண்ணீர் விடுகின்ற நாளிலே வைத்தியர் கவிஞர் வீட்டுக்கு வருகிறார். அவரையும் அவரது வைத்தியத்தையும் பலரும் பலபடப் பாராட்டுகிறார்கள். கவிஞர் குடும்பத்தாரும் வைத்தியருக்கு ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கு, பழம், பணம் எல்லாம் வைத்துக் கொடுத்து உபசரிக்கிறார்கள். ஆனால் வியாதியால் நலிவுற்று உடல் தேறிய கவிஞரது பாராட்டு ஒரு பாட்டாகவே வருகிறது. வைத்தியர் பெயர் சொக்கலிங்கம்பிள்ளை. அவர் தந்தையார் பெயர் வீரபத்திரப் பிள்ளை என்பதையும் கவிஞர் தெரிந்து வைத்திருக்கிறார். அவர் பாடுகிறார்:

மிக்க மதுரைச் சிவனும்
　　வீரபத்திரன் சுதனும்
சொக்கர் இருவர் எனத்
　　தோன்றினர்—அக்கோன்
பிறவாமல் காப்பான்
　　பிறந்தாரை மண்மேல்
இறவாமல் காப்பான் இவன்.

என்பதுதான் பாட்டு. கவிஞரது பாராட்டுத் தான் எவ்வளவு நயமாக அமைந்து விடுகிறது? மதுரையில் கோயிலுள் இருக்கிறான் ஒரு சொக்கலிங்கம்; அவனது திருவடிகளில் சென்று சேர்ந்தால், அப்படிச் சேரும் உயிர்களைப் பிறவியாகிய நோயிலிருந்து காக்க அவனுக்குத் தெரியும். அவ்வளவுதானே? அப்படி அவன் காக்கத் தவறிய உயிர்கள் மீண்டும் பிறந்து விட்டால் அந்த உயிர்களை இறவாமல் காக்க அல்லவா தெரிந்து வைத்திருக்கிறான் இந்த வீரபத்திரன் பிள்ளை வைத்தியன் சொக்கலிங்கம்? தன் உயிர் காத்ததற்கு நன்றியை இதைவிட அழகாகச் சொல்லிவிட முடியுமா என்ன? பிறவாமல் காக்கும் ஓர் இறைவனையும் இறவாமல் காக்கும் ஒரு வைத்தியனையும் அறிமுகம் செய்து கொள்கிறோம் இந்தப் பாட்டின் மூலம். ஆனால், பிறவாமை இறவாமை இரண்டையுமே செய்து கொண்டிருக்கிறாரே ஓர் இறைவன் அவரைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதுவும் பிறவாமையை ஒரு புளிய மரம் மூலமாகவும் இறவாமையை ஒரு பனை மரம் மூலமாகவும் காட்டிக் கொண்டிருக்கும் அதிசயம் என்னவென்று அறிய வேண்டாமா? அதைத் தெரிந்து கொள்ளப் பேரூருக்குச் செல்ல வேண்டும். பேரூர் பட்டீசர் கோயில் வாயிலிலேயே ஒரு புளிய மரம். நல்ல மேடையிட்டுக் கட்டி மரத்தைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். அதுதான் பிறவாப் புளி. அது என்னவென்றால் அந்த மரத்தின் கொட்டைகளை முளைக்கப் போட்டால் முளைக்கிறதே இல்லையாம். அந்தப் புளியமரத்துக்கு இனிப் பிறவியே கிடையாது என்பது இறைவன் ஆக்ஞை போலும். அதனால் அது பிறவாப் புளியாகவே நின்று கொண்டிருக்கிறது. இனிக் கோயிலுக்கு வடக்கே ஆற்றங்கரையில் உள்ள வட கயிலாயம் என்னும் சிற்றாலயத்துக்கு வந்தால் அங்கே வெளி முற்றத்தில் ஒரு பனை மரம் நிற்கிறது. அதற்கு இறவாப் பனை என்று பெயர். இந்தப் பனையின் பட்டையை இடித்துக் கஷாயம் போட்டுக் குடித்தால் தீராத வியாதி எல்லாம் தீருகிறது. இப்படி மக்களை அவர்களுக்கு வரும் நோயினின்றும் காப்பாற்றி இறவாது காக்கும் பெருமையுடையது இந்த இறவாப் பனை. இந்த பிறவாப் புளி, இறவாப்பனை இருக்கும் கோயிலே பேரூர் பட்டீசர் கோயில். அந்தப் பேரூருக்கே செல்கிறோம் நாம் இன்று.

பேரூர் கோயம்புத்தூருக்கு மேற்கே மூன்று மைல் தொலைவில் இருக்கிறது. கோவை செல்பவர்கள் ரயிலிலோ, காரிலோ மூன்று மைல் சென்று பேரூரைச் சேரலாம். போகிற வழியில் நொய்யல் என்று வழங்கும் காஞ்சிமா நதியைக் கடக்க வேணும். அந்த நதிக்கரையிலே பிதுருக்களுக்குத் தர்ப்பணம் செய்வது சிறப்பானது என்று கூறுவர். நொய்யல் நதியைக் கடந்ததும், சாந்தலிங்க சுவாமிகள் திருமடமும் அம்மடத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்லூரியும் வரும். அவகாசம் இருந்தால் அவற்றையும் சென்று காணலாம். இல்லாவிட்டால் நேரே கோயில் வாயிலுக்கே போகலாம். கோயில் வாயிலில் தென்பக்கமாக ஒரு கல் கட்டு மேடையில், முன்னரே குறித்த பிறவாப் புளி இருக்கிறது. அதைச் சுற்றிக் கொண்டு வந்தால் கோயில் வாயில் வந்து சேருவோம். வாயிலை ஓர் ஐந்து - நிலைக் கோபுரம் அழகு செய்கிறது. கோயிலுக்கு முன்னால் நல்ல படிக்கட்டுகளுடன் கூடிய ஒரு பெரிய தெப்பக்குளம் வேறே இருக்கிறது.

ஊரைப் பார்த்தால் பேரூர் என்று சொல்வதற்கே லாயக்கற்றது என்றுதான் தோன்றும். என்றாலும், முக்தி உலகை அளிக்கவல்ல இறைவன் பட்டீசர் பச்சைநாயகியுடன் கோயில் கொண்டிருக்கும் தலம் ஆதலால் பேரூர் என்று பெயர் பெற்றது பொருத்தந் தான். இந்தக் கோயிலில் நுழைந்து கொஞ்சம் நடந்ததும் நம் கண் முன் வருவது

வெள்ளி மன்றம்தான். இது கோயிலின் வடபக்கம் உள்ள பெரிய மண்டபம். 94 அடி நீளமும் 38 அடி அகலமும் உள்ள இந்த மண்டபத்தை 16 அடி உயரமுள்ள 36 பெரிய கற்றூண்கள் தாங்கி நிற்கின்றன என்றால் மண்டபத்தைக் கொஞ்சம் கற்பனை செய்து பார்த்துக் கொள்ளுங்களேன். இந்த மண்டபந்தான் பேரூரின் பெருஞ் சிறப்புக்கே காரணமானது. அந்த மண்டபத்தை ஒட்டித்தான் சிற்றம்பலம் இருக்கிறது. அங்கு தான் நடராஜர் அன்னை சிவகாமியுடனும் கோமுனி பட்டி முனியுடனும் கொலுவிருக்கிறார். இந்த நடராஜனை ஆடவல்லான் என்றே அழைத்திருக்கின்றனர். ராஜ ராஜ சோழன் கட்டிய அந்தத் தஞ்சைப் பெரு உடையார் கோயிலிலே இருக்கும் ஆடவல்லான் நமக்கு முன்னரே அறிமுகமானவர். அடுத்த ஆடவல்லானை இக் கொங்குநாட்டில்தான் காண்கின்றோம். இந்த ஆடவல்லான் தமிழ்நாட்டில் உள்ள நடராஜத் திருவுருவங்களில் சிறந்த தொன்று. அந்த நடராஜருக்கும் சிவகாமிக்கும் வெள்ளிக் கவசம் எல்லாம் சாத்தி எப்போதுமே அலங்கரித்து வைத்திருப்பார்கள். நடராஜருக்கு அபிஷேகம் நடக்கும் காலம் அறிந்து சென்று ஆனந்திக்கலாம். இந்த ஆடவல்லானின் சந்நிதியை அழகு செய்யும் எட்டுத் தூண்களில் எட்டு சிலை வடிவங்கள். ஆடு வாகனத்தில் ஐங்கரன், மயில் வாகனத்தில் அறுமாமுகவன், இரண்டு தூண்களில். இன்னும் இரண்டு தூண்களில் அக்கினி வீரபத்திரன், அகோர வீரபத்திரன். மற்றும் இரண்டு தூண்களில் கஜ சம்ஹாரனும் பிக்ஷாடனனும். இவை தவிர ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியும் ஆலங்காட்டுக் காளியும் எதிர் எதிரே. இந்தச் சிற்ப வடிவங்கள் சோழர் காலத்திய சிற்பத்துக்கு எடுகொடுப்பவை அல்ல. சிற்பக்கலை வளர்ச்சி குன்றி வருகின்ற பதினாறும் நூற்றாண்டிலே சிறப்பாக எழுந்திருக்கின்றன. இச் சிற்ப வடிவங்களைப் பற்றி பெர்கூஸன் என்ற கலா விமர்சகர், 'பேரூர் வெள்ளி மன்றத்து சிற்பங்கள் சிற்பக்கலை மலினமடைந்த காலத்தில் உருவானவை. என்றாலும், அவை சிற்பக்கலை உச்சநிலையில் உயர்ந்து விளங்கிய உன்னத காலத்தைச் சேர்ந்தவைதாம்' என்று கூறுகிறார். இந்த விமரிசனமே இச்சிற்ப வடிவங்களின் சிறப்புக்குத் தக்க சான்று பகர்வதாகும். இச் சிற்ப வடிவங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஆடவல்லான் இருக்கும் அம்பலத்தின் முகப்பை நோக்கினால் ஓர் அதிசயம் காண்போம். அங்கு இரண்டு கல் தூண்கள்; ஒரு தூணிலே குதிரைமீது ஆரோகணித்து வரும் வீரன் ஒருவன் கம்பீரமாகக் காட்சி கொடுப்பான். அதற்கொப்ப இருக்கும் மற்றொரு தூணிலே குதிரையின் கால் இருக்கும், அதன்வால் இருக்கும். ஆனால் குதிரையையோ, வீரனையோ காண இயலாது. 'எப்படி அந்தத் தூண் சிதைந்தது?' என்று விசாரித்தால் ஓர் அழகிய கதையைச் சொல்வார்கள் அங்குள்ளவர்கள். கதை இதுதான்: இந்த வெள்ளி மன்றத்தை மதுரை திருமலை நாயக்கரது சகோதரனான அளகாத்திரி நாயக்கன் நிர்மாணிக்க ஆசைப்பட்டிருக்கிறான். மண்டபம் கட்டும் வேலையைச் சிற்பி கம்மனாச்சாரியிடம் ஒப்படைத்திருக்கிறான். ஸ்தபதியும் இரவு பகல் ஓயாது உழைத்து, அழகான சிற்ப வடிவங்களை அமைத்து மண்டபம் கட்டி முடித்திருக்கிறான். மண்டபம் கட்டி, அதன் குடமுழுக்குக்கு நாளும் குறித்திருக்கிறான், அளகாத்திரி நாயக்கன். அந்த நிலையிலே அங்கு வந்த ஒரு இளைஞன் இந்த மண்டபத்தை எல்லாம் கண்டு களித்துவிட்டு, இப்போது சிதைந்திருக்கும் தூணைப் பார்த்து 'ஐயோ!' என்று அலறி யிருக்கிறான். அப்படி அவன் அலறுவதற்குக் காரணம் கேட்டபோது அவன் சொல்லியிருக்கிறான்: எல்லாம் சரிதான். 'இந்தக் கல்லினுள் தேரை யிருக்கிறதே. இது தெரியாமல் இக்கல்லைத் தேர்ந்தெடுத்துச் சிற்பம் அமைத்திருக்கிறானே சிற்பி' என்கிறான். சிற்பி கம்மனாச்சாரி இதனைக் கேட்டுக் கோபமுற்று, அவ்விளைஞனது கூற்றை மெய்ப்பிக்கச் சொல்லியிருக்கிறான். இளைஞனும் சளைக்காமல் கொஞ்சம் சந்தனம் கொண்டுவரச் சொல்லி, அந்தச் சந்தனத்தை அத்தூணில் உள்ள குதிரை மேலும் குதிரை வீரன் மேலும் பூசியிருக்கிறான். சிறிது நேரத்தில் சிற்பம்மீது பூசிய சந்தனம் உலர்ந்திருக்கிறது. உள்ளங்கை அகலம் உள்ள ஓர் இடம் மட்டும் உலராமலேயே நின்றிருக்கிறது. இளைஞன் சிற்பியிடம் இருந்த சுத்தியல் ஒன்றை வாங்கி அந்த இடத்தைத் தட்டியிருக்கிறான். குதிரை, குதிரை வீரன் எல்லாம் தவிடு பொடி ஆகியிருக்கின்றன. ஒரு தேரை அக்கல்லினுள் இருந்து வெளியே குதித்திருக்கிறது. சிற்பி கம்மனாச்சாரி தலை கவிழ்ந்திருக்கிறான். பின்னர் இளைஞனது குலம், கோத்திரத்தை விசாரித்தால் அவன் கம்மனாச்சாரியின் புதல்வனே என்றும் சிறு வயதில் வீட்டை விட்டு ஓடியவனே திரும்ப வந்திருக்கிறான் என்றும் அறிகிறார்கள். முடிவில் சிற்பி மகன் சிற்பியே என்ற புகழையே அல்லவா நிலைநிறுத்தி விடுகிறான் இளைஞனான சிற்பி?

இக்கோயிலுள் கருவறையில் இருப்பவர்தான் பட்டீசர், கோட்டீசர் என்று பெயர் பெற்றவர். இவர் சுயம்புமூர்த்தி. இவர் தலையிலே கன்றுக்குட்டிக் குளம்பின் சுவடும், பசுவின்

ஆடவல்லான்



கொம்புச் சுவடும் இருக்கின்றன. அபிஷேக காலத்தில் கூர்ந்து கவனித்தால் இச் சுவடுகளைக் காணலாம். இந்தச் சுவடுகள்—தழும்புகள் ஏற்படக் காரணம் என்னவென்று கேட்டால் அதற்குக் கிடைக்கும் விடையிலேயே அவரது பெயர்க்காரணமும் தெரியும். ஆதியில் இந்தப் பக்கம் முழுதும் ஒரே அரச மரங்கள் நிறைந்த காடாக இருந்திருக்கிறது. அதனால் பிப்பிலாரண்யம் என்றே பெயர் பெற்றிருக்கிறது. காமதேனுவே இங்கு வந்து பட்டியிட்டு இறைவனைப் பூசித்திருக்கிறது. ஒரு நாள் பசுவாகிய காமதேனுவின் இளங்கன்று இக்காட்டில் துள்ளிக் குதித்து அங்குள்ள மணல் புற்றில் வந்து சிக்கியிருக்கின்றது. கன்றை விடுவிக்கும் ஆவலில் காமதேனு வந்து கொம்பால் குத்திப் புற்றை அகற்றியிருக்கிறது. புற்றிடம் கொண்ட இறைவன் அன்று வெளிவந்திருக்கிறான். கன்றுக்குட்டியின் கால்தழும்பும், காமதேனுவின் கொம்புத் தழும்பும் உடையவனாக, பட்டீசனாக இருந்தவன் கோட்டீசன் என்றும் பெயர் பெற்றிருக்கிறான். கோயிலில் உள்ள அர்ச்சகர்கள் நாம் விரும்பினால் தமிழிலேயே அருச்சனை செய்வார்கள். அருச்சனை எல்லாம் முடித்துக்கொண்டு வெளிவந்து ஒரு சுற்றுச் சுற்றி, பச்சை நாயகியார் கோயிலுக்கு வரலாம். பச்சை நாயகி—மரகதவல்லி நல்ல அழகொழுகும் வடிவம். தனிக்கோயிலில் அவள் இருக்கிறாள். தன் சகோதரனை வரதராஜப் பெருமானுக்கும் தன் கோயிலிலேயே கொஞ்சம் இடம் ஒதுக்கிக் கொடுத்திருக்கிறாள். இந்த அம்பாள் கோயிலுக்கும் சுவாமி கோயிலுக்கும் இடையேதான் கல்யாண மண்டபம். அங்குதான் செப்புச் சிலைகள் எல்லாம் சேர்த்து வைத்துப் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன.

இக்கோயில் சமய குரவர்களால் பாடல் பெற்ற கோயில் அல்ல. என்றாலும் சுந்தரரோடு வரலாற்றுத் தொடர்புடையது. சுந்தரருக்காகப் பட்டீசர் ஒரு திருவிளையாடலையே நிகழ்த்தியிருக்கிறார் இங்கே. இந்த சுந்தரர்தான் தம்பிரான் தோழர் ஆயிற்றே. அவருக்கோ எப்போதும் பணமுடை; எந்தத் தலத்துக்குச் சென்றாலும் அங்குள்ள இறைவனிடம் பணம் வேண்டிக் கையை நீட்டிவிடுவார். பேரூர் பக்கம் இவர் வருகிறார் என்றவுடனே பட்டீசருக்குக் கவலை. அவருடைய கஜானாவிலோ பணம் இல்லை. சுந்தரரோ கேட்காமல் இருக்கமாட்டார். கேட்டதைக் கொடுக்காமல் இருப்பதோ அழகில்லை. ஆதலால் சுந்தரரிடமிருந்து தப்பித்துக் கொள்ள, பட்டீசர் தன் துணைவி பச்சைநாயகியோடு பள்ளன் வடிவில் வயல்காட்டுக்குப் போய் நாற்று நடுவதுபோல் பாவனை செய்கிறார்.

தலத்துக்கு வந்த சுந்தரர் விஷயமறிகிறார். அவரா விடுவார் இறைவனை? வயல் வெளிக்குச் சென்று, பட்டீசரைக் கண்டு பிடித்து இழுத்து வந்து விடுகிறார் கோயிலுக்கு. பின்னர் அவர் விரும்பியபடியே தம் ஆனந்தக் கூத்தையும் அம்பலத்தில் நடித்துக் காட்டுகின்றார். சுந்தரர் பேரூர் இறைவனைப் பாடியிருக்க வேண்டும். அப்பாடல்கள் கிடைக்கவில்லை. ஆனால் பேரூர் பெருமானை நினைத்துத் தில்லைச் சிற்றம்பலத்திலே பாடிய அவரது பாடல் கிடைக்கிறது நமக்கு.



பேரூர் கஜசம்ஹாரர்

பாருரும் அரவு அல்குல்
உமை நங்கை அவள் பங்கன்
பைங்கண் ஏற்றன்
ஊர் ஊரான் தருமனார்
தமர் செக்கில் இடும்போது
தடுத்து ஆட் கொள்வான்
ஆரூரன் தம்பிரான்,
ஆரூரன் மீ கொங்கில்
அணி காஞ்சி வாய்ப்
பேரூர்ப் பெருமானைப்
புலியூர் சிற்றம்பலத்தே
பெற்றாம் அன்றே.

கோயிலின் கருவறையையும், அர்த்த மண்டபத்தையும் பார்த்தால் சோழர்கள் கட்டிய கோயிலாகத் தெரிகிறது. கி.பி. பதினோராம் நூற்றாண்டில் ராஜராஜ சோழன் மகனான ராஜேந்திரன் அரியணை ஏறி இருபத்திரண்டு ஆண்டுகள் கழித்து, இத்திருப்பணியை ஆரம்பித்திருக்கிறான். அர்த்த மண்டபத்தையும் மகா மண்டபத்தையும் கட்டி முடிக்க மூன்று ஆண்டுகள் ஆகியிருக்கின்றன. மகாமண்டபம் கட்ட விரும்பிய பட்டான் தனபாலன், கனபாட்டி அரசாண்டார், வீரசேகரதேவன், அகமுடையான் தேவி, சோழப் பிச்சன், அதிகாமான் முதலியோர் உதவியிருக்கிறார்கள் என்று கோயிலில் உள்ள கல்வெட்டுகள் கூறுகின்றன. இப்படி ஆதியில் சோழ மன்னர்களால் கட்டப்பட்ட கோயிலே பின்னர், நாயக்க மன்னர்களால் சுற்றுப் பிராகாரம், முன் மண்டபம், வெள்ளிமன்றம் எல்லாம் கட்டப்பட்டு விரிவடைந்திருக்கிறது.

# மிக அழகிய ...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!

COLGATE
HAIR OIL

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

**எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!**

---



**Nutrine**

சிறுவர்கள்
முகம் மலர
சிறந்த பரிசு

# மிட்டாய்கள்



நியூட்ரைன் கன்பெக்ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட்
சித்தூர் (ஆந்திரப் பிரதேசம்)

NC-59a

# சொர்க்கத்தின் நிழல்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் இருபத்தைந்து

வீட்டினுள்ளிருந்து விம்மல் ஒலி கேட்டது. இனிய எண்ணங்களில் மனத்தைத் திளைக்க விட்டவாறு வாசற்படி மேல் ஏறி நின்ற தேவகி அவ்வொலி கேட்டுத் துணுக்குற்றாள். உஷ்ணத்தைத் தீண்டிய நத்தை தன் உடலை ஓட்டுக்குள் சுருக்கிக் கொள்வதைப் போல் அவளது சுகந்த உணர்ச்சிகள் எங்கோ சென்று ஒடுங்கி முடங்கின. ஒருக்களித்துச் சாத்தியிருந்த கதவின் இடை வழியே உள்ளே எட்டிப் பார்த்தாள்.

சுவாமி படத்துக்கு முன் உட்கார்ந்து ஏதேதோ சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்த அபரஞ்சியம்மாள் வராந்தாவிலிருந்து உட்களவை நோக்கி நீண்ட நிழலைக் கண்டு பரபரப்புடன் எழுந்து வெளியே ஓடி வந்தாள். அங்கு தேவகி நின்றிருப்பதைப் பார்த்து ஒரு கணம் திகைத்த அவள், பொங்கி வரும் துக்கத்தை அடக்க மாட்டாமல் குமுறிக் கதறி விட்டாள்.

தேவகிக்கு ஒன்றும் புரியவில்லை. திகிலுடன் அவளை ஏறிட்டுப் பார்த்து, "என்னம்மா, என்ன நடந்தது?" என்று கேட்டாள்.

"குழந்தே! என் பிள்ளையைப் பறி கொடுத்துவிட்டேனம்மா, பறி கொடுத்து விட்டேன்!" என்று முன்றானையால் முகத்தைப் பொத்திக் கொண்டு ஓ'வென்று அழுதாள் அபரஞ்சியம்மாள்.

நெஞ்சுக்குள்ளே ஒரு மின்னற்பாணம் வெட்டிப் புகுந்தாற்போல் துடித்துப் பதறிய தேவகி, "என்ன! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று உள்ளழுந்திய குரலில் வினவினாள்.

"ஆமாம், குழந்தே! என் பிள்ளை மோகனசுந்தரம் நேத்து சாயந்திரம் மூணு மணிக்கு வீட்டை விட்டுப் போனவன், இன்னைக்கு இவ்வளவு நேரமாகியும் இன்னமும் வீடுவந்து சேரல்லே?" என்று அங்கலாய்த்த அபரஞ்சியம்மாள் மீண்டும் தொடர்ந்து, "அவனைத் தேடாத இடம் பாக்கி இல்லே. எங்கே போனானோ, என்ன ஆனானோ தெரியலே, குழந்தை?" என்றாள் விம்மலும் பொருமலுமாக.

உலகமே ஒரு கணம் இருண்டு உருண்ட மாதிரி திணறவிட்டுத் தடுமாறிய தேவகி சட்டென்று நிமிர்ந்து அபரஞ்சியம்மாளை நோக்கினாள். "என்னம்மா, நீங்கள்! 'பறி கொடுத்து விட்டேன்' என்ற சொற்களின் பொருளையே உணராமல் சொல்லி விட்டீர்களே! நான் என்னமோ ஏதோ என்றல்லவா பயந்து விட்டேன்!" என்றாள் அதிர்ச்சி நீங்கிய குரலில். "ஓர் ஆண்பிள்ளை வீட்டிலிருந்து வெளியே போய்த் திரும்பிவர ஒன்றிரண்டு நாட்களானால் உடனே அவர் உயிருக்கு ஆபத்து என்று முடிவு கட்டிவிட வேண்டியதுதானா? சந்தர்ப்பச் சூழ்நிலைகள் எப்படி எப்படியோ இருக்கும்!"

அபரஞ்சியம்மாள் கண்களைத் துடைத்துக் கொண்டு அவளை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள். இப்போது அவள் மனம் ஓரளவு ஆறுதல் அடைந்தது. ஆனாலும் அதன் நடுக்கத் துடிப்பு முழுதும் நீங்கவில்லை. "இல்லேம்மா தேவகி! அவன் பார்ப்பதற்குப் பெரிய ஆளாய் வளர்ந்திருக்கிறானே தவிர, புத்தியிலும் நடத்தையிலும் சின்னப் பிள்ளை மாதிரிதான். என்னதான் தலை போகிற காரியமானாலும் இரவு வேளையில் எங்கேயும் தங்கமாட்டான். அப்படிப்பட்ட பிள்ளை, நேத்திக்கு என்னிடம் எதுவும் சொல்லாமல் போய் விட்டானே! போனவன் இதுவரை திரும்பி வரவில்லை. பெற்ற மனம் இதை எப்படியம்மா பொறுத்துக் கொள்ளும்?" என்று துக்கம் தொண்டையை இறுக்கச் சொன்னாள்.

தேவகியின் சிந்தனை எங்கெங்கோ கால் வாங்கி ஓடியது. ஏதேதோ கற்பனைகள். அவற்றில் ஒன்று கூட நல்ல விதமாய் முளைக்கவில்லை. அபரஞ்சியம்மாளின் முடிவையொட்டியே அவை படர்ந்தன. இதனால் மீண்டும் அவள் மனம் அதிர்ந்து நடுக்கமுற்றாள். இப்போது அவளுக்கே யாராவது ஆறுதல் சொல்ல வேண்டும் போன்ற நிலையில் குழம்பினாள். அந்தக் குழப்பம் குரலில் குழைய "ஏனம்மா, நேற்று மாலை அவர் ஒரு கச்சேரி செய்ய வேண்டியிருந்ததே! அந்த விஷயம் உங்களுக்குத் தெரியுமல்லவா?" என்று கேட்டாள்.

"ஆமாம், தேவகி! அதனாலேதான் நான் இப்படி வயிற்றிலே நெருப்பைக் கட்டிக்கிட்டுக் குமையறேன்!" என்று கைகளைப் பிசைந்துகொண்டாள் அபரஞ்சியம்மாள்

வாட்டமுற்றிருந்த தேவகியின் முகத்தில் ஒரு மென்முறுவல் தவழ்ந்தது.

"அப்படியானால் உங்களுக்கு அந்த விஷயம் தெரியாதா? நேற்று மாலை நான் ஒரு கல்யாண விருந்துக்காகப் பரங்கி மலைக்குப் போனேன். அப்போது உங்கள் பிள்ளை அந்த மலையடிவாரத்தில் தனியே உட்கார்ந்து புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்தார். அவரிடம் சென்று கச்சேரி செய்ய வேண்டியிருப்பதை நினைவுபடுத்தினேன். உடனே அவர் என்னுடன் புறப்பட்டு வந்தார்!"

"அப்புறம்? அப்புறம், தேவகி?" என்று துடிப்புடன் கேட்டாள் அபரஞ்சி.

தேவகி சொல்லத் தயங்குவது போல் தன் மேலாக்கைச் சரி செய்து கொள்வதில் முனைந்தாள்.

"சொல்லம்மா, தேவகி? அவன் கச்சேரி செய்தானா? நீ அந்தக் கச்சேரிக்குப் போனாயா...?"

"ஏனா? நான் போகவில்லை!"

"ஐயையோ! இன்றைக்குக் காலம்பற அந்தச் சபா காரியதரிசி வந்து சொன்னது நிஜந்தானா?"

"என்னம்மா சொன்னார்?"

"மோகனசுந்தரம் கச்சேரி செய்ய வராததினாலே ஜனங்கள் ஆத்திரம் அடைஞ்சு பந்தலையெல்லாம் கொளுத்திப் பெரிய அமர்க்களம் பண்ணிட்டாங்கன்னு சொல்லி ரொம்பவும் கோவிச்சுக்கிட்டார்! அவர் காலிலே விழாத குறையாக நான் கெஞ்சி மன்னிப்புக் கேட்டுக்கிட்டு வாங்கின அட்வான்ஸ் பணத்தைத் திருப்பிக் கொடுத்து அனுப்பினேன்!"

"அவர் சொன்னது உண்மைதான் அம்மா"

"அப்படீன்னா மோகனசுந்தரம் உன்னோடுதானே வந்தான்? அவனை எங்கே இறக்கி விட்டே? அவன் அப்புறம் எங்கே போனான்?" என்று அவசரமாகக் கேட்டாள் அபரஞ்சி.

தேவகியின் மனத்தைத் திடீரென்று பயம் பிடித்துக் கொண்டது. "என் வீடு வரை வந்த அவர், மறுபடியும் சங்கீத சபாவுக்குப் போவதாகச் சொல்லி விட்டுப் போனார். நான் எவ்வளவு தடுத்தும் அவர் கேட்கவில்லை" என்று தடுமாற்றத்துடன் சொன்னவள் சட்டென்று ஓரடி முன்னால் வந்து, "அந்தச் சங்கீத சபாக் காரியதரிசி நேற்றிரவு உங்கள் பிள்ளையைப் பார்த்ததாகச் சொல்லவில்லையா?" என்று கேட்டாள்.

"அவனைப் பார்த்திருந்தால் அந்த மனிதர் என்கிட்டே வந்து எதுக்குக் கூச்சல் போடப் போகிறார்?" என்று அங்கலாய்த்தாள் அபரஞ்சியம்மாள்

"அப்படியானால் அவர் எங்கே போயிருப்பார்?" என்று மெல்ல முனகிய தேவகி பெரிதும் கலவரமடைந்து விட்டாள். அபரஞ்சியம்மாளின் தவிப்பை இப்போது அவளால் நன்கு உணர முடிந்தது. 'கலவரம் நடந்த இடத்துக்குப் போன மோகனுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருக்குமோ? வெறியடைந்த ஜனங்கள் அவரை அடித்துப் போட்டு விட்டிருப்பார்களோ? அல்லது அந்தக் கலாட்டா நிகழ்வதற்குக் காரணமாக இருந்த அவரை விசாரிக்கப் போலீஸார் அழைத்துப் போயிருப்பார்களோ? இல்லையானால் அவர் ஏன் இன்னமும் வீடு திரும்பாமலிருப்பார்?' என்றெல்லாம் எண்ணித் திகிலடைந்த அவள், "ஏனம்மா, உங்கள் பிள்ளைக்குத் தெரிந்த இடங்களிலெல்லாம் போய் விசாரித்தீர்களா?" என்று அடைத்த குரலில் கேட்டாள்.

"ஐயோ! அவன் போகக் கூடிய இடம் ஒரே இடம்தான் குழந்தே! கோமதின்னு ஒரு நடிகை இருக்கிறாள் இல்லையா? அவளைப் பார்க்கத்தான் அவன்



போவான். அங்கு விசாரிக்க ஓடினேன்; அவன் வீடு சாத்திக் கிடந்துச்சு" என்று புலம்பினாள் அபரஞ்சி.

"அந்த நடிகையின் வீட்டுக்கு அவர் ஏன் போக வேண்டும்?" என்று ஒன்றும் புரியாதவளாய் இழுத்தாள் தேவகி.

'அந்தப் பாவிப் பெண்ணால்தான் என் பிள்ளையின் கதி இப்படி ஆகிவிட்டது' என்று ஆத்திரத்துடன் சொல்ல வாயெடுத்த அபரஞ்சியம்மாள் சட்டென்று அதை அடக்கிக் கொண்டு, "அ...அந்தப் பெண்ணோட அப்பாவிடம் அவன் புல்லாங்குழல் வாசிக்கக் கத்துக்கிட்டான். அந்த விசுவாசத்திலே, அவளை அடிக்கடி பார்க்கப் போவான்!" என்று குமுறினாள்.

நேற்று மாலை மோகனசுந்தரம் இதே விஷயத்தைப் பரங்கிமலையிலிருந்தபோது சொன்னது தேவகியின் நினைவுக்கு வந்தது. "ஓகோ!" என்று அமைதியாகத் தலையசைத்துக் கொண்டாள் அவள்.

"கடவுளே, எனக்கு ஒன்றும் தோணலியே! நான் என்ன பண்ணுவேன்? என் பிள்ளையை எங்கே போய்த் தேடுவேன்?" என்று கண்கள் மேலேறிச் செருகப் பரிதாபமாகப் புலம்பினாள் அபரஞ்சியம்மாள்.

தேவகியின் மனம் வெகுவாக வேதனையடைந்து புழுங்கியது. "அம்மா! நீங்கள் கவலைப்படாமலிருங்கள். அவருக்கு ஒரு கெடுதலும் நேராது. இன்றிரவுக்குள் அவர் எப்படியும் திரும்பி வந்து விடுவார். நானும் அவரைப் பற்றி விசாரித்து உங்களுக்குத் தகவல் தெரிவிக்கிறேன்" என்று பரிவுடன் சொன்னாள்.

அபரஞ்சியம்மாளின் மனத்தில் நம்பிக்கை துளிர்விட்டது. மெல்லப் போய்த் தேவகியின் கரங்களைப் பற்றி, "வீடு தேடி வந்த குழந்தையை உள்ளே உட்கார வைக்காமல் கூட வெளியில் நிற்க வைத்தே பேசிக் கொண்டிருந்து விட்டேனே! வாம்மா, தேவகி! உள்ளே வா!" என்று அன்பு கனிய அவளை அழைத்தாள்.



"இல்லையம்மா! நான் போக வேண்டும். பிறகு வந்து உங்களைச் சந்திக்கிறேன்" என்றவாறு மெல்லப் பின்னால் நகர்ந்தாள் தேவகி.

கண் கலங்க அவளையே பார்த்துக் கொண்டிருந்த அபரஞ்சியம்மாள், "ம்... புறப்பட்டுட்டியா? நீ எதுக்கு வந்தேன்னு சொல்லவே இல்லையே!" என்று கம்மிய குரலில் கேட்டாள்.

தேவகியின் முகத்தில் நாணம் கலந்த ஓர் அழகிய புன்னகை துவண்டது. "ஒன்றுமில்லை!... சும்மா உங்களையெல்லாம் பார்த்து விட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்!" என்றவாறு தயக்கத்துடன் திரும்பி நடந்தாள்.

அன்று பௌர்ணமி நன்னாள். கீழ்த்திசை வானில் சந்தனக் கும்பம் போல் முகிழ்த்தெழுந்தது சந்திரபிம்பம்.



"நேற்று ஒரு படத்துக்குப் போயிருந்தேன். இரண்டு மனிதர்கள் ஒன்றரை மணி நேரம் ஒரு சிறுத்தையுடன் போராடுவதைக் காட்டுகிறார்கள்.... மகா பயங்கரம்!"

"ப்பூ! இது என்ன பயங்கரம்? நான் என் மனைவியோடு தனி ஆளாகவே ஒன்றரை வருஷங்கள் போராடிக்கொண்டு வருகிறேனே...."

சற்றைக்கு முன் இதே சாலையிலே, இனிய எண்ணங்களில் திளைத்துக் குதூகலமாகப் போன தேவகி இப்போது சோர்ந்து துவண்ட சூன்ய மனத்துடன் தளர்நடையிட்டு வந்து கொண்டிருந்தாள்.

மோகனின் வீட்டுக்கு அவள் ஏன் போனாள்? அபராஞ்சியம்மாளிடம் சொன்னது போல், 'சும்மா அவர்களைப் பார்க்கத்தான்' போனாளா?

மஞ்சள் நீராடி எழுந்த கன்னிப் பெண்ணைப் போல் சொர்ணச் சிரிப்பு சிரிக்கும் முழுமதியை ஏக்கத்துடன் ஏறிட்டு நோக்கினாள் தேவகி. இந்த இனிய பொன்னான நேரத்தை நேற்றிலிருந்து அவள் எத்தனை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தாள். இன்று மாலை நான்கு மணி முதலே தன்னை எழில் பொங்க அலங்கரித்துக் கொள்வதில் முனைந்திருந்த அவள், மணி ஆறு ஆனதோ இல்லையோ - வீட்டில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கூட மோகனசுந்தரத்தின் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாள்

'நாளை பௌர்ணமி தினம். விடிய விடியப் புல்லாங்குழல் வாசித்துக்கொண்டிருப்பேன். உனக்குச் சௌகர்யப்பட்டு வர முடிந்தால் வா. உன் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருப்பேன்.' — நேற்றிரவு மோகனசுந்தரம் சொல்லி விட்டுப் போன இந்தச் சொற்கள் இன்பநாதமாக அவள் செவிகளில் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்க, அந்த உணர்ச்சித் துடிப்புடன்தான் அவனுடைய வீடு நோக்கிச் சென்றாள்.

ஆனால் பாவம். அங்கே எவ்வளவு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது.

இந்த ஏமாற்றமும் வீண் அலைச்சலும் கூட அவளுக்குச் சோர்வு அளிக்கவில்லை. நேற்று வீட்டைவிட்டுப் போன மோகன் இன்னமும் திரும்பி வரவில்லை என்ற விஷயம்தான் அவள் மனத்தை வெகுவாக வருத்திப் பிழிந்தது. அவன் எங்கே போயிருப்பான்? என்ன ஆகியிருப்பான்? அவனுக்கு ஏதேனும் சங்கடம் நேர்ந்திருந்தால் அதற்குத் தானும் ஒரு வகையில் காரணமாகி விடுவோமோ என்று அவள் பெரிதும் பயந்து விட்டாள் இந்தப் பயம் வளர வளர, அவனைப் பற்றிய தகவலை எப்படியும் அறிந்துவிட வேண்டும் என்னும் துடிப்பு மிகுதியாயிற்று. அந்த விவரத்தையறியாமல் அவள் தன் வீட்டுக்குச் செல்லவே விரும்பவில்லை. எனவேதான் டாக்ஸியையோ, ரிக்ஷாவையோ, பஸ்ஸையோ எதிர்பார்க்காமல் கால் நடையாகவே நடந்து கொண்டிருக்கிறாள்.

ஆனால், இப்படியே நடந்து கொண்டிருந்தால் மட்டும் மோகனைப் பற்றிய தகவலை அறிந்து கொள்ள முடியுமா? எங்காவது சென்று யாரிடமாவது விசாரிக்க வேண்டும். எங்கே போவது? யாரிடம் விசாரிப்பது?

சட்டென்று அவளுக்கு விவேகானந்தனின் நினைவு வந்தது. இம்மாதிரி காரியங்களை அவன் மிகவும் சுறுசுறுப்பாக, மிகவும் திறமையாகச் செய்து முடிக்கக் கூடியவன் ஏனென்றால், ஊரிலுள்ள முக்கியஸ்தர்கள் அவ்வளவு பேரும் அவனுக்கு அறிமுகமானவர்கள். அவர்களுடைய அபிமானத்தையும் மதிப்பையும் பெற்றவன். இன்றில்லாவிட்டாலும் என்றைக்காவது ஒரு நாள் அவனுடைய தயவு வேண்டும் என்று அவர்களை எண்ண வைத்திருப்பவன். எனவே, அவன் முயன்றால் மோகனைப் பற்றிய விவரத்தை மிக எளிதில் கண்டுபிடித்து விடலாம். ஆனால், அவனிடம் போய் இந்த உதவியைக் கோர முடியுமா? அப்படிக் கோரினால், தினவெடுத்த தலையைக் கொள்ளிக் கட்டையால் சொறிந்து கொண்டது போலாகி விடுமே!

நேற்றிரவு நடந்த ஒரு கசப்பான சம்பவத்தை நோக்கித் தேவகியின் சிந்தனை திரும்பியது:

சங்கீத சபாவுக்குப் போவதாகச் சொல்லிச் சென்ற மோகனசுந்தரத்தையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டு நின்றிருந்த தேவகியை அவளது தந்தை சிவப்பிரகாசம் வந்து வீட்டுக்குள் அழைத்துச் சென்றார் அல்லவா? அப்போது விவேகானந்தனும்

# நீங்களே எங்களது கண்ணியமான விருந்தாளிகள்

பி. ஓ. ஏ. ஸி. காமட் ஜெட்-லைனரில் நீங்கள் ஏறின தருணத்திலிருந்தே நீங்கள் எங்களது கண்ணியமான விருந்தாளியாகிவிடுகிறீர்கள். எமது இந்திய ஹோஸ்டஸ் உங்களை ஆசார உபசாரத்துடன் வரவேற்று, பிரயாணத்தின்போது உங்களுக்கு வேண்டிய ஒவ்வொரு தேவைக்கும் கண்ணுங் கருத்துமாக வினயமுடன் பணியாற்றுவர். உயர்தர ஐரோப்பிய உணவுகளிலும், முன்னறிவிப்பினால் தயாரிக்கப்படும் பலவகை இந்திய மரக்கறி உணவுகளிலும் உங்களுக்கு எது வேண்டுமோ அதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஒரே ஒரு தடவை பி. ஓ. ஏ. ஸி. காமட்டில் செல்லுங்கள்... அதன் சொகுசான சௌகரியத்தையும், வினயமுடன் அளிக்கப்படும் உயர்தர சேவையையும் நீங்கள் என்றுமே மறக்கமாட்டீர்கள்.

**B·O·A·C** பி. ஓ. ஏ. ஸி. உங்களை நன்கு பேணுகிறது.



பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏயர்வேய்ஸ் கார்ப்பரேஷன், ஏயர்-இந்தியா மற்றும் குவான்டாஸ் இவர்கள் கூட்டுறவால் நடத்தப்படுகிறது

அவர்களுடன் போய்க் கூடத்தறையில் உட்கார்ந்து, தன் தேர்தல் சம்பந்தமான விஷயங்கள்பற்றிச் சிவப்பிரகாசத்துடன் வெகுநேரம் வரை பேசிக் கொண்டிருந்தான். இடையிடையே தேவகியோடும் கலகலப்பாகப் பேசினான். அவள்மீது அவன் எவ்வித வருத்தமும் கொண்டிருக்கவில்லை என்பது அவனுடைய பேச்சிலிருந்து தெளிவாகியது. பரங்கி மலையில் தேவகியையும் மோகனையும் தனியே பார்த்ததைக்கூட அவன் தவறாகப் பொருள் கொண்டு விடவில்லை என்பதும் தெற்றெனப் புலனாகியது. அவனுடைய அந்தப் பரந்த மனப்பான்மையை அறிந்து உள்ளூற வியந்து கொண்டாள் தேவகி. ஆனால், அச்சமயம் அவளது மனம், மோகன் தனியே போயிருப்பதைப் பற்றி எண்ணிப் பெரிதும் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததால் அவர்களிடையே உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க இயலாமல் எழுந்து மாடிக்குப் போய் விட்டாள்.



அவள் போன சற்று நேரம் கழித்துச் சிவப்பிரகாசமும் மாடிக்கு வந்தார். விவேகானந்தனைக் கூடத்தறையில் உட்கார வைத்து விட்டுத்தான் அவர் மேலே வந்தார். தமது மானேஜரின் மகனுக்கு நடந்த கல்யாண வைபவத்தைப் பற்றிப் பேச்சை ஆரம்பித்து, பிறகு விவேகானந்தனின் சிறந்த குணங்களையும் அவனுடைய செயல் திறனையும் வெகுவாகப் புகழ்ந்து பேசுவதில் திரும்பி, இறுதியில், "இப்போதாவது சொல், மகளே! விவேகானந்தனைச் செய்து கொள்வதாகச் சொல்லி என் வயிற்றில் பாலை வார்க்க மாட்டாயா? உன்மீது அவன் அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறான். உன் மனம் கோணாமல் நடந்து கொள்வதாகவும் வாக்களிக்கிறான்!" என்று கெஞ்சுவதில் வந்து நின்றார்.

தேவகியின் மனம் இருதலைக்கொள்ளி எறும்பின் நிலையில் தத்தளித்தது. நீண்ட நேர மௌனத்துக்குப் பின் அவள் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய், "அப்பா! அன்றொரு நாள் இதுபற்றி என் சம்மதத்தை அளிக்காத காரணம் வேறு; இன்று என் விருப்பத்தைத் தர விரும்பாத காரணம் வேறு. ஆனால் இவ்விரண்டு காரணங்களும் இனி எவ்வரையில் மாறாது. இதற்குமேல் தயவுசெய்து என்னை வற்புறுத்தாமல் விட்டு விடுங்கள்!" என்று கூறினாள் உறுதி நிறைந்த குரலில்.

என்றைக்குமில்லாத விதமாகச் சிவப்பிரகாசத்துக்குக் கோபம் குமுறிப் பொங்கியது. வாய்ப்பேச்சில் எதுவுமே சொல்லாமல் விருட்டென்று கீழே இறங்கிப் போய் விட்டார்.

அவர் போன சிறிது நேரத்துக்கெல்லாம், வாசலில் நின்றிருந்த அந்தச் சிறிய கறுப்பு நிறக் கார் உறுமும் சத்தம் கேட்டது. தேவகி எழுந்து போய் ஜன்னல் திரையை மெல்ல விலக்கி விட்டுப் பார்த்தாள். அந்தக் கார் மீண்டும் மீண்டும் உறுமலிட்டதே தவிர அப்படியிப்படி நகரவில்லை. காரிலிருந்து இறங்கிய விவேகானந்தன், அருகில் நின்ற தாணுப்பிள்ளையிடம் ஏதோ சொல்லி விட்டு அங்கிருந்து கால்நடையாகவே வெளியே சென்றான். அவனுடைய இந்த நடையில்தான் என்ன தளர்ச்சி! எவ்வளவு தள்ளாடல்!

தேவகிக்கு இதெல்லாம் ஒரு பெரிய விஷயமாகத் தோன்றவில்லை. சிவப்பிரகாசத்தின் வேண்டுகோளையும், அதற்கு அவள் பதிலையும்கூட அந்த வினாடியே அலட்சியப்படுத்தி மறந்து விட்டாள். அவளுடைய எண்ணம்முழுதும் மோகனசுந்தரத்தின்மீதே படர்ந்து கிடந்தது.

தேவகி மட்டும் அன்றிரவு உணவு உண்டாள். சிவப்பிரகாசம் சாப்பிட வரவில்லை. அவர் தம் அறையிலேயே உலாவிக் கொண்டிருந்தார். தேவகி பலமுறை அழைத்தும் அவர் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. செல்லப் பிள்ளையான தேவகிக்கும் தந்தையின் மீது கோபம் வந்து விட்டது. அவள் முகத்தை முறுக்கிக் கொண்டு மாடிக்குப் போய் விட்டாள்.

மறுநாள் பொழுது விடிந்த பின்னும் சிவப்பிரகாசம் தம் மகளிடம் ஒன்றுமே பேசவில்லை. வழக்கத்துக்கு முன்னதாகவே கம்பெனிக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். அன்று பகல் உணவுக்கும் அவர் வரவில்லை. இதனால் அந்த வீடு ஒருவித பயங்கர அமைதியில் ஆழ்ந்து கிடந்தது. ஆனால், தேவகி இதனாலெல்லாம் எவ்விதக் கவலையும் அடைந்தவளாகத் தோன்றவில்லை. அவள் எப்போதும் போல் மகிழ்ச்சி

யுடன்தான் இருந்தாள். இன்னும் சொல்லப்போனால் இன்று அவள் இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் காணப்பட்டாள். இத்தகைய மனநிலையைக் கண்டு அவளே சில சமயம் வியந்தும் கொண்டாள். தன் நெஞ்சின் நெகிழ்ச்சியும், அதிலெழும் நெருக்கும் ஒரு புதுவித உணர்ச்சிக் குமிழ்களும் அவளுக்கு மிகமிகப் புதுமையாய்த் தோன்றின. இம்மாதிரியான ஒரு விசித்திர அநுபவத்தை இதற்கு முன் அவள் அறிந்துணர்ந்ததே இல்லையாதலால் சில சமயம் உள்ளூறப் பயந்தும் விட்டாள். ஆனால், அடுத்த கணமே அந்தப் பயம், ஏதோ ஓர் இனம் புரியாத இனிய மகரந்தத் தூள் திரையால் மூடப் பெற்று மறைவதையும் உணர்ந்தாள். எப்போதோ, எந்தக் காலத்திலோ எந்த ஜன்மத்திலோ தன்னுள் தானாகவே ஜனித்துத் தனக்குத் தெரியாமலே வளர்ந்த ஏதோ ஒரு மாயசக்தி திடீரென்று வெளிப்பட்டு, கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஓர் இலக்கை நோக்கிப் பாய்வது போலவும், அதிலே பிணைப்புண்டதாலும் அதைப் பின்தொடர்ந்து ஓடுவது போலவும் ஆன ஒரு விநோதப் பிரமையால் அவளது உள்ளமும் உடலும் ஒரேயடியாகப் பசபசத்து நொய்ந்தன.



"நீர் வாதியுடைய முப்பத்திரண்டு பற்களையும் உடைத்தது உண்மைதானே?"

"இல்லவே யில்லை. அவர் வாயிலிருந்ததே பதினெட்டு பற்கள்தான். அதைத்தான் உடைத்தேன்."

"ஏன் அப்படிச் செய்தீர்?"

"அப்பொழுதுதானே அவர் என்னிடம் ஆர்டர் கொடுத்த ஒரு செட் பொய்ப் பல்லையும் வாங்குவார்!"

மாலை மணி ஆறாகியது. இன்ப அலை பாயும் நெஞ்சத்துடன் மோகனசுந்தரத்தின் வீட்டுக்குப் புறப்பட்டாள். இந்தச் சமயம், கம்பெனியிலிருந்து வந்த டிரைவர், இன்றிரவு சிவப்பிரகாசம் ஏதோ முக்கிய வேலையிருப்பதால் வீட்டுக்கு வரமுடியாதெனச் சொல்லியனுப்பியதாகச் சொன்னான். இதைக் கேட்ட தேவகியின் மனம் துணுக்குற்றது. தன் மீதுள்ள கோபத்தினாலேயே அவர் இப்படிச் செய்கிறார் என்று அவளுக்குத் தோன்றியது. இந்நிலையில், தான் மோகனின் வீட்டுக்குச் செல்வது சரியாகுமா என்று ஒரு கணம் தயங்கினாள். ஆனால் மறுகணமே அந்தத் தயக்கம் தகர்ந்தது. யோசனைக்கே இடம் வைத்துக் கொள்ளாமல் புறப்பட்டு விட்டாள் அவள்.

இவைதாம் நேற்றும் இன்றும் நடந்த சம்பவங்கள். இந்நிலையில், இப்போது மோகனைப் பற்றிய விவரம் அறிய விவேகானந்தனின் உதவியை எப்படி நாடுவது?.....ஆனாலும், ஒரு நைப்பாசை. தேவகியே நேரில் சென்று கேட்டால் அவன் முடியாதென்று மறுத்து விடுவான்? அவளுக்காக அவன் எதையும் செய்யத் தயாராகவே இருப்பான். ஆனால்...ஆனால்...? அவனுடைய இருப்பிடம் தேவகிக்குத் தெரியாதே! அவன் வீட்டு விலாசத்தை யாரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வது?

**கா**ல் போன போக்கில் நடந்து கொண்டிருந்த தேவகி ஏதோ ஒன்றால் பலமாகத் தடுத்து நிறுத்தப்பட்டவள்போல் திடுக்கிட்டு நின்று பரபரப்புடன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தாள்.

ஆகா! அது என்ன ஒலி? மோகனசுந்தரத்தின் முரளீகானமல்லவா அது? ஆமாம்; அதில் என்னளவும் சந்தேகமேயில்லை!

பெரு வியப்பாலும் பெரு மகிழ்ச்சியாலும் திணறித் திமிறிய தேவகி, தான் எங்கு வந்திருக்கிறோம் என்பதை அறிய அங்குமிங்குமாகத் திரும்பிப் பார்த்தாள். அது அவளுக்கு முற்றிலும் புதிய ஓர் இடமாகத் தென்பட்டது. இதற்குமுன் இங்கே, இந்தத் தெருவழியே அவள் வந்ததே இல்லை. மேலும், அது புதிதாக உருவாகிக் கொண்டிருக்கும் ஒரு புதிய குடியிருப்பு ஸ்தலமாகக் காணப்பட்டது. இப்படிப்பட்ட ஓர் இடத்துக்குத்தான் எப்படி வந்து சேர்ந்தோம் என்ற வியப்பில் மூழ்கி நின்ற அவள், தன் செவிப் புலனைக் கூர்மையாக்கி, அந்தப் புல்லாங்குழல் இசை எங்கிருந்து வருகிறது என்பதைக் கூர்ந்து கவனித்தாள்.

அதோ பொட்டல்வெளியான ஓரிடத்தில் புதிதாகக் கட்டப் பெற்ற ஒரு மொட்டைமாடி வீடு தெரிகிறது. அந்த வீட்டுக்கு இன்னும் சிமிண்டுப் பூச்சு செய்யப் பெறவில்லை. அரைகுறையான கட்டுமானத்தில் அது நிற்கிறது. அங்கு செல்லப் பாதை வசதியும் இல்லை. கரடுமுரடான ஒரு கொடிவழி மட்டும் தென்படுகிறது. மின்சார இணைப்பும் எடுக்கப் பெறவில்லை. வீட்டின் எங்கோ ஒரு மூலையில் எண்ணெய் விளக்கு மினுக்

மினுக்கென்று எரிவது இலேசாகத் தெரிகிறது. இத்தகைய ஓர் அச்சந்தன்மையுடன் தோன்றும் அவ் வீட்டினுள்ளிருந்தல்லவா மனோகரமயமான குழல் கானம் பொங்கிப் பிரவகித்துக் கொண்டிருக்கிறது! திகைத்து நின்ற தேவகி தன் நெஞ்சின் துடிப்பை யெல்லாம் அடக்கிக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தவாறு அந்த வீட்டை நோக்கி மெள்ள நடந்து சென்றாள்.

## அத்தியாயம் இருபத்தாறு

ஜன சந்தடியற்று வெறிச்சோடிக் கிடந்த அந்தப் புதிய நகர்ப் பிரதேசத்தில்—வேறு எவ்வித ஒலிகளின் குறுக்கீடுமற்ற நிசப்தச் சூழலில்—மோகனசுந்தரத்தின் புல்லாங்குழல் கானம் ஜீவனைத் தொட்டுப் பெருகிப் பேரொலியோடு மிதந்து கொண்டிருந்தது. அவனைத் தவிர வேறு யாரால் இத்தகைய இனிமையாக வாசிக்க இயலும்?....

செப்பனிடப் பெற்ற செம்மண் பாதையை விட்டு, காடு முரடான கொடி வழியில் திரும்பி நடக்க தேவகி, சட்டென்று ஏதோ சந்தேகம் எழவே தயங்கி நின்று அந்தக் குழல் கானத்தைக் கூர்ந்து கவனித்தாள்.

'உன்னமெனும் பொற்பாயில் ஒரு கோடி நன்முத்தைப் பரப்பி வைத்தே, கள்ளமிலா எண்ணக் கரங்களினால் ஒவ்வொன்றாய் எடுத்துக் கோத்தேன்...' தேவகியின் இந்தக் கவிதை இசைத்தட்டில் பாடலாக மோகனசுந்தரம் வாசித்துக் கொடுத்ததல்லவா? அப்படியானால் அவ்வீட்டினுள்ளோர் அந்த இசைத்தட்டைக் கிராமபோனில் இசைக்கச் செய்து கேட்டுக் கொண்டிருக்கிறார்களோ?

தேவகியின் மனம் ஒரேயடியாகத் தோய்ந்து துவண்டது. தன்னுடைய அறியாமையை எண்ணி வருந்திய அவள் பெருத்த ஏமாற்றத்துடன் அங்கிருந்து திரும்பிச் செல்வதற்காகக் கால்களைப் பெயர்த்தாள்.

அடுத்த கணம் அந்தப் பழைய பாடல் ஓய்ந்து மற்றொரு பாடல் உயிர்ப்பது கேட்டது: 'வண்ண மூலையன்னிக் கொண்டையிட்டு, வாடிச் சிவந்த கதிர்ச் சூரியனைக் கிள்ளி மலரெனவே சூடி...' நேற்று மாலை பரங்கிமலைச் சாரலிலே தேவகியும் மோகனும் சேர்ந்து இசைக் கோலம் போட்ட இனிய பாடலல்லவா இது? இந்தப் பாடல் இவ்விரண்டு பேருக்கு மட்டும்தானே தெரியும்? அப்படியானால் அவ்வீட்டினுள்ளிருந்து குழல் வாசிப்பவன் மோகனசுந்தரம்தானோ?

வியப்பு, மகிழ்ச்சி பயம் ஆகிய மூவுணர்ச்சிகளும் நெஞ்சில் மோத ஏதோ ஆவேசத் துணிவு பெற்றவளாய் அந்த வீட்டை நோக்கி விரைந்தாள் தேவகி.

வீட்டின் கதவு உட்பக்கம் தாழிடப் பட்டிருந்தது. வாசலில் தயங்கி நின்ற தேவகி, கதவைத் தட்டலாமா என்று ஒரு கணம் சிந்தித்தாள். அப்படிச் செய்ய ஏனோ அவள் மனம் மறுத்தது. மனிதர் குடியிருக்கும் வீடாகவே அது தோன்றுவதால் அம்மாதிரித் தயக்கம் அவளுக்கு ஏற்பட்டது. ஓசையின்றிப் பின்னால் நகர்ந்து வலப் பக்கமிருந்த ஒரு ஜன்னலருகில் போய்க் குதிகாலை உயர்த்தி உள்ளே எட்டிப் பார்த்தாள்.

பாழடைந்த மாதிரி அருவருப்பாய்க் காட்சியளித்த அந்த அறையின் ஒரு மூலையில், காடா விளக்கொன்று புகை பரப்பி மினுக்கிக் கொண்டிருந்தது. அந்த விளக்கடியில் மூன்று ஆடவர்களும் ஒரு பெண்ணும் உட்கார்ந்திருந்தனர். அந்த ஆடவர்களின் முகத் தோற்றத்தைப் பார்க்க மிகவும் பயங்கரமாக இருந்தது. ஆனால் அந்தப் பெண் மிகவும் அழகாகக் காட்சியளித்தாள். முகம் நிறையப் பவுடரும் தலை நிறையப் பூவுமாகச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"இங்கே பாரு பொன்னம்மா! அந்த ஆசாமி நல்ல பசையுள்ளவன் போல் இருக்கு. கையிலே வைர மோதிரம். கழுத்திலே தங்கச் சங்கிலி. ஜேபியிலே நிறைய நோட்டுக் கத்தையும் இருக்கு. ஆனால். ஆளு கொஞ்சம் 'ஜால்' போலத் தோணுது. திருமூர்த்தி நகரிலே எதுக்காகவோ வட்டமிட்டுக்கிட்டு இருந்தான். நைஸா பேச்சுக் கொடுத்து இங்கே தள்ளியாந்துட்டேன். இனிமேல் உன் சாமர்த்தியத்தைக் காட்ட வேண்டியதுதான். என்ன, தெரிஞ்சுதா?" என்றான் மூவரில் ஒருவன்.

"கவலைப்படாதே, அண்ணே! இன்னைக்கு நாம் நரி முகத்திலே முழிச்சிருக்கோம்!" என்று நெளிந்து குலுங்கிச் சிரித்து அந்தப் பெண் அங்கிருந்து எழுந்து உட்பக்கமிருந்த மாடிப்படிகளில் ஏறிச் சென்றாள்.

ஜன்னலுக்கு வெளியே நின்ற தேவகி பேரதிர்ச்சியுடன் பின்னால் நகர்ந்தாள். அடக்க முடியாத பயத்தால் அவள் உடலும் உள்ளமும் கிடுகிடுவென நடுங்கின. அங்கிருந்து ஓடிவிட வேண்டுமென்று பரபரத்தாள்.

ஆனால்......ஆனால்...அந்த ஜீவானந்த வேணுகானம்!...அது ஒரு மந்திர கவசமாக அவளைப் பிணைத்து இழுக்கிறதே!...

ஓடவும் முடியாமல் நிற்கவும் மாட்டாமல் தத்தளித்த தேவகி, அந்த அமுத ரஸ குழல் நாதம் அவ்வீட்டின் எந்த அறையிலிருந்து எழுகிறது என்பதை அறிய முயன்றாள். மோகனசுந்தரம் எங்கே? அவன் எங்கு உட்கார்ந்து குழல் வாசிக்கிறான்?

இன்னொலி கானம் வந்த திசை நோக்கித் தலை நிமிர்ந்தாள் தேவகி. அதோ, மொட்டை மாடியின் கைப்பிடிச் சுவரின்மேல் ஓர் உருவம் உட்கார்ந்திருப்பது நிலவொளியில் இலேசாகத் தெரிகிறது! யார் அந்த உருவம்?

அலை பாயும் மனத்துடன் அங்குமிங்குமாக ஓடி அண்ணாந்து பார்த்தாள் தேவகி. வீட்டின் பக்கவாட்டில் வளர்ந்து நின்ற ஒரு கொடுக்காய்ப்புளி மரம் அவ்வுருவை மறைத்தது. தேவகி இன்னும் பின்னால் போய் அண்ணாந்து பார்த்தாள். அப்போதும் தெரியவில்லை.

என்ன செய்வதென்று தோன்றாமல் கைகளைப் பிசைந்து கொண்டு சுற்று முற்றும் நோக்கினாள் தேவகி. அதோ, ஒரு வீடு தனியே நிற்கிறது. இந்த வீட்டின் வலப்பக்கச் சாரியில் அது இருக்கிறது. அதுவும் மொட்டை மாடிவீடு தான். ஆனால், சுத்தமாக வெள்ளையடிக்கப் பெற்று அழகாகக் காட்சியளிக்கிறது. அவ்வீட்டில் யாரும் குடியிருப்பதாகத் தெரியவில்லை. ஜன்னல், கதவுகளெல்லாம் சாத்தப் பெற்று இருண்டு கிடக்கிறது. அதன் இடப்பக்க வெளிச் சுவரை ஒட்டினாற்போல, மொட்டை மாடிக்குச் செல்ல, ஒரு குறுகலான படிக்கட்டு அமைந்திருக்கிறது.

இதையெல்லாம் பார்த்த தேவகியின் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது: 'யாரும் குடியிராமல் இருண்டு கிடக்கும் அந்த வீட்டின் மொட்டை மாடிக்கு ஏறிச் சென்று, இங்கே இவ்வீட்டின் மாடியில் உட்கார்ந்திருப்பது யாரென்று பார்க்கலாமா? அங்கிருந்து பார்த்தால் நிலவொளியின் துணைகொண்டு தெளிவாகக் கண்டு பிடித்து விடலாம்.'

மறுசிந்தனைக்கே இடம் தராமல், மளமளவென அவ்வீட்டை நோக்கி விரைந்த தேவகி, ஏதோ ஓர் ஆவேசத்தால் உந்தப் பெற்றவள் போல், குறுகலான மாடிப் படிக்கட்டுகளில் தாவிப் பாய்ந்து சென்று ஏறினாள்.

அதேசமயம், அந்த வீட்டின் எதிரே ஒரு டாக்ஸி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு வாலிபன் இறங்கினான்.

யார் அந்த வாலிபன்? சந்தேகமில்லை; விவேகானந்தன்தான்! சோர்ந்து களைத்திருந்த அவன் தளர்நடையிட்டு நடந்து போய் வீட்டின் கதவைத் திறந்து மின்விளக்கைத் தட்டினான்! **(தொடரும்)**

# கனம் அல்சேஷனர்!

ஏ. எஸ். சுந்தரராஜன்

## காட்சி 1

[ஏகாம்பரம் ஆபீஸிலிருந்து களைப்புடன் வருகிறான். வீட்டுக்குள் நுழையப் போன அவனை வாசலில் கட்டியிருந்த ஓர் அல்சேஷன் நாயின் உறுமல் தடுத்து நிறுத்துகிறது.]

**ஏகாம்பரம் :** (வியப்புடன்) ஹா! நான் காண்பது கனவா? அல்சேஷன் வளர்க்கும் அளவுக்கு என் அந்தஸ்து திடீரென்று ராக்கெட்டில் தொத்திக் கொண்டு உயர்ந்து விட்டதா? அல்லது நான்தான் வழி தவறி டாராவது ஒரு சினிமா நடிகையின் வீட்டுக்கு வந்துவிட்டேனா...?

**தேவகி :** (வெளியில் வந்து) சந்தேகமே வேண்டாம். இது நம்ம வீடேதான்.

**ஏகாம் :** தேவகி! ஏது இந்த நாய்? ஆறு மாதங்களாக 'ஸ்கூட்டர்' வாங்கித் தரு கிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்து விட்டு, கடைசியில் உன் அப்பா இந்த நாயை வாங்கி அனுப்பிவிட்டாரா என்ன?

**தேவகி :** ஆமா. எதற்கெடுத்தாலும் என் அப்பாவைத் தாக்குவதுதான் உங்களுக்கு வேலை. அவர்தானே இளிச்சவர்? (கண்ணைக் கசக்குகிறாள்.)

**ஏகாம் :** யாரு சொன்னது? நான்தான் இளிச்சவன். உன் அப்பா தூக்கி எழுபது பவுண்டு. நான் தூக்கிப் பதினெட்டுத்தானே!

**தேவகி :** உம். கேலிப் பேச்சில் ஒண்ணும் குறைச்சல் இல்லே.

**ஏகாம் :** அம்மா, மகராஜி! ஆயிரம் மைலுக்கு அப்பால் இருக்கும் உன் அப்பாவை நான் என்ன தொலை தூரக் குண்டு விட்டா தாக்கி விட்டேன்? ஒரு பேச்சுக்காகக் கேட்டேன், இந்த நாயை உன் அப்பா அனுப்பி வைத்தாரான்னு....

**தேவகி :** அதற்காக நான் ஒண்ணும் கண்ணைக் கசக்கல்லே. கண்ணிலே தூசு விழுந்த மாதிரி இருந்தது.

**ஏகாம் :** ஓஹோ... அப்போ இந்த நாய் ஹிஸ்டரி'?

**தேவகி :** அடடே... இன்னும் அதை உங்களிடம் சொல்லவில்லையா? என் சிநேகிதி ரோஸியோட நாய் இது. அவளும் அவள் புருஷனும் பம்பாய் போயிருக்காங்க. ஒரு வாரத்தில் திரும்பி விடுவாங்க... அதுவரைக் கும் இந்த நாய் நம் விருந்தினராக இருக்கும்.

**ஏகாம் :** இதோ பார் தேவகி! விருந் தினர் நாயாய் இருந்தாலும் சரி, நரனாய் இருந்தாலும் சரி, ஒரு வாரம் வைத்திருக்க நம்ப குடும்பப் 'பட்ஜெட்' இடம் கொடுக்குமா? அதை முதலில் நீ யோசித் துப் பார்த்தாயா?

**தேவகி :** அந்தப் பயம் உங்களுக்கு வேண்டாம். ரோஸி செலவுக்குக் கொஞ்சம் பணமும், பிஸ்கட்டும் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறாள்.

**ஏகாம் :** ஓ! பணத்தோடு வந்த விருந் தினரா? அப்படியானால் நம் கவலை விட்டது. கனம் அல்சேஷனர் அவர்களே! உங்கள் வரவு நல்வரவாகுக!

**தேவகி :** என்னங்க! நாய் எப்படி, அழகா யில்லே ....?

**ஏகாம் :** ரொம்ப அழகாயிருக்கு. மொழு மொழுன்னு சும்மா கழுதைக் குட்டி மாதிரி—



பாரேன். வாலைகூட டிப்ஷத்துக்கு மூணு தடவைதானே ஆட்டுது.

**தேவகி :** சரி, சரி. உள்ளே வாங்க. காப்பியைக் குடித்துவிட்டு அப்புறம் உங்க வால் ஆராய்ச்சியைத் தொடரலாம். (இருவரும் உள்ளே போகிறார்கள்)

**ஏகாம் :** நாய்க்கு காப்பி கொடுத்தாயா, தேவகி?

**தேவகி:** சரிதான். காப்பி குடிக்கும் நாயா அது?

**ஏகாம்:** ஏன், காப்பி குடிக்காதா? பின்னே என்ன குடிக்கும்?

**தேவகி:** சூப்தான் குடிக்குமாம்.

**ஏகாம்:** கர்மம், கர்மம். மாமிசம் தின்னும் நாய் இது. நாம் சைவமாச்சே...?

**தேவகி:** அதனால் என்ன? ஒரு வேலைக்காரியை அமர்த்தித் தனியாகச் சமைக்கச் சொல்லி விடலாம்!

**ஏகாம்:** அவளுக்கு வேறே சம்பளம் கொடுத்தாகணுமே? (சற்று யோசித்து) இப்படிச் செய்தால் என்ன? இந்த நாயையே சைவமாக மாற்றிவிட்டால்?

**தேவகி:** ஆபத்து எனக்கில்லே. உங்களுக்குத்தான். இரண்டு வேளை அதுக்கு எலும்புத் துண்டு போடவில்லையானால் வெறி பிடிச்சு உங்க மேலேதான் பாயும். நீங்கதானே எலும்பா இருக்கீங்க....

**ஏகாம்:** ஓஹோ... அதுவும் ஆபத்தா.... சரி, சூப்புக் குடிக்கும் ஜீவாதார உரிமையை அது அனுபவிக்கட்டும் போகட்டும். ஆனால் நீமட்டும் அதுக்கு ஆகும் செலவுக்கு எல்லாம் ஒழுங்காகக் கணக்கு எழுதி வை.

**தேவகி:** கவலைப்படாதீங்க. கணக்குக்கு நான் ஆச்சு.

## காட்சி 2

[மறுநாள் காலை. ஏகாம்பரம் ஆபீசுக்குச் செல்லத் தன்னைத் தயார் செய்து கொண்டிருக்கிறான்.]

**ஏகாம்:** தேவகி! தேவகி! டிபன் தயாராச்சா? என்னடா இது. பதிலையே காணும். ஏய் தேவகி! எங்கே போயிட்டே?

**தேவகி:** (வந்துகொண்டே) இதோ வந்துவிட்டேன். நம்ம பிரான்டோவைக் குளிப்பாட்டிக்கிட்டிருந்தேன். ஏன் கூப்பிட்டீங்க?

**ஏகாம்:** (சற்றுக் கோபமாக) ஒரு நாயைக் குளிப்பாட்ட ஒரு மணி நேரமா?

**தேவகி:** ரெண்டு மணி நேரம்கூட ஆகும். இந்தப் பிரான்டோ எவ்வளவு சண்டித்தனம் பண்ணுது. தெரியுமா? அண்டா தண்ணி வேண்டாமாம். 'ஷவர்பாத்' கேட்குது.

**ஏகாம்:** கேட்கும். கேட்கும். ஷவர் பாத் கேட்கும். அப்புறம் குற்றாலத்து அருவியிலே தான் குளிப்பேன்னுகூடச் சொல்லும். நீயும் அதுக்கு ஏற்ற படி ஆடுவே.

**தேவகி:** என்னே என்ன பண்ணச் சொல்றீங்க?..... ரோனி கொடுத்த 'புரோகிராம்'படிதான் நான் நடக்கிறேன்.

**ஏகாம்:** அது என்ன புரோகிராம்?

**தேவகி:** ஓஹோ! இன்னும் அதை உங்ககிட்டம் சொல்லவில்லையா? கேட்டுக்குங்க. காலை எட்டு மணிக்குத் துயில் நீங்கல் - உடனே சூப் அருந்துதல் - ஒன்பது மணிக்கு நீராடப் போதல் - பத்தேகால் மணிக்கு பிஸ்கட் சாப்பிடுதல் - பத்தரை மணிக்கு ஆபீஸுக்குப் புறப்படுதல்....

**ஏகாம்:** யாரு... நாயா?

**தேவகி:** ஆமா. இன்னும் கேளுங்க. ஒரு மணிக்கு வீடு திரும்புதல். உடனே சாப்பாடு. மூணு மணிவரை தூக்கம். பிறகு பிஸ்கட்டும் வெண்ணெயும் சாப்பிடுதல். ஐந்து மணிக்கு பீச்சுக்குப் புறப்படுதல்...

**ஏகாம்:** போதும். போதும் நிறுத்து. இது என்ன சுத்தப் பைத்தியக்காரத்தனமா இருக்கு. கேவலம் ஒரு நாய்க்கு...

**தேவகி:** இந்தாங்க. கேவலம் நாய் தானென்னு மட்டும் சொல்லாதீங்க. பணக்காரங்க அப்படித்தான் நாய் வளர்ப்பாங்க.

**ஏகாம்:** அதிலும் குழந்தைகள் இல்லாத பணக்காரர் வீட்டில் வளரும் நாய்க்கு ராஜ யோகம்தான்னு சொல்லு.

**தேவகி:** சந்தேகம் என்ன?......ம்........ இந்தாங்க டிபன். சாப்பிட்டுவிட்டுப் பிரான்டோவை ஆபீசுக்கு அழைச்சுக்கிட்டுப்போங்க.

**ஏகாம்:** சரிதான். இதை ஆபீசுக்கு அழைச்சுக்கிட்டுப் போனால் நான் ஆபீஸ் வேலையா செய்ய முடியும்? உன் பிரான்டோ ஏனை கட்டித் தாலாட்டுப் பாடச்சொல்லுமே?

**தேவகி:** அதெல்லாம் ஒன்றும் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்காது. பிரான்டோ மகா சாது. டேய் பிரான்டோ! ஆபீசுக்குப் போய் வர்றியா? என்னங்க, பிரான்டோ தயார்!

**ஏகாம்:** இதோ நானும் ஆபீசுக்குப் புறப்பட்டு விட்டேன்...

**தேவகி:** என்ன, நடந்தா?

**ஏகாம்:** இது என்ன புதுக் கேள்வி? நடந்துபோகாமல் இத்தனை நாட்கள் பறந்தா நான் போனேன்?

**தேவகி:** அதுக்கு இல்லீங்க. பிரான்டோவுக்கு நடந்து ஆபீசுக்குப் போய்ப் பழக்கமில்லே. காரிலேதான் போகுமாம்.

**ஏகாம்:** என்ன?



**தேவகி:** நான் சொல்லவில்லை. ரோசி சொல்லிவிட்டுப் போனாள்.

**ஏகாம்:** சரிதான். இந்த நாய்க்காக இருபதாயிரம் ரூபாய் போட்டு என்னைக் கார் வாங்கச் சொல்றியா?

**தேவகி:** சொந்தமாகக் கார் வாங்கணுமா, என்ன? ஒண்ணரை ரூபாய்க்கு ஒரு டாக்ஸி கிடைக்காது?

**ஏகாம்:** ஏய். உனக்கு எப்படி இருக்கு! ஒரு காப்பி சாப்பிடக்கூடப் பையில் சில்லறை கிடைக்காது. நாய்க்கு டாக்ஸி வைக்கணுமாம் டாக்ஸி..

**தேவகி:** உங்களுக்கு எப்பொழுதும் பஞ்சம் தான். இந்தாங்க இரண்டு ரூபாய்!

**ஏகாம்:** கொண்டா, இப்படிப் பணத்தைக் கையிலே கொடுத்தால் டாக்ஸி என்ன ஏரோப்ளேன்லேகூட இந்த நாயை அழைச்சுக் கிட்டுப் போவேனே...

[நாயை இழுத்துக்கொண்டு போகிறான்]

## காட்சி 3

[ஐந்து நாட்களுக்குப் பிறகு ஏகாம்பரம் ஆபீசில் 'டைப்' அடித்துக் கொண்டிருக்கிறான். ஆபீஸ் பையன் கேசவன் வருகிறான்.]

**கேசவன்:** சார்! கிண்டிரேஸிலே குதிரைகளை மட்டும்தானே ஓட விடறாங்க. நாய்களுக்கும் பந்தயம் வைச்சா என்ன சார்?

**ஏகாம்:** நல்ல யோசனைதான். ரேஸ் கோர்ஸ் நிர்வாகிகளுக்கு எழுதிப் போடு.

**கேசவன்:** சார்! நாய்கள் ரேஸ் மட்டும் நடந்திருந்தால் எல்லாக் கோப்பைகளையும் நம்ப நாய் தட்டிக்கிட்டு வந்துடும் சார்.

**ஏகாம்:** நம்ப நாயா?

**கேசவன்:** அதாவது உங்க நாய். ஆ! என்ன ஓட்டம்! என்ன பாய்ச்சல்! டெரிபிள் ரன்னிங், ஸார்!

**ஏகாம்:** (பதறி) என்னது? நாய் ஓடிப் போயிட்டுதா? அடப் பாவி! ஏண்டா அதை அவிழ்த்து விட்டே?

**கேசவன்:** ஏன் சார், பதறுகிறீங்க? எங்கே ஓடப் போகுது? உங்க வீட்டுக்குத்தானே ஓடிப் போகும்?

**ஏகாம்:** ஐயோ! அதுக்கு வீடு தெரியாதுடா! அது புதுசு...

(ஏகாம்பரம் வெளியில் ஓடுகிறான்)

## காட்சி 4

(நடைபாதை. சோர்ந்த முகத்துடன் நடந்து வந்துகொண்டிருந்த ஏகாம்பரம் எதிரே வந்த ஒரு டாக்ஸியைக் கூப்பிட்டு நிறுத்துகிறான்.)

**ஏகாம்:** இந்தாப்பா, டாக்ஸி!

**டிரைவர்:** ஏறுங்க சார். உங்களுக்கு எங்கே போகணும்?

**ஏகாம்:** நான் போகிறது இருக்கட்டும். இன்னைக்கு உனக்கு நிறையச் சவாரி கிடைச்சுதா?

டிரைவர் : (திகைப்புடன்) கிடைச்சது. ஏன் கேட்கறீங்க?

ஏகாம் : சொல்றேன். எந்தெந்த இடங்களுக்குப் போனே...?

டிரைவர் : என்ன சார் இது? எங்க முதலாளி கூட இந்தக் கேள்வியைக் கேட்கப் பயப்படுவாரு...

ஏகாம் : கோவிச்சுக்காதேப்பா. எனக்கு ஒரு சின்னத் துப்பு கிடைக்கணும். அதுக்



காகக் கேட்டேன். நீ சவாரி போன இடங்களிலே, அல்லது ரோட்டிலே எங்கேயாவது ஓர் அல்சேஷன் நாயைப் பார்த்தாயா?

டிரைவர் : இல்லீங்க..

ஏகாம் : உம். நீ ரத்தினச் சுருக்கமா சொல்லிட்டே. நானும் ஒத்துக்கிட்டேன். இதேமாதிரி நான் சொன்னால் என் மனைவி கேட்க மாட்டாளே.....நானும் என்னால் முடிந்தவரையில் தேடிப் பார்த்து விட்டேன். இனிமேல் அந்த அல்சேஷனைத் தேட ஆயிரம் தலை படைச்ச ஆதிசேஷன் தான் வரணும்.

டிரைவர் : ஏன், சார்! உங்க நாயோட நிறம் என்ன?

ஏகாம் : உடல் கறுப்பு. காது. காலு. வாலு மூணும்—தப்பு தப்பு, ஏழும்—வெள்ளை!

டிரைவர் : ஆ...! கண்டு பிடிச்சுட்டேன்!

ஏகாம் : (ஆவலுடன்) எங்கே...எங்கே... சீக்கிரம் சொல்லு...!

டிரைவர் : சொல்லுகிறேன். நீங்க காரிலே ஏறுங்க!

ஏகாம் : என்னப்பா நீ! கண்டேன் சீதையைன்னு ராமர்கிட்டே அனுமன் சொன்னமாதிரி சொல்லி ஆவலைக் கிளப்பி விட்டுவிட்டு விவரம் சொல்லாம இருக்கியே?

(காரில் ஏறிக்கொள்கிறான். கார் போகிறது)

டிரைவர் : ஏன் சார், அவசரப்படறீங்க! கால் மணி நேரத்துக்கு முந்தி இந்த வழியாத் தான் ஓர் ஆசாமி உங்க நாயைப் பிடிச்சுக்கிட்டுப் போறான்.

ஏகாம் : நிஜமாகவா? நீ பார்த்தாயா?

டிரைவர் : இந்த ரெண்டு கண்ணாலும் பார்த்தேன். இன்னும் அந்த நிமிஷத்திலே நீங்களும் பார்க்கப் போறீங்க. அவன் எங்கே போனாலும் துரத்திப் பிடிச்சிட மாட்டேன்?

ஏகாம் : எங்கே பார்ப்போம், உன் சாமர்த்தியத்தை.

(கார் வேகமாகப் போகிறது)

டிரைவர் : ஆ...! அதோ போகிறான், பாருங்க!

ஏகாம் : ஆமாம். என்னுடைய நாயே தான்! சந்தேகமில்லே. விடாதே பிடி அந்த நாய்த் திருடனே.



(கார் ஒரு இழவனின் அருகில் வந்து நிற்கிறது)

இழவன் : ஐயா, ஐயா! வேகமா ஓடி வராதீங்க! நாய் பாய்ஞ்சுடும்!

ஏகாம் : நாய். எனக்கே பயங்காட்டறியா நீ. என் நாய் என் மேலேயே பாயுமா? பார்ப்போம். டேய் பிரான்போ, வா இங்கே...

இழவன் : அட, நாயோட பேரைக் கூடச் சொல்றீங்களே! யாரு நீங்க?

ஏகாம் : நானு...? இந்த நாயோட சொந்தக்காரன்.

இழவன் : நல்லா யிருக்கய்யா கதை. இந்தத் தந்திரமெல்லாம் என்கிட்டே பலிக்காது. எப்படியோ நாயோட பேரைத் தெரிஞ்சுக்கிட்டு வந்து நாயே உன்னதுங்கிறியே. நான் ஒண்ணும் ஏமாந்த சோணகிரி இல்லே.

ஏகாம் : இதோ பாரு, இழவா! தகராறு பண்ணாதே. நான் சுப்ரீம் கோர்ட் வரை போவேன். மரியாதையா நாயை என்னிடம் ஒப்படைச்சுடு.

இழவன் : முடியாது, ஐயா! இது எங்க எசமான் வீட்டு நாய்.

ஏகாம்: உங்க எசமான் வீட்டு நாய் எங்காவது குப்பைத் தொட்டியிலே தூங்கும். போய்த் தேடு. இது என் நாய்.

டிரைவர் : என்ன, சார்! ரெண்டு பேரும் இப்படி வாய்ச்சண்டை போட்டுக்கிட்டிருந்தால் முடிவுதான் என்ன?

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் | ஆறு மாதம் |
|---|---|---|
| | ரூ. ந.பை | ரூ. ந.பை |
| இந்தியா, இலங்கை | 15—00 | 7—50 |
| பர்மா, மலேயா, வெளி நாடுகள் | 18—00 | 9—00 |

தனிப் பிரதி விலை 30 நயா பைசா

சந்தா தொகை முன்னதாக அனுப்பப்பட வேண்டும். வி.பி.பி. கிடையாது. இலங்கை நேயர்கள் மட்டும் வி.பி.பி. மூலம் சந்தா தொகையைச் செலுத்தலாம்.

மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10


**ஏகாம் :** அப்போ கைச்சண்டை போடச் சொல்றியா?

**டிரைவர் :** எந்தச் சண்டையும் போட வேணும். நாய் அதன் உண்மையான சொந்தக்காரர்கிட்டே போய்ச்சேர நான் ஒரு வழி சொல்றேன்.

**கிழவன் :** சொல்லு. பொது மனுஷன் நீ. ஆண்டவனுக்குப் பொதுவாச் சொல்லு.

**டிரைவர் :** ரொம்பச் சாதாரணமான சோதனை. நாயைத் தனியா விட்டுடுங்க. தூரத்திலே இருந்து ரெண்டு பேரும் கூப்பிடுங்க. யார்கிட்டே நாய் வருகிறதோ, அவுங்களுக்கே நாய் சொந்தம். என்ன உங்களுக்குச் சம்மதம்தானா?

**கிழவன் :** சம்மதம்.

**ஏகாம் :** எனக்கும் சம்மதம்.

**கிழவன் :** பிரான்டோ! இங்கேயே நில்லு. பாருய்யா என்னைப் பார்த்து வாலை ஆட்டுது.

**ஏகாம் :** உன்னைப் பார்த்து வாலைத்தானே ஆட்டுது... என்னைப் பார்த்து அது தலையையே ஆட்டுது பார். நாயின் இரண்டே முக்கால் அடி உடம்புக்கும் தலையே பிரதானம். அதனாலே...

**கிழவன் :** இல்லே, இல்லே! வால்தான் பிரதானம். அதனாலே...

**டிரைவர்:** இப்படி ரகளை பண்ணக்கூடாது. எங்கே இரண்டு பேரும் பத்து அடி தூரம் தள்ளி நில்லுங்க. ம்...இப்போ கூப்பிடுங்க.

**கிழவன் :** பிரான்டோ! வாடா கண்ணு!

**ஏகாம் :** ஹலோ பிரான்டோ!

**கிழவன் :** என் ராஜா என்கிட்டேதான் வருவான்.

**ஏகாம் :** வா பிரான்டோ. என்கிட்டே வா. நான் பிஸ்கட் தரேன்.

**கிழவன் :** என்கிட்டே வா கண்ணு. நான் சூப்பு தரேன்.

**ஏகாம் :** பிரான்டோ! நான் ஒரு பெரிய கூட்டம் நடத்தி அதிலே உனக்குப் பொன்னாடை போர்த்தறேன். வா. இந்தப் பக்கம்.

**கிழவன் :** பொன்னாடை நமக்கு எதுக்கு பிரான்டோ? பகட்டு வார்த்தையை நம்பாதே. வா... (நாய் கிழவனிடம் போகிறது)

**ஏகாம் :** சே! நன்றி கெட்ட நாய்!

**கிழவன் :** இல்லே. சொந்தக்காரங்ககிட்டே நன்றியுள்ள நாய். இன்னும் ஏனய்யா நிக்கிறே? வந்த வழியே போய்ச் சேர்...

**டிரைவர்:** என்ன சார் இப்படி ஆயிட்டுது?

**ஏகாம்:** என்னால் நம்பவே முடியலே. அந்தக் கிழவன் ஏதோ மருந்து கொடுத்து மயக்கிட்டான். ஆமாம்! அப்படித்தான் இருக்கணும். உம்...சரி...காரை எடு. (கார் போகிறது)

## காட்சி 5

(ஏகாம்பரம் எரிச்சலுடன் முணு முணுத்தபடி வீட்டினுள் நுழைகிறான்.)

**ஏகாம் :** என்ன நன்றி கெட்ட உலகம். ஒரு பாக்கெட் பிஸ்கட்டும், ஆபீஸ் கான்டீனில் மூணு மசால் தோசையும் முழுங்கிட்டு நாய் கூப்பிட்டதற்கு வராமெ போயிட்டுதே?

**தேவகி :** என்ன....புலம்பிக் கொண்டே வர்றீங்க?

**ஏகாம் :** என்னத்தைச் சொல்ல? ஆபீஸிலிருந்து அந்த நாய் ஓடிப் போயிட்டுது. நானும் விடாமெ தேடி ஒரு வகையாக் கண்டுபிடிச்சேன். ஆனால்...

**தேவகி :** (குறுக்கிட்டு) ஒரு கிழவன் அதைத் தந்திரமாகக் கொண்டு போயிட்டான். சரிதானா?

**ஏகாம் :** உனக்கு எப்படித் தெரியும்?

**தேவகி :** ரோஸி இப்பொத்தான் இங்கே வந்து சொல்லிட்டுப் போறா. அந்தக் கிழவன் தான் ரோஸியோட வேலைக்காரனும். நாய் ரோட்டிலே ஓடி வந்ததும் பிடிச்சிக்கிட்டிருக்கான். நம்மிடம் நாயை ஒப்படைத்திருக்கும் விஷயம் அவனுக்குத் தெரியாது.

**ஏகாம் :** சரிதான். நான் அவனைத் திருடன்னு நினைக்க, அவன் என்னைக் கடத்தல்காரன்னு நினைச்சுட்டான் போலிருக்கு. நல்ல வேளை. எனக்கும் அவனுக்கும் ரோட்டிலேயே நாலு ரவுண்டு குத்துச் சண்டை நடந்திருக்கும். டாக்ஸி டிரைவர் காப்பாத்தினான். சரி. பிரச்னை தீர்ந்தது. இன்னும் ஒரே ஒரு வேலை பாக்கி. நாய்க்கு ஆன செலவு, நாயைத் தேடுவதற்கு ஆன செலவு எல்லாத்துக்கும் அயிட்டம் அயிட்டமா 'பில்' போட்டு ரோஸிகிட்டே பணம் வாங்கு.

**தேவகி:** பணம் வாங்குகிறதா? ரோஸிக்கே இன்னும் நாம் பணம் கொடுக்கணுமே?

**ஏகாம் :** ஏன்?

**தேவகி :** ரோஸி பம்பாயிலேயிருந்து வேறொரு நாய்க்குட்டி வாங்கிக்கொண்டு வந்துவிட்டாளாம். அதனாலே பிரான்டோவை விற்கப் போகிறேன்னு சொன்னாள். உங்களுக்குத்தான் தெரியுமே. பிரான்டோ மேலே நான் எவ்வளவு ஆசை வைச்சிருக்கேன்னு...? அதனாலே நானே வாங்கிக் கொண்டேன். இன்னும் நாற்பது ரூபாய்தான் அவளுக்குக் கொடுக்கணும். என் மேல் கோபமில்லையே? அடடே மணி ஏழு. பிரான்டோ ரேடியோ கேட்கிற நேரம்....ஹலோ பிரான்டோ!

(பக்கத்து அறையிலிருந்து நாய் ஓடி வருகிறது. ஏகாம்பரம் மயங்கி விழுகிறான்!)


Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.

# மேலான வாழ்க்கைக்கு மேன்மையான தயாரிப்புகள்

தரத்திலும் குறைந்த விலையிலும் பெயர்போன நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் இஷ்டம் போல் தேர்ந்தெடுத்துக் கொள்ள விதவிதமானவை கிடைக்கின்றன.

## நேஷனல் எக்கோ

### ரேடியோக்கள்



**நேஷனல்-எக்கோ மாடல் U-717:** 5 வால்வுகளும் 3 பாண்டுகளும்கொண்ட இந்த ஏஸி/டிஸி ரேடியோவில் பெரிய நேஷனல்-எக்கோ செட்டுகளில் உள்ள சௌகரியங்கள் அடங்கியுள்ளன. மான்ஸூனைஸ் செய்யப்பட்டது. ரூ. 250/- நெட்.



**நேஷனல்-எக்கோ மாடல் A-731:** இந்த "[illegible]" ரேடியோ, 7 வால்வுகளும் 8 பாண்டுகளும் கொண்ட சிறந்த ஏஸி செட். தெளிவாக ஒலியை கேட்கக்கூடியது. ஆர்.எப்.ஸ்டேஜுக்கு ட்யூன் செய்யப்பட்டது. வெளி லௌட் ஸ்பீக்கரும் கிராமபோன் பிக்கப்பும் இணைக்க வசதியுள்ளது. "மான்ஸூனைஸ்" செய்யப்பட்டது. ரூ. 625/- நெட்.






## க்ளியர்டோன் லாம்புகளும் உபகரணங்களும்



**க்ளியர்டோன் வாட்டர் பாயிலர்:** வெந்நீர் மற்றும் கொதிக்கும் ஜலம் வெகுசீக்கிரத்தில் தயார் செய்யக் கூடியது. அளவுகள்: 3.5 காலன் மற்றும் 8 காலன். ஏஸி கரண்டில் இயங்குகிறது.



**க்ளியர்டோன் வீட்டு இஸ்திரிப்பெட்டி:** 7 ராத்தல் எடை, 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ். ஏஸி/டிஸி பேக்லைட் பிடி. பிரத்தியேகமான பட்டன் குழிகள்.



**க்ளியர்டோன் பல்புகள் ப்ளோரஸெண்ட் ட்யூபுகள் மற்றும் உபகரணங்கள்:** சிக்கனமானவை; பிரகாசமான ஒளிகொடுக்கச் சிறந்தவை.



**க்ளியர்டோன் எலக்டிரிக் கெட்டில்:** மூன்று பைண்ட் பிடிக்கக் கூடியது. க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 230 வோல்ட்ஸ், 750 வாட்ஸ். ஏஸி/டிஸி.



**க்ளியர்டோன் ட்வின் ஹாட் ப்ளேட்டுகள்:** சமையலறைக்கு. இரண்டு ஹாட் ப்ளேட்டுகளுக்கும் தனித்தனி கண்ட்ரோல்கள் உள்ளன. 230 வோல்ட்ஸ். ஏஸி/டிஸி 3,500 வாட்ஸ்வரை மின்சாரப் பளுவைத் தாங்கக்கூடியது.



**க்ளியர்டோன் மடக்கு ஸ்டீல் நாற்காலிகளும் மேஜைகளும்:** விதவிதமான வர்ணங்களில் கிடைக்கும். மிருதுவான சுகத்தரும் அமைப்புடன் கூடிய நாற்காலிகள், மெத்தையுடனோ அல்லது இல்லாமலோ கிடைக்கும்.




ஜெனரல் ரேடியோ அண்டு அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிட்.
ஆபேரா ஹவுஸ், பம்பாய்-4 • 3 மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா-13 • ப்ரேஸர் ரோட், பாட்னா • 1/18, மவுண்ட் ரோட், மதராஸ்-2 • 36/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பெங்களூர் • ஜோர்க்தியன் காலனி, சாந்தினி சௌக், டெல்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இளஞ்சிவப்பு, உதயச் செவ் வானம்போலும்

இளஞ்சிவப்பு, புதுரோஜா இதழேபோலும்

# இளஞ்சிவப்பு




வண்ணமாய் வந்தபுதுமை

# ப்ரீஸ்

அழகுசாதன சோப்




நலமோங்கும்
மேனியெழிலுக்கு ப்ரீஸ்
இளஞ்சிவப்பு நிற
ப்ரீஸ்